# மனோஹரன்

நாடகப் பேராசிரியர் பம்மல்

சம்பந்தனார் அவர்களால் இயற்றப்பட்டது



ஒன்பதாவது பதிப்பு

1987



விலை ரூ. 15-00

எம் முன்னோர் ஆகிய

பம்மல் **விஜயரங்க முதலியார்,**

பம்மல் **மாணிக்கவேலு அம்மாள்**

இவர்களுக்கு இந்நூல் அர்ப்பணம்,



இந்நூல் ஒரு ''பம்மல் வீடு வெளியீடு''







பத்ம பூஷண்

திரு. பம்மல் சம்பந்த முதலியார்

( தமிழ் நாடகத் தந்தை )

**1873 - 1964**

''என்னைப் பெற்ற தாய் தந்தையன்றி
எனக்குப் பிறிதொரு தெய்வமில்லை''—

—மனோஹரன்.'



முன் பதிப்புகள் (முறையே) :- 1907, 1910, 1915, 1920, 1925, 1930, 1934, 1955.



# முன்னுரை

மனோஹரன், ப. சம்பந்தனார் இயற்றிய, பதிப்பித்த, ஆறாவது நாடகமாகும். 1895-இல் இயற்றப்பட்டது. 1907-இல் அச்சிடப்பட்டது முதல் முதலாக. அந்த சுருக்கப்படாத முதல் பதிப்பை யொட்டி, இந்த ஒன்பதாம் பதிப்பு வெளியிடப்படுகிறது.

இந் நாடகம் 1895-லிருந்து இந்நாள் வரை அனுமதியுடன் சுமார் 1750 முறை நடிக்கப்பட்டுள்ளது. திரைப்படமாகவும் வெற்றியுடன் வெளி வந்த அமர நாடகம் இது.

இன்றும் இம் மனோஹரன் படிப்பவர் மனதைக் கவர்வான் என்பதில் சந்தேகமில்லை.

"பம்மல் வீடு"
சென்னை-1.

ப. வரதராஜ்



# மனோஹரன்



## நாடகபாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| புருஷோத்தமன் | ... ... | சோழநாட்டரசன் |
| மனோஹரன் | ... | புருஷோத்தமன் புதல்வன் |
| சத்தியசீலர் | ... | சோழ தேசத்துப் பிரதானமந்திரி |
| ராஜப்பிரியன் | ... ... | மனோஹரன் தோழன் |
| பௌத்தாயனன் | ... ... | ஒரு மந்திரி |
| ரணவீரகேது | ... ... | சோழசேனாதிபதி |
| விகடன் | ... ... | அரண்மனை விதூஷகன் |
| அமிர்தகேசரி | ... ... | ஒரு வைத்தியன் |
| வசநதன் | ... ... | கேசரிவர்மனுக்கும் வசந்தசேனைக்கும் பிறந்தவன் |
| பத்மாவதி | ... ... | புருஷோத்தமன் பத்னி |
| விஜயா | ... ... | மனோஹரன் மனைவி |
| வசந்தசேனை | ... ... | அரண்மனை தாசி |
| நீலவேணி | ... ... | ஒரு தாதி. |

புருஷோத்தமன் குரு. சேனைவீரர்கள், சேவகர்கள், சோழபாண்டிய சைனியங்கள். கேசரிவர்மன் அருவம், தாதியர்.



கதை நிகழ் இடம்—சோழநாட்டிலும் அதன் அருகிலுள்ள பிரதேசத்திலும்.

# BIBLIOGRAPHICAL DATA

| | | | |
|---|---|---|---|
| 1 | Title of the book | : | MANOHARAN |
| 2 | Author | : | PAMMAL SAMBANDANAR |
| 3 | Edition | : | NINTH |
| 4 | Date of publication | : | 1987 |
| 5 | Copyright holder | : | PAMMAL VARADARAJ |
| 6 | Paper used | : | WHITE PRINTING |
| 7 | Size of the book | : | DEMY SIZE |
| 8 | Printing types used | : | 10 pt |
| 9 | Number of pages | : | |
| 10 | Number of copies | : | 1000 |
| 11 | Printers | : | S. DHANYAKUMAR PRESS,<br>MADRAS-17. |
| 12 | Binding | : | do |
| 13 | Price | : | |
| 14 | Publisher | : | PAMMAL VARADARAJ,<br>13, ACHARAPPAN STREET,<br>MADRAS-600 001. |
| 15 | Subject | : | DRAMA |
| 16 | Call Number | : | |

# மனோஹரன்



## முதல் அங்கம்



### முதல் காட்சி

இடம்: *அரண்மனையில் பத்மாவதிதேவியின் அறை, காலம் மாலை.*

*பத்மாவதிதேவி மஞ்சத்தின்மீது வீற்றிருக்க மனோஹரன் தன் தாயார் பாதத்தருகில் உட்கார்ந்திருக்கிறான். அருகில் தன் தாதி தாங்க விஜயா அமுதவண்ணம் நிற்கிறாள். நீலவேணி பத்மாவதிக்குப் பின்புறமாக நிற்கிறாள். சத்தியசீலரும் ராஜப் பிரியனும் ஒரு புறமாக நின்று மெல்லப் பேசிக்கொண்டிருக் கின்றனர்.*

பத்: கண்ணே, மனோஹரா, நமது படைகளெல்லாம் பாண்டிய நாட்டை நோக்கி எப்பொழுது புறப்படுவதாகக் கூறினை?

ம: அம்மணி, இன்றைத்தினம் முப்பது நாழிகைக்கெல்லாம் புறப்பட வேண்டுமென்று, நம் குலகுரு காலம் நிர்ணயித் திருக்கிறார்.

பத்: ஆனால் நான் உன்னைத் தாமதிக்கும்படி செய்யலாகாது, சீக்கிரம் புறப்படு. கண்ணே, சுத்த வீரனாகிய உனக்குப் பெண்பாலாகிய நான் என்ன உரைக்கக்கூடும்?

*ராகம் பியாகடை; தாளம் ஆதி.*

பல்லவி

*மனோஹராவுன் மகிமையறிந்தும்*
*மாதோ நான் எடுத்துரைப்பது.* (ம)

அநுபல்லவி

தன்னேரில்லா தயாளவீரா
தானவர் பணியும் சூரா (ம)

சரணம்

தஞ்சமென் றுனை தாவியடைந்தாரை
அஞ்சலெனவே நீ ஆதரிப்பாயே
பஞ்சையர் மீதும் பாவையர் மீதும்
பாணத்தை நீ என்றும் எய்யாதே. (ம)

ஆயினும் ஒன்று கூறுகிறேன், உடலபிமானம், உயிரபிமானம், உறவபிமானம் இம்மூன்றையும் நீத்துப் போர் புரியும் அமர்க்களத்தில், மானாபிமானமொன்றை மாத்திரம் மறவாதே; என்ன இடுக்கண் வந்து நேர்ந்த போதிலும் அதர்ம யுத்தம் புரியாதே பகைவரை வஞ்சித்துக் கொல்லாதே, உன் ஜன்ம (வீரோதியா) யிருந்த போதிலும் அமர்க்களத்தில் நிராயுதனாய் நின்றவன் மீதும், உன்னைத் தஞ்சமென்றடைந்தவன்மீதும், உனது பாணத்தைச் செலுத்தாதே. அப்படிப்பட்டவர்களை உன் உயிரையாவது கொடுத்துக் காப்பாற்று

சத் : [ஒரு புறமாக ராஜப்பிரியனுக்கு] என்ன மனவுறுதி! என்ன மனவுறுதி!

ரா : [ஒரு புறமாக சத்தியசீலருக்கு] அதிவீரசேரனுடைய மகளென்பதை மறந்தீரோ ?

ம : அம்மா, அப்படியே ஆகட்டும்.-இச்சிறந்த உடைவாளேது?

பத் : உன்னிடம் கொடுப்பதற்கே இதை எடுத்து வைத்தேன் இன்றைத்தினம். இது யாருடையது தெரியுமா உனக்கு? இது என் தந்தையாகிய அதிவீரசேர மஹாராஜனுடையது. அவர் முத்துவிஜயபாண்டியனது சூதால், தனது நாடு நகரமெல்லாம் இழந்து தெய்வாதீனத்தால் இறக்கும்படி நேரிட்டபொழுது, தன்னால் தன் பகையை முடிக்கக் கொடுத்துவைக்காமற் போனபோதிலும், தன் பேரனாகிய உன்னாலாவது தன் சபதம் முடியவேண்டுமெனக் கருதி நீ குழந்தையாய் இருந்தபொழுது இவ்வாளை என்னிடந் கொடுத்து உனக்கு வயது வந்தவுடன் இதை உன்னிடம் ஒப்புவிக்கும்படி கூறினார். கண்ணே,

மனோஹரா, உனது மூதாதையினுடைய சபதத்தை நிறை வேற்றுவையா?

ம : அம்மணி, அதை இன்னதென்று கூறும், ஒரு நொடியில் விடுகிறேன்.

பத் : அத்துஷ்டனாகிய முத்துவிஜயபாண்டியனது சென்னியை இவ்வுடைவாளால் சேதித்து, அவன் நம்மிடமிருந்து கவர்ந்த நாடு நகரம் முதலியவற்றையெல்லாம் மீட்க வேண்டும். கண்ணே, செய்வையா நீ, இதை?

ம : அம்மணி, உமதருளாலும், தெய்வகடாட்சத்தினாலும், எனது புஜபல பராக்கிரமத்தினாலும் அப்படியே செய் கிறேன்—இது சத்தியம்!

பத் : கண்ணே, இவ்வுடைவாளால் உன் பகைவரை யமனுல குக்கேற்றி, உனது சபதத்தை நிறைவேற்றி, உனது கீர்த்தி யையும் புகழையும் நிலைபெறச் செய்து, சீக்கிரம் உன் தந்தையும் நானும் மகிழும்படி வெற்றி வீரனாகத் திரும்பி வருவாய்!

[பத்மாவதி உடைவாளை மனோஹரன் கையில் கொடுக்கிறாள். அரண்மனைக்கு வெளியில் ஒருங்கு சேர்க்கப்பட்ட சைனி யங்கள் "ஜெய! ஜெய" என்று கோஷிக் கின்றன. [

ரா : அம்மா, நற்சகுனமும் நமக்கு வாய்த்தது. இளவரசர் அப் படியே வெற்றி பெற்று வருவார் என்பதற்குத் தடை யில்லை.

சத் : அதற்குச் சந்தேகமென்ன?

பத் : மனோஹரா, உனது பாட்டனாரும் முன்னோர்களும் உட்கார்ந்து அரசாட்சி செலுத்திய சிங்காதனம் பாண்டி யனது சபையிலிருக்கிறது. அதையும் எப்படியாவது மீட்டுக்கொண்டு வா. உனது பாட்டனார் அதை எனக்கு ஸ்திரீ தனமாகக் கொடுக்க எண்ணியிருந்தார்.

ம : அப்படியே ஆகட்டும், அம்மா, நான் விடைபெற்றுக் கொள்ளுகிறேன்—நேரமாகிறது.

ரா : ஆமாம், அம்மா, படைகளெல்லாம் அணி வகுத்து நிற்கின்றன—புறப்படும் லக்னம் வந்துவிட்டது

பத் : [தன் மகனைக் கட்டியணைத்து] கண்ணே, மனோஹரா, யுத்தமுனையிற் சென்று பகைவரை வென்று அழியாப் புகழுடன் சீக்கிரம் திரும்பிவருவாய்!—கண்ணே, என்ன முகம் திடீரென்று வாடியது? இந்த யுத்தத்திற்குச் செல்ல அஞ்சுகிறாயோ?

ம : அம்மணி, நானோ அஞ்சுவேன்? என்ன வார்த்தை சொன்னீர்! அப்படியொன்றுமில்லை; என்னையொத்த சுத்த வீரர்களுக்கு யுத்தத்தில் வெற்றி பெறுவதைவிட, வெற்றி பொருந்திய யுத்தத்தில் உயிர் விடுவதே அதிக சந்தோஷத்தைத் தரத்தக்கது. அதற்காக நான் வருந்தவில்லை ஒருவேளை யுத்த முனையில் நான் இறக்கும்படி நேரிட்டால் உமது திருமேனியை நான் மறுபடியும் எக்காலம் காண்பது என்னும் ஞாபகம் வந்தது. அதுவே சற்று என் மனத்தைக்கலைத்தது, வேறொன்றுமில்லை.

பத் : இதற்கெல்லாம் வருந்தலாமா நீ? யுத்தத்தில் நீ இறந்தால் வீர சொர்க்கமடைவாய்! தெய்வ கடாட்சத்தால் நீ இறக்க வேண்டிவந்தால் கையில் வாளுடனும் மார்பிற் காயத்துடனும் இறப்பாய் முதுகிற் காய்த்துடனிறவாதே! எனக்காக நீ சிறிதும் வருந்த வேண்டாம். நீ ஜெயம் பெறறு வருகிறாயென்று கேட்பதைவிட யுத்தமுனையில் சுத்த வீரனாயிறந்தாயென்று கேட்பேனாயின் நான் அதிக சந்தோஷமடைவேன்.—கண்ணே, அப்படி உனக்கேதாவது கெடுதி நேரிடுமாயின் நானும் விரைவில் உன்னைவந்து சேருவேன்; எனக்கு ஏதாவது அறிகுறி யனுப்புவாய்

ரா : அம்மா, உங்களுக்கு இந்தச் சந்தேகமெல்லாம் எதற்காக? அப்படி ஒன்றும் நேரிடாது. சீக்கிரம் விடையளித்தனுப்பும்.

பத் : கண்ணே, சுகமாய்ப் போய்வா.

[பஞ்சத்தின்மீது சாய்ந்து விடுகிறாள்.]

ம : அப்பா! முக்கார் பாகம் தொந்தரவு தீர்ந்தது. இன்னும் கார்பாகமிருக்கிறது. [விஜயாவின் புறம் திரும்பி] விஜயா, நான் போய்வரவா ?

வி : [தன் கணவன் கரத்திற் சாய்ந்து] பிராணநாதா! பிராண நாதா! [அழுகிறாள்]

பத் : விஜயா! இப்பொழுது நீ கண்ணீர் விடலாமா? உன் கண வனுக்கு ஒரு குறையும் வராது, சந்தோஷமாய் மங்கள வார்த்தை கூறியனுப்பு.

வி : பிராணநாதா! உம்மை நான் எப்படி விட்டுப் பிரிந்திருப் பேன்? எப்படிப்பட்ட வீரர்களும் மடியும் அமர்ப்பூமியில் உம்மை நான் மனதொப்பி எப்படியனுப்புவேன்?
ராகம் நாதநாமக்கிரியை, தாளம் திரிபுடை.

பல்லவி

ஐஐயோ! எப்படிப் பிரிவேன்
என் பிராணநாதா உமை விட்டு (ஐ)

அனுபல்லவி

வையமீதி லுமைப் போல
வாக்கை மறப்பாருளரோ, (ஐ)

சரணம்

நெஞ்சமதிலுமக் கென்மேல்
கொஞ்சமேனு மிரக்கமிலையோ
தஞ்சமாயுமை வஞ்சியடைய
அஞ்சலென்றே அறையீரோ. (ஐ)

ரா : [தலையைத் திருப்பிக்கொண்டு] என்ன கஷ்டம்! ஜல தோஷம் பிடித்துக்கொண்டு என்ன தொந்தரவு செய்கிறது!

ம : விஜயா, நீயொன்றும் அஞ்சவேண்டாம். நான் மீண்டு வருமளவும் என் தாயார் உன்னைப் பார்த்துக்கொள் வார்கள்.

வி : பிராணநாதா, தானும் உம்முடன் வருகிறேன்,

ம : ஐயோ, இதென்ன சங்கடம்! ஸ்திரீகள் யுத்த களத்திற்கு வரலாகுமோ? இது அசாத்தியமான காரியம். நீ இங்குத் தானே சுகமாயிரு. நான் போய்த் திரும்பிவருகிறேன் சீக்கிரம்,

வி : திரும்பி வருகிற சமாசாரம் என்னிடம் கூறுவானேன்? அப்பொழுது யார் உயிருடன் இருக்கப் போகிறார்களோ அவர்களிடம் கூறும்!

ம : அப்படியல்ல, விஜயா, மனோதைரியத்தைக் கைவிடாதே மனோஹரனுடைய மனைவியாயிருந்தும் நீமன அதைரியப் படலாமா? சீக்கிரம் எனக்கு விடையளிப்பாய்! [முத்த மிட்டு.] கண்ணே, நான் போய்வருகிறேன்,—அம்மா, விஜாயவை உம்மிடம் ஒப்புவித்துப் போகிறேன். அவளுக்கு நீர்தான் தேறுதல் சொல்லவேண்டும்.

[விஜயாவின் கரத்தைப் பற்றிபத்மாவதியின் கரத்தில் வைக்கிறான். வெளியில் யுத்த பேரிகை முழங்குகிறது.]

ரா : அம்மா, காலம் நெருங்கிவிட்டது சீக்கிரம் உத்தரவளியும் எனக்கும். தங்களுடைய ஆசீர்வாதத்தால் நானும் உயிருடன் ஜெயம் பெற்று வரவேண்டும்.

பத் : ராஜப்பிரியா, அப்படியே சுகமாய் வெற்றி பெற்று வா. அப்பா, மனோஹரனைப் பார்த்துக்கொள்.

மா : அம்மணி, எனக்கு ஒரு துணை வேண்டுமோ ?

பத் : அவ்வாறன்று. யானைக்குமடி சறுக்குமென்பர், யுத்தத்தில் சேமரதனாக ஓர் ஆப்தன் எப்பொழுதுமிருக்கவேண்டும்.

[யுத்தபேரிகை மறுபடியும் முழங்குகிறது.]

ம : [தன் தாயாரிடமும் விஜயாவிடமும் விடைபெற்று] நான் போய் ஜெயித்து வருகிறேன்!

[மனோஹரன், ராஜப்பிரியன், சத்தியசீலர் மூவரும் போகின்றனர். பத்மாவதி தன் முகத்தை முந்தானையால் மூடி மஞ்சத்தின் மீது சாய்ந்து விடுகிறாள். விஜயா தேம்பி யழுது பத்மாவதியின் மடியின்மீது வீழ் கிறாள்.]

நீ : அம்மா, இதுவரையில் எவ்வளவோ மனவுறுதியுடனிருந்தீர் களே, இப்பொழுது தாமே கண்ணீர் விடுகிறீர்களே!

பத் : நீலவேணி, உன்னை நான் பார்க்கவில்லை. எப்படியிருந்த போதிலும் நான் பெண்பாலல்லவோ? அதிவீரசேர மஹா ராஜனுடைய பெண்ணாயிருந்தபோதிலும் புத்திர வாத் சல்யம் போகுமோ? இதைக்கடந்தவர் யார்?

நீ : அப்படியிருக்கும்பொழுது இளவரசரைப் பதினெட்டாம் வயதில் பேய்களும் அஞ்சும்படியான ரணக்களத்திற்கு அனுப்பலாமோ?

பத் : நான் என்னசெய்வது?

நீ : ஆம், நீர் என்னசெய்வீர் பாவம்! மஹாராஜாவை யல்லவோ கேட்கவேண்டும், என்ன அம்மணி, அவருக்குத் தன் புத்திரனென்று கிஞ்சித்தாயினும் பட்சமிலையோ? ஒரு வேளை யுத்தத்திற்குச் சென்று மாளட்டுமென்றே இப்படியனுப்பினாரோ என்னவோ?

பத் : நீலவேணி, மஹாராஜாவைப்பற்றி இவ்வாறு என்னிடம் கூற வேண்டியதில்லையென்று உனக்கு எத்தனை முறை உரைத்திருக்கிறேன்? மஹாராஜா மனோஹரன் வெற்றி பெற்று கீர்த்தியடையவேண்டுமெனக் கருதியே அனுப்பி யிருக்கிறார். இதற்குச் சந்தேகமில்லை. இப்பதினாறு வருடங்களாக நான் அவரைப் பாராதிருந்தபோதிலும் மனோஹரனிடத்தில் மாத்திரம் அவருக்கு உள்ளன்பிருக் கிறதென்பதற்குத் தடையில்லை.

நீ : ஆ! அப்படியா?—

மறுபடியும் சத்தியசீலர் வருகிறார்

பத் : சத்தியசீலரே! நான் உம்மை மனோஹரனுக்குப் படைத் துணையாக அனுப்பியிருக்க என்ன வந்துவிட்டீர்? மனோஹரன் இன்னும் புறப்படவில்லையோ?

சத் : அம்மணி, இளவரசர் புறப்பட்டுவிட்டார். நான் எவ்வளவு கூறியும் செவியிலேற்றுக்கொள்ளாது, இங்குச் சென்று தான் வருமளவும் தமக்குத் தேறுதல் சொல்லிக்கொண்டி ருக்கும்படி ஆணையிட்டனுப்பினார் என்னை; அம்மா, அவர் ஒன்று கூறினால் அதைத் தட்டுவது யார்?

பத் : ஆம்!

சத் : அம்மா, தாங்கள் ஒன்றும் அதைரியப்படவேண்டாம். மஹாராஜா நமது பட்டணத்தெல்லைவரையில் வந்து இளவரசரை வெற்றி பெறுவாயென ஆசீர்வதித்தனுப்பினார்.

பத் : அப்படியா?

சத் : அம்மா, விஜயா, நீ வருந்துதலொழி. உன் கணவன் இன்னும் எட்டு தினங்களுக்குள் வெற்றி வீரகண்டையணிந்து திரும்பி வருவதாக உன்னிடம் கூறும்படிக் கட்டளையிட்டார். தன் அடையாளமாக இக்கணையாழியைக் கொடுத்து இதிலிருக்கும் வைரங்களைத் தினமொன்றாகக் கணக்கிட்டுக் கொண்டிருந்தால் இதற்குள்ளாக வந்துவிடுவதாகச் சொல்லும்படி கூறினார்.

[விஜயாவிடம் ஒரு மோதிரத்தை கொடுக்கிறார்.]

பத் : எனக்கேதாவது கூறும்படி சொல்லினனோ?

சத் : ஆம், அம்மா அப்படியொன்றும் நேராதென்பதற்குச் சந்தேகமில்லை. ஆயினும் தனக்கு ஏதேனும்கெடுதி நேரிடும் பட்சத்தில், தாம் அவருக்குக்கொடுத்த உடைவாளை அறிகுறியாக அனுப்புவதாயும், அதை விஜயா தரித்திருக்கிற கரு மகனாகப் பிறக்குமாயின், அவனிடம் கொடுத்து, அவனைக் கொண்டு தமது சபதத்தை நிறைவேற்றிக் கொள்ளும்படியாகவும் மிகுந்த வணக்கத்துடன் கூறும்படி உத்தரவு செய்தார் எனக்கு. தாம் ஒன்றும் பயப்பட வேண்டியதில்லை அம்மணி, அதிவீரசேர மஹாராஜனுடைய வயிற்றிற் பிறந்த தமக்கு நான் என்ன தைரியம் சொல்லப்போகிறேன்? ஆயினும் மனோஹரருடைய வீரதீரம் தமக்குத் தெரியாது. நேரிற் கண்டிருக்கும் எனக்குத்தெரியும். அதை நான் கண்ணாரக் கண்டு மகிழ்வதற்கில்லையே இம்முறை, என்று மாத்திரம் எனக்கு வருத்தமாயிருக்கிறதேயொழிய வேறொன்றுமில்லை.

ராகம் கமாஸ், தாளம் ரூபகம்.

பல்லவி

நானோ புகழ யோக்கியன்
நாயக மிவனை? (நா)

அநுபல்லவி

வானோர் புகழும் மானாபரணன்
தானவரேத்தும் தன்னிக ரில்லானை (நர)

சரணம்

நீர்பெற்றதே பிள்ளை பாக்கியம்
யார்பெறுவார் மற்றிந்த சிலாக்கியம்
பேர்பெற்ற அதிவீரன் பின்னறியாச்சூரன்
பீடுற்ற வீராதி வீரனை (நர)

தாம் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். அதுவுமன்றி ராஜப் பிரியனுமுடன் போயிருக்கிறான். அவன் வெளிக்கு எந் நேரமும் வேடிக்கையாகப் பேசிக்கொண்டு பயந்தவன் போல் நடித்தபோதிலும், உண்மையில் சுத்தவீரனென்று நினையும் அவனை: ஆபத்துவேளையில் தன் ஆன்மாவைக் கொடுத்து இக்கட்டையகற்றும் ஆப்தனென்று நினையும் அன்றியும் மனோஹரருக்கு ஒரு துணையும் வேண்டுமோ?

ஒரு தோழி வருகிறாள்.

தோ : ஐயா, தம்மை மஹாராஜா அழைத்துவரச் சொன்னார்.

சத் : என்னையா? இப்பொழுதேன் என்னை அழைக்க வேண்டும்? இதோ வருகிறேன். அம்மணி, இதோசென்று என்னவென்று விசாரித்து வருகிறேன். [போகிறார்.]

பத் : இப்படிப்பட்ட மந்திரி ஒருவரிருப்பதினாற்றான் நமது பிரஜைகள் மஹாராஜவுக்குக் கீழ்ப்படிந்து சுகமாய் வாழ்ந்துவருகிறார்கள். அதிருக்கட்டும், விஜயா, நீ கருத் தரித்திருக்கிறதை ஏன் என்னிடம் இதுவரையிலும் கூற வில்லை?

வி : மாமி எனக்கு வெட்கமாயிருந்தது.

பத் : கண்ணே, வாயிப்படி; வெட்கமென்ன என்னிடம் கூற? வா நாம் உள்ளே போவோம். [இருவரும் போகிறார்கள்.]

நீ : ஏது! நம்முடைய வசந்தசேனை பாடு திண்டாட்டந்தான்! அவள் ஒன்று நினைக்கவெவ்வேறாய் முடிகிறது! மனோஹரருக்குக் குழந்தையும் பிறந்துவிடுமாயின் எரிகிற கொள்ளியை ஏறத் தள்ளினாற்போற்றான். ஆயினும் நான் சீக்கிரம் சென்று நடந்த விஷயங்களை யெல்லாம் சொல்லிவிட வேண்டும். நம்முடைய கடனை நாமொழித்து விடுவோம். அப்புறம் அவள் பாடு அதுவு மல்லாமல் நாளிப்பொழுது அவளுடையமனதிற்கு இதமாய் நடந்து வராவிட்டால் நம்முடையதமயன் அமிர்தகேசரியை அரண்மனை வைத்தியனாக ஏற்றுக் கொள்ளமாட்டாள். [போகிறாள்.

காட்சி முடிகிறது

## இரண்டாவது காட்சி

இடம் : அரண்மனையில் வசந்தசேனையினுடைய அந்த ரங்கமான அறை.

காலம் மாலை

வசந்தசேனையும் நீலவேணியும் பேசிக்கொண்டிருக்கிறார் கள்.

வசனை : நீலவேணி, அன்றைதினமே இவ்விஷயங்களையெல்லாம் ஏன் என்னிடம் வந்து கூறவில்லை?

நீ : நான் என்ன செய்வேன்? இந்த இரண்டு தினங்களும் எனக்கு ஓயாது வேலையிருந்தது அவ்வரண்மனையில். திடீரென்று வந்துவிட்டால் ஏதாவது என்மீது சந்தேகங் கொள்ளமாட்டார்களா?

வசனை : ஆம், உன் மீதும் குற்றமில்லை; இப்பொழுதாவது வந்து கூறினையே அம்மட்டும். சரிதான், நீ விரைவிற் சென்று இன்னும் அங்கே என்ன நடக்கிறதென்று தெரிந்து அப்போதைக்கப்போது என்னிடங் கூறிக் கொண்டிரு. நான் உனக்கு முன்பு சொல்லியிருக்கிறது ஞாபகமிருக்கட்டும், போ,

நீ : அப்படியே, அம்மணி, அதை நான் மறப்பேனா? ஒரு காலும் மறக்கமாட்டேன். அம்மா, என்னுடைய தமயனார் அமிர்தகேசரியைப்பற்றி முன்பே தங்களிடங் கூறியிருக்கிறேன், அவர் எப்படியாவது நம்முடைய ராஜகுமாரருக்குக் கண்டிருக்கும் வியாதியைப் போக்கி விடுவதாகக் கூறுகிறார். எப்படியாவது தாங்கள் மஹாராஜாவிடங் கூறி அவரை நமது அரண்மனை வைத்தியராக ஏற்றுக்கொள்ளும்படி சொல்லவேண்டும்.

வனை : அதற்கென்ன? அப்படியே ஆகட்டும், நீ போ; நான் சொன்னபடி மாத்திரம் செய்.

நீ : அப்படியே, அம்மா; நான் பிறகு அழைத்து வருகிறேன் அவரை. (போகிறாள்)

வனை : இதென்ன சங்கடம்! நான் பத்மாவதிக்குத் தீமை நினைத்துச் செய்யுந் தொழில்களெல்லாம் அவளுக்குக் கடைசியில் நன்மையாய் முடிகின்றனவே! மனோஹரன் யுத்தத்தில் மாளட்டுமெனக் கருதி முத்துவிஜயபாண்டியனைத் தூண்டி விட்டால், இதைக்கொண்டு பத்மாவதிதன் தந்தையினுடைய சபதத்தை நிறைவேற்றி விடுவாள்போலிருக்கிறதே! முன்பே மனோஹரனிடம் மஹாராஜாவுக்குப் பிரீதியுண்டாயிருக்கிறது. இப்பொழுது மனோஹரன் வெற்றி வீரனாகத் திரும்புவானாயின் இதுவரையில் நான் பட்டபாடெல்லாம் வீணுக்கு விழலுக்கு முத்துலைக்கட்டி இறைத்ததேயாகும். இம்மனோஹரன் உயிருடனிருக்குமளவும் பத்மாவதியை நான் அசைக்க முடியாது விளையும் பயிர் முளையிலேயென்பதுபோல், சிறு வயது முதல் இவன் அதிபராக்கிரமம் உடையவனாயிருக்கிறான். ஐயோ! இப்படிப்பட்ட மகன் என் வயிற்றிலுதித்திருக்கலாகாதா? சிங்கம் சிங்கத்தின் வயிற்றில்தானே உதிக்கும்! நரி சிங்கக் குட்டியை ஈனுமோ? என் பெயரை யழிக்க இந்தப் பயித்தியம் பிடித்த வசந்தன் உதித்திருக்கிறானே! ஆகாத காரியத்தைப்பற்றி ஆலோசனை செய்து அடையும் பயனென்ன! இப்பொழுது நடக்க வேண்டிய காரியத்தைக் குறித்தெண்ணுவோம் போதாக்குறைக்கு விஜயாவும் கருத்தரித்திருக்கிறாளாம். அது மகனாகவே பிறக்குமென்பதற்குச்

சந்தேகமில்லை. சீ! சீ! இனிநான் தாமதிக்கலாகாது. எப்படியாவது மனோஹரனுடைய உயிருக்கு வழி தேடவேண்டும். மற்றவர்களெல்லாம் எனக்குச் சமான மானவர்களன்று.

பௌத்தாயனன் வருகிறான்

பௌ : அம்மணி, நமஸ்காரம்.

வசு : வாரும் பௌத்தாயனரே, உட்காரும். ஏதோ முக்கிய மான சமாசாரம் சொல்ல வந்தாற்போல் தோற்று கிறது. என்ன முகம் வெளுத்துக் காட்டுகிறது?

பௌ : வேறொன்றும் விசேஷமில்லை மனோஹரர் நேற்றைத்தினம் பாண்டியனது படைகளைச் சந்தித்து அவைகளை நன்றாக முறியடித்த பின்னர் பாண்டி யனது பட்டணத்துக்குட் பிரவேசித்து முத்துவிஜய னைக் கொன்று பட்டணத்தையும் கைப்பற்றியதாக வும், சீக்கிரம் எல்லா வேலைகளையும் முடித்துக் கொண்டு திரும்பிவருவதாகவும் செய்தி வந்தது மஹா ராஜாவுக்கு.

வசு : எப்பொழுது வந்தது இந்த சமாசாரம்?

பௌ : இப்பொழுதுதான் சில தூதர்கள் வந்து கூறினார்கள்.

வசு : பௌத்தாயனரே, நாம் நமது வசமாக்கியனுப்பிய இரண்டு படைவீரர்களும் என்னவாயினர்?

பௌ : அதை மெல்ல விசாரித்தறிந்தேன். மனோஹரர் ஓர் உதவியும் தனக்கு வேண்டாமென்று கூறி, முத்துவிஜய பாண்டியனுடன் வாள் யுத்தம் புரியும்பொழுது, ஒரு பக்கமாக இருந்து அவர்களிருவரும் மனோஹரன்மீது பாணத்தையெய்ய, அதையெப்படியோ பார்த்துக் கொண்டிருந்த ராஜப்பிரியன் அப்பாணத்தைத் தன் மார்பிற்றாங்கித் தடுத்து, அவ்விருவரையுங் கொன்று விட்டானாம்!

வனை : ராஜப்பிரியனா? அவனுக்கு அவ்வளவு வீரம் எங்கிருந்து வந்தது?

பௌ : ராஜப்பிரியன் சமாசாரம் உங்களுக்குத் தெரியாது. அவன் பயந்தவன்போல் நடிப்பதெல்லாம் அவ்வளவும் வேஷம். அவனையும் சுத்தவீரனென்று நினையும். அவனில்லாதிருப்பானாயின் மனோஹரன் இறந்து நமதெண்ணம் நிறைவேறியிருக்கும் உடலுக்குக் கவசம் போல் அவன் எப்பொழுதும் மனோஹரனை விடாது காப்பாற்றி வருகிறான்.

வனை : அவையெல்லாமிருக்கட்டும். மேல் நடக்கவேண்டிய காரியத்தைப்பற்றி யோசிப்போம் வேறு வழியில்லை! பௌத்தாயனரே, உமக்கு முதன் மந்திரியாகவேண்டுமென்று உண்மையில் இச்சையிருக்கிறதோ?

பௌ : அம்மணி, அதைநான் தங்களிடம் பன்முறை கூறியிருக்கிறேன். எல்லாம் தங்களுடைய சித்தம். தாம் மனது வைத்தால் ஆகாமற்போமோ எக்காரியமும்? தாங்கள் மஹாராஜாவிடம் ஒரு வார்த்தை கூறுவீராயின் அந்த நொடி முதல் நான் பிரதான மந்திரி தான்!

வனை : ஆனால் நான் உமக்கொரு கட்டளையிடுகிறேன், அதன்படி செய்கிறீரா?

பௌ : என்னாற் கூடுமானதானாற் செய்யத் தடையில்லை.

வனை : இந்த நொடியே புறப்பட்டுப்போய் மனோஹரனை எப்படியாவது கொன்று வருகிறீரா?

பௌ : அம்மணி! அது அசாத்தியமான காரியம்! எவ்வளவோ இவ்விஷயங்களிற் கைதேர்ந்த அந்த இரண்டு வீரர்களால் ஆகாமற்போன காரியம் என்னாலாகப்போகிறதா? நேரில் அவனுடன் யுத்தம் புரிந்து கொல்வதோ மும்மூர்த்திகளுக்கும் அசாத்தியம்! அவனைக் கொல்வது தவிர வேறேதாவது கட்டளையிடும், செய்கிறேன்.

வனை : ஆனால்—உடனே புறப்பட்டுப் போய் அவனிடத்திலிருக்கிற உடைவாளை எப்படியாவது அபகரித்து வந்துவிடும். பிறகு செய்யவேண்டியவற்றை அப்புறம் கூறுகிறேன்! மனோஹரன் இங்கு வருமுன் அவனது உடைவாளுடன் நீர் வந்து சேரவேண்டும். இதாவது செய்வீரா ?

பௌ : இது சாத்தியமான காரியம். இதோ புறப்படுகிறேன். அம்மணி, தங்கள் தயவிருக்கவேண்டும். இப்பிரயத்னத்தில் எனதுயிர் போனாலும் போகும். ஆயினும் உமக்காகத் துணிகிறேன். ஞாபகமிருக்கவேண்டும்

வனை ; நீர் ஒன்றும் அஞ்சவேண்டாம். புறப்படும் சீக்கிரம். எனக்குதவி செய்தவர்களை நான் ஒருகாலும் மறக்க. மாட்டேன்.

[தூரத்தில் ஒரு கூச்சல் கேட்கிறது

பௌத்தாயனரே அதென்ன சப்தம்?

பௌ : நான் சென்று கேட்டுவரவா விரைவில்?

வனை : வேண்டாம். போகும்போது என்னவென்று விசாரித்து யாரிடமாவது கூறி இங்கனுப்பிவிட்டு, நீர் நேராக உம்முடைய வேலையை நோக்கிச் செல்லும், ஒரு நொடிப்பொழுதும் இனித்தாமதிப்பின் நம்முடைய காரியம் சித்தி பெறாது, புறப்படும்.

பௌ : அம்மணி, நான் பெரிய குடும்பமுடையவன், நான் இறப்பேனாயின் என் குடும்பத்தைத் தாம் தான் காப்பாற்றவேண்டும்.

வனை : ஒன்றும் அஞ்சாதீர் நீர், போம். [பௌத்தாயனன் போகிறான்.] ஐயோ பாவம்! மறுபடியும் இவனை நான் உயிருடன் காண்பது அசாத்யம்! எனக்காக வீணில் எத்தனை பேரை நான்மாளும்படி செய்கிறேன். இதனால் பயனென்ன? இக்காரியத்தில் நான் கையிட்டுக்கொண்டநாள் முதலாக ஒரு நிமிஷமேனும்

எனக்கு மனச்சஞ்சலமில்லாதிருந்ததில்லையே! எந்நேரமும் எங்கு நாம் செய்யும் சூழ்ச்சிகள் தவறி விடுகின்றனவோ, எங்கு பிறர் அவைகளைக் கண்டுபிடித்துவிடுகின்றனரோ, எங்கு மஹாராஜா என்மீதிருக்கும் ஆசை குன்றி விடுகின்றனரோ, எங்கு பத்மாவதியிடம் மறுபடியும் அன்பு பிறந்துவிடுகிறதோ, என்னும் கவலை பாதித்துக்கொண்டேயிருக்கிறதல்லவா? மனோஹரனைக் காணும்பொழுதும், அவனைப்பற்றிக் கேட்கும் பொழுதும், அவனது தீரத்தை நினைக்கும்பொழுதும் என் மனம் எவ்வாறு நடுநடுங்குகிறது; மனோஹரன் பத்மாவதி குமாரனாகவும் விஜயாவுக்கு மாரனாகவும் எனக்கு மாறனாகவும் உதித்திருக்கிறானே! என்ன சங்கடங்கள்! எங்கு நோக்கினும் தொந்தரவுதான்; நான் பத்மாவதியின் தோழியாய்ச் சேர நாட்டிலிருந்து இங்கு வந்த பொழுதிருந்ததைவிட இப்பொழுது நான் அதிகமாயனுபவிக்கும் சுகமென்ன? கவலையுற்ற கருடனாய் வாழ்வதினும் கவலையற்ற காகமாய் வாழ்வதே மேலாகும்! இத் தொல்லைகளையெல்லாம் விட்டு ஒருவருமறியாதபடி எங்கேயாவது ஓடிப்போய்த் தொல்லையற்று என் வாழ்நாட்களைக் கழிக்கவா? பத்மாவதி தன் கணவனுடன் முன்புபோல சுகமாய் வாழட்டுமே? இவர்களைப் பிரித்த பாவம் இன்னும் எனக்கெதற்கு? சீ! என்ன வாழ்வு

ஒரு தோழி வருகிறாள்

யார் அது? என்ன சமாசாரம்? நான் அழையாதிருக்கும் பொழுது என்னிடம் வரவேண்டாமென்று எத்தனை முறை உன்னிடம் கூறியிருக்கிறேன்?

தோ : ஆம், உண்மைதான். ஆயினும் பௌத்தாயனர் சீக்கிரம் உம்முடன் ஒரு சேதி கூறிவரும்படி அனுப்பினார்.

வசை : ஆம், ஆம்! என்ன சமாசாரம்? என்ன சொல்லச் சொன்னார்?

தோ : இளவரசர் ஜெயம்பெற்று நம்முடைய பட்டணத்தை நோக்கித் திரும்பி வருவதாகவும், முன்னாகத்தாம் முத்து விஜயபாண்டியனிடமிருந்துவென்ற அநேக

மாயிரம் யானைகள் குதிரைகள் ஆபரணங்கள் முதலிய வற்றையெல்லாம் அனுப்பியிருக்கிறதாகவும், அதைக் கண்டு அரண்மனைச் சேவகர்களெல்லாம் சந்தோஷத் துடன் ஆரவாரம் செய்கிறதாகவும் கூறச்சொன்னார். அதுவுமன்றி அதிவீரசேர மஹாராஜனுடைய வஜ்ஜிர சிங்காதனத்தைப் பாண்டியனிடமிருந்து மீட்டுத் தன் தாயாரிடமும் இளவரசர் அனுப்பியிருக்கிறதாகவும் சொல்லச் சொன்னார்.

வனை : எங்கே அந்த சிம்மாசனம்? பத்மாவதியிடம் போய்ச் சேர்ந்து விட்டதா ?

தோ : இல்லை, இப்பொழுதுதான் அதை மஹாராஜாவுக்குக் காண்பித்துவிட்டு அந்த அரண்மனைக்கு எடுத்துச் செல்கிறார்கள் சேவகர்கள்.

வனை : நீ உடனே ஓடிச்சென்று அந்த ஆட்களை நான் கட்டளையிட்டதாகக்கூறி, மறுபடியும் மஹாராஜா விடம் அதை எடுத்துப் போகச் சொன்னதாகச் சொல். விரைந்து செல். பத்மாவதியிடம் அந்தச் சிம்மாசனம் போய்ச் சேருமாயின் உன்னை அரண்மனையினின்றும் நீக்கிவிடுவேன்.

தோ : ஒரு வேளை பட்டத்து ராணி கோபித்துக் கொண்டால்

வனை : நான்தான் இப்போது பட்டத்து ராணி! போ, நான் சொன்னபடி செய். இல்லாவிட்டால் மஹாராஜவிடம் கூறி உன்னைச் சிரச்சேதம் செய்து விடும்படி செய் வேன்! என்முன் நில்லாதே! [அறைக்கு வெளியில் பிடித் துத் தள்ளுகிறாள்.] சீ! நான் இப்பதினாறு வருஷங் களாக மஹாராஜாவுடன் வாழ்ந்த வாழ்வெல்லாம் எதற்காயது? எப்படியிருந்தபோதிலும் பத்மாவதியை எல்லோரும் இன்னும் பட்டத்து ராணி என்று தானே அழைக்கிறார்கள். எப்படியிருக்கினும் ஜனங்களெல் லாம் என்னை மஹாராஜாவின் வைப்பாகப் பாவிக் கிறார்களேயொழிய அவளை மதிக்கிறதுபோல என்னை மதிக்கிறார்களா? இல்லையே! அதற்கென்ன, என் முன்பாகப் பயந்து என்னைத் துதித்தபோதிலும், அவர்களுடைய மனத்தில் என்ன நினைக்கிறார்களென்

இருக்கினும் ஜனங்களெல்லாம் என்னை மஹாராஜா வின் வைப்பாகப் பாவிக்கிறார்களேயொழிய அவளை மதிக்கின்றது. போல் என்னை மதிக்கின்றார்களா? இல்லையே! அதற்கென்ன, அவர்களுடைய மனத்தில் என்ன நினைக்கிறார்கள். என்றும், எனக்குப் பின்னால் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்றும் எனக்கு நன்றாகத் தெரியும்... இம் ?

.. ...ஆகட்டும்! நாளைத் தினமே மஹாராஜா, என் னைப் பத்மாவதிக்குச் சமானமான நிலையில், இந்தப் பத்மாவதியின் சிங்காதனத்திலேயே தனதருகில் சபை யில் உட்கார வைத்துக் கொள்ளும்படிச் செய்யாவிட் டால் நான் வசந்தசேனை அன்று! நாளை நவராத்திரி கொலுவின் முதல் நாளல்லவா? இனி நான் தாமதிக்க லாகாது; உடனே மஹாராஜாவிடம் போக வேண்டும்.

காட்சி முடிகின்றது (போகிறாள்)

## மூன்றாவது காட்சி

இடம் : அரண்மனையில் வசந்தசேனையின் இருப்பிடத் தைச் சார்ந்த ஒரு விடுதி காலம்–மாலை.

வசந்தன் வேகமாய் ஓடி வருகிறான், விகடன் மெல்லப் பின் புறமாக வருகிறான்.

வ : சந்தேகமில்லை! கொஞ்சங்கூட சந்தேகமில்லை ஐயா! என்னா ?

வி : ஆமையா, சந்தேகமேயில்லே!

வ : என்னத்துக்கு ?

வி : ஆ?—அதான் ஒங்களேக் கேக்கணும் இன்னு இருந்தேன், என்னாத்துக்கு ?

வ : உலகங் கெட்டுப் போச்சையா, கெட்டுப் போச்சு உலகம்; போச்சு கெட்டு உலகம்! சந்தேகமில்லை!

வி : சந்தேகமேயில்லை! புத்தியிலே எதுவானாலும் இருந் தாலல்லவோ சந்தேகம் வரனும்? அங்கே தான் ஒண்ணு மில்லையே! நண்ணா சொன்னைங்கோ சொன்னாலும் ஒரு புத்தியில்லாதவன் பேச்சு!

வ : என்னயா ? என்னை புத்தியில்லாதவனென்ணா சொல்ரைங்கோ ?

விக: தங்களை அப்படி சொல்வேனோ ? புத்தியில் ஆதவன் சூரியனுக்குச் சமானமானவனே இண்ணு, சொன்னேன் —முட்டாளே இண்ணு.

வ : என்ன ! என்ன !முட்டாளா ?

விக: இல்லை, முட்டாள் இண்ணா என்னா அர்த்தம் ? முழு ஆள், சரியான ஆள் இண்ணு அர்த்தம் உங்க ரூபத்தெப் பாக்கும் போதேதெரியலே ? மனோஹரரே பாருங்கோ பலே சூரன் இன்றாங்களே ! தங்களிலே பாதி இருக்கறாரா அவரு ? நிறுத்துப் பார்த்தால்லவோ தெரியும்

வ : சந்தேகமில்லை !

விக: சந்தேகந்தானில்லையே !—எத்தனி தடவே அழறது !

வ : அதெல்லாமிருக்கட்டுமையா-இப்போ எனக்கு ராணி ஒரு வயித்தியனே ஏற்பாடு செய்திருக்கிறாங்களாமே, எனக்கு வயித்தியனே என்னாத்துக்கு இண்ணு ஒரு கேள்வி கேக்கறே ?

விக: நண்ணா கேட்டைங்கே ஒரு முட்டாள் கேள்வி நானுங் கேக்கரே, என்னாத்துக்கு உங்களுக்கு வயித்தியன் ? என்னாத்துக்கு ?

வ : எனக்கு என்னா புத்தி கேட்டுபோயிருக்குதா ?

விக: என்னமா கெடும்? அது இருந்தா அல்லவோ கெட? அது இல்லவேயில்லயே! என்னமா கெடும் அது?

வ : சந்தேக மில்லை! இந்த வயித்தியனுக்கு பயித்தியம் புடிச்சியிருக்குது

விக: சந்தேக மில்லை! வயித்யெமின்னா என்னா, பயித்திய மின்னா என்னா? வயித்திரெல்லாம் பயித்தியம் பிடிச்சிப்போன வங்கதானே.

வ: வயித்தியரு என்னா மருந்து கொடுப்பாரு?

விக. ஏ! என்ன கொடுக்கப்போறாரு? நேர்வாளம்' கிர்வாளம், ஒரு பத்து பலம் கொடுக்கப்போறாரு. அவ்வளவுதான் அப்றம் கொடுக்றதெது? அத்தோடே சரி!

வ : எனக்கு மருந்து கொடுத்தா மண்டேயே பேத்துடமாட்டேனா! சந்தேகமில்லை!

விக: சந்தேகமில்லை, உங்க வீரம், கேப்பானேன்? பூரம் தானே!

வ : ஆமாம்—ஒருவேளே அம்மா கோவிச்சிக்கினா என்னா செய்யறது?

விக: ஆ!—அதுவொரு சந்தேகமிருக்குது—என்னா செய்யலாம்?

வ : ஐயா! நான் சொல்றபடி செய்யறிங்களா? மொள்ள அந்த வயித்தியரே அனுப்பிச்சிடுங்க, உங்களுக்கு இந்த முத்துமாலே தர்ரேன்.

விக: ஆமாம், அப்றம் உங்க பழய வயித்தியரே தெரித்துட்டேன் இண்ணு, சின்னராணி கோவிச்சிக்கினாங்களே! அப்புறம். இதுக்குங் கோவிச்சிக்கினா?

வ : அதெல்லாம் நான் சொல்லிடுறேன்.

விக: ஐஐயோ! அதோ வர்ராப்போலெயிருக்குதையா வைத்தியரு உங்களே தேடிக்கினு! எங்கேயானாலும் ஒளிச்சிக்கிங்கோ! ஒளிச்சிக்கிங்கோ! நான் பேசி அனுப்பிச்சூட்றேன்! ஒளிச்சிக்கிங்கோ! ஒளிச்சிக்கிங்கோ!

[வசந்தனையொரு பெட்டிக்குள் ஒளிந்துகொள்ளச் செய்கிறான்.]

அதோ வர்ராபோலெயிருக்குது. ஒரு வேடிக்க பண்ணுவோம். நம்பளும் அவரெப்போல் ஒரு வயித்திய வேஷம் போட்டுக்குவோம்! [போகிறான்]

[எதிர்ப்புறமிருந்து நீலவேணியும் அமிர்தகேசரியும் வருகிறார்கள்.]

நீ : இங்குத்தானிரும். நான் போய்ச் சின்னராணி எங்கே என்று பார்த்து விட்டுவருகிறேன் [போகிறாள்.]

[அமிர்தகேசரி ஒரு புறமாக உட்கார்ந்து தன் ஓலைப் புத்தகத்தை விரித்துப் படிக்கிறான். விகடன் மெல்ல வந்து அவன் பக்கத்திலுட்கார்ந்து தானும் ஒரு ஓலைப் புத்தகத்தை விரித்து அவனைப் போல் படிக்கிறான்.]

அ : [கொஞ்சம் திடுக்கிட்டு] ஐயா! தாங்கள் —

விக: உம்—

அ : தங்களுடைய —

விக: உம்—

அ : தங்களுடைய நாமதேயம்—

விக: உம்—

அ : தங்களுடைய நாமதேயத்தைக் கேட்கலாமா?

விக: கேட்கலாம்.

அ : தங்களுடைய நாமதேயமென்ன ?

விக: பன்ரெண்டிலொன்று சொல்லுங்கள்.

அ : தங்கள் பெயரென்னவென்று கேட்கிறேன்.

விக: அதைத்தான் ஜோசியம் பார்த்துச் சொல்லுகிறேன்.

அ : இதேது பயித்தியம்போலிருக்கிறதே!

விக: அடடா! நீங்களா? அண்ணா! அண்ணா! அண்ணா!

(அவனைத் தழுவிக் கட்டிக்கொண்டு)

இத்தனை நேரம் தெரியாமல் போச்சே! என்னை மறந்துப் பூட்டீங்களா என்ன? அண்ணா! எல்லாரும் வீட்டிலே நலந்தானே? அண்ணி என்னமாயிருக்கிறாங்க ?

அ : அப்பா என்னை விடு விடு! நீ யாரப்பா? எனக்குத் தம்பி ஒருவனுமில்லையே!

விக: அண்ணா! இதுக்குள்ளே மறந்தூட்டைங்களா? நான்தான் உங்க தம்பியாச்சே?

அ : தம்பியாவது? நீ எப்படி எனக்குறவு? நீயார்?

விக: எப்படி உறவா ? இதுக்குள்ளே மறந்தூட்டைங்களே அண்ணா! உங்க பாட்டனுக்குப் பாட்டனெயும் என் பாட்டனுக்குப் பாட்டனெயும் ஒரே புலி முழிங்கூட்டுதே. மறந்தூட்டைங்களா? நீங்கதான் மறந்தூட்டாலும் நான் மறக்க மாட்டேன் நம்பளுடைய சொந்தத்தே!

அ : ஐஐயோ! அப்படியொன்றுமில்லை. நான் உன் பந்துவல்ல. எனக்குன்னைத் தெரியாதே! தெரியாதே?

விக: இல்லெ, இல்லெ நீங்க என் அண்ணாதான்! நான் விடவே மாட்டேன்!

அ : ஐயோ சனி!—என்னை விடப்பா! நீ என் தம்பிதான், விடு விடு;—இதென்ன பெரிய இழவாக இருக்கிறது!—அப்பா, இந்த அரண்மனையில் உனக்கென்ன வேலை?

விக: அந்த வேலெயெயேன் கேக்கரைங்கோ? சின்ன ராணிக்கு ஒரு புள்ளெ இருக்கிறாரு; பெரிய பயித்தியம்! அவரோடெ எப்பவும் இருந்துக்கினு அவர் ஒருத்தருக்கும் கெடுதி செய்யாமலிருக்கும்படி பாத்துக்கிறது.

அ : அவர் என்ன எல்லோரையும் அடிக்கிறாரா என்ன?

விக: அந்த எழவெ கேக்காதைங்கோ! யாரானாலும் புதுசா வந்தா போதும்; பாத்துட்டாரோ யமலோகந்தான்!

அ : அப்படியா?

விக: ஆமாம். நீங்க என்னாத்துக்கு வந்தைங்கோ அண்ணா ?

அ : அந்த ராஜகுமாரருக்கு வயித்தியஞ் செய்ய வந்திருக்கிறேன், சின்ன ராணியின் உத்தரவுபடி. அப்பா, நீ சொல்லும்படியான அவ்வளவு துஷ்டராயிருந்தால் நான் என்ன செய்வது?

விக: அண்ணா! அண்ணா! ஐஐயோ! இதென்ன சங்கடமா யிருக்குது! உங்களெ பாத்தாருண்ணா தவுடு பொடி யாக்கி விடுவாரே! இதுக்கென்னா செய்றது?

அ: இதற்கொரு யுக்தியுமில்லையா?

விக: ஒண்ணுமில்லெ! சந்தேகமில்லை!

வ: [பெட்டிக்குள்ளிருந்து] சந்தேகமில்லை!

அ: யார் அது? யார் அது?

விக: ஐஐயோ! அவர் இங்கு வர்ராப்போலே இருக்குதே! எதி ரிலே பாத்தா உங்க பாடு தீந்துது!

அ: அப்பா! நான் செய்வது? என்ன செய்வது?

விக: நான் சொல்றபடி கேளுங்கோ இங்கே எங்கேயானாலும் ஒளிச்சிக்கினு இருங்கோ, நான் போயி சமாதானப் படுத்தி அழெச்சிக்கினுவர்ரேன்.

அ: எங்கே ஒளித்துக்கொள்வது? எங்கேளிக்கக்கொள்வது?

விக: அதோ அந்தப் பெட்டியிலே ஒளிச்சிக்கிங்கோ!

[பெட்டியைக் காட்டிவிட்டுப் போகிறான்.

அமிர்தகேசரி பெட்டியைத்திறந்து உள்ளே நுழையப்பார்க்க, வசந்தன் அதனுள்ளிருந்து வெளியில் கிளம்பி அமிர்தகேசரியைப் பிடித்துசகொண்டு, 'சந்தேகமில்லை! சந்தேகமில்லை!', என்று கூச்சலிடுகிறான். அமிர்தகேசரி திகைத்து நின்றுவிடுகிறான்.]

கூச்சலைக்கேட்டு நீலவேணியும் வசந்தசேனையும் ஓடிவரு கிறார்கள்.

வனை: இதென்ன! இதென்ன!

வ: அம்மா, நான் இங்கே ஒளிச்சிக்கினு இருந்தேன் இவர் வந்து என் தலெமேலெ உக்காரப்பாத்தாரு. நான் ஒத்துக்குவேனோ? மாட்டேன். சந்தேகமில்லை! நீங்க ஒணுமின்னா யாரொயிண்ணாலும் கேளுங்கொ!

அ : மகாராணி! நான் அறியாமற் செய்த பிழையை மன்னிக்க வேண்டும். இங்கே யாரோ ஒருவர் இருந்தார். அவர் ராஜகுமாரர் வருவார், உன்னைக் கண்டால் கெடுதி செய்வார், இதற்குள் மறைந்துகொண்டிரு, என்று என்னிடம் கூறினார்—

[விகடன் தன் வேஷத்தைக் களைந்துவிட்டு மறுபடியும் மெல்ல வருகிறான் ஒரு புறமாக.]

விக: அம்மணி, நமஸ்காரம்; என்ன சமாசாரம்? என்ன சங்கதி? என்ன விசேஷம்? என்ன தாத்பரியம்?

வனை: விகடா! இதெல்லாம் உன் வேலையோ?

விக: என்ன அம்மணி! எனக்கொண்ணுந் தெரியாதே; நான் தூங்கிக்கினு இருந்தேன், கூச்சல் கேட்டு என்ன விஷய மின்னு ஒடிவந்தேன். தூக்கமெல்லாங் கெட்டுது. என்ன சேதி?

அ : அம்மணி, இவர்தான் என்னை மறைந்து கொள்ளும்படி சொன்னதென்று நினைக்கிறேன்.

வ : பாத்தைங்களா ஐயா! உட்டேனா நானு? சந்தேக மில்லை!

வனை: விகடா! நான் இம்முறையும் உன்னை மன்னித்தேன். இனி இம்மாதிரியான தவறு செய்யாதே! இதென்ன சங்கடமாயிருக்கிறது!

விக: இல்லெ, அம்மணி. நான் மறுபடியுஞ் செய்யவேமாட்டேன் சந்தேகமில்லை!

வ : ஆமாம், அம்மா! சந்தேகமேயில்லை!

வனை: நீலவேணி, இவர்தானா உன் தமையனாராகிய வைத்தியர்?

விக: ஆமம்மா, இவர்தான் என் தமயனாராகிய பயித்தியர்.

நீ : இவர் அரண்மனை விதூஷகர், இவர் கூறுவதைக் கவனிக்க வேண்டாம் அண்ணா.—[வசந்தசேனையுடன்] ஆமாம், அம்மா, எப்படியும் ராஜகுமாரருக்குக் கண்டிருக்கிற வியாதியை நீக்கிவிடுவதாகக் கூறுகிறார்.

அ : அம்மணி, ஈஸ்வரனுடைய கிருபையினாலும், என் குரு வின் கடாட்சத்தாலும் நமது இளவரசருக்குக் கண்டிருக் கிற வியாதியைச் சீக்கிரத்தில் தீர்த்துவிடுவேன்—இது பித்தத்தைச் சார்ந்த வியாதி—

வ : என்னா ஐயா! எனக்கு பயித்தியமா புடிச்சிப்போச்சி?

வனை: வசந்தா! பேசாமல் இரு சற்று! எனக்குக் கோபம் வரும்படி செய்யாதே!

அ : அம்மணி, என்னுடைய கை வல்லபம் இங்கே தெரியாது.

விக: ஆமாம், இங்கே என்னமா தெரியும்? அங்கே போனவங் களே கேட்டா தெரியும்!

அ : என்னிடத்திலே இந்த பித்தத்திற்கு ஒரு மாத்திரை இருக் கிறதுங்கோ—

விக: அந்த மாத்திரெ சாப்பிட்டவுடனே வைகுண்ட யாத திரை தானுங்கோ!

அ : இல்லை, ஐயா, அப்படியல்ல. அந்த மாத்திரையை மூன்றுவேளை புசித்தால் அப்புறம் மருந்தே சாப்பிட வேண்டியதில்லை.

விக: வாஸ்தவம், மூணுவேளெ சாப்பிட்ட பிற்பாடு, அப்றம் மருந்து என்னாத்துக்கு? ஆளே பூட்டா அப்றம் மருந் தெங்கே சாப்பிட்றது? சந்தேகமில்லை!

வ : சந்தேகமில்லை!

வனை: விகடா! நீ பேசாமலிருக்கமாட்டாயா?

விக: இல்லை, அம்மணி, பேசாமலிருக்கிறத்துக்குத்தான் மாத்திரெ சொல்றாரே எங்க அண்ணா!

அ : ராஜபத்தினி, இதே மாதிரியாக எங்கள் ஊரில் ஒரு வருக்கு வியாதி கண்டிருந்தது நாலைந்து மாதங்களுக்கு முன்பாக. அனேக வைத்தியர்கள் வந்து பார்த்து அசாத்தியமென்று கைவிட்டார்கள். பிறகு நான்போய் இந்த மாத்திரையை மூன்று வேளை கொடுத்தேன், போய் விட்டது.

விக: உயிரா? ஐயோ பாவம்!

அ : இல்லை, ஐயா, நோய் போய்விட்டது.

விக: வாஸ்தவந்தான். நோய்போய்விட்டது, அத்தோடே அவரும் போய்விட்டார், தாங்களென்ன கால் மாடோ, தலை மாடோ?

நீ : பேசாமலிருமையா! — அம்மா, எப்படியாவது தாங்கள் அனுக்கிரகிக்க வேண்டும்.—

வனை: நீலவேணி, அதற்கென்ன? அப்படியே ஆகட்டும், நான் சொன்னபடிசெய்யாமற்போவேனோ?[அமிர்தகேசரிக்கு] ஐயா உம்மை இளவரசருக்கு வைத்தியராக நியமித்தேன். இன்று முதல் ஆரம்பித்து சீக்கிரம் இவனது வியாதியைத் தீர்க்கவேண்டும். உம்முடைய பெயரென்ன?

அ : அமிர்தகேசரி.

விக: அமிர்தவேசரி!

அ : இல்லை, ஐயா, பரிகாசம் பண்ணாதீர், அமிர்தகேசரி.

விக: மன்னிப்பு! நான் சொன்னது தப்புதான், இது வேசரி!

வனை: பேசாமலிருக்கமாட்டாய் நீ? வா உனக்குத் தகுந்த தண்டனை விதிக்கிறேன்! வசந்தா, இதோ இருக்கிற அமிர்தகேசரி சொற்படி நீ நடந்துவரவேண்டும். இல்லாவிட்டால் உன்னை நான் தண்டிப்பேன். விகடா, வசந்தன் அமிர்தகேசரி சொற்படி நடக்கும்படி செய்ய வேண்டும் நீ. அவர்களிருவரும் சச்சரவிட்டுக்கொண்டால் உன்னை அரண்மனையினின்றும் நீக்கிவிடுவேன்.

விக: அம்மணி! இது நல்ல வேலெயாயிருக்குதே! இவங்க சண்டெ போட்டுக்குனா எனக்கு தண்டனெயா? அம்மணி, இந்த வேலெ எனக்கு வாணாம், வாணாம்!

வனை: விகடா, அப்படியல்ல. அவர்கள் சமாதானமாயிருக்கும்படி செய். வசந்தன் வியாதி நீங்கினால் உனக்கு நல்ல பரிசளிக்கிறேன்.

[ஒரு தாதி வந்து வசந்தசேனையின் செவி யில் ஏதோ ரகசியமாய்க்கூற, அவளுக்குத் தானும் ரகசியமாக விடை கொடுத்தனுப்பு கிறாள்.]

சரிதான், நீங்கள் புறப்பட்டுச் செல்லுங்கள்.

[அமிர்தகேசரி, விகடன், வசந்தன், நீல வேணி போகிறார்கள்.]

இப்பொழுதுதான் நமக்கு நல்ல காலம் பிறந்திருக்கிறது. இனி பத்மாவதி இறப்பாளென்பதற்குச் சந்தேகமில்லை! அவளிறப்பாளாயின் மனோஹரனும் இறப்பான் துயராற்றாது; விஜயா கருவோடு உடன் செல்வாள்! பிறகு நாம் கவலையற்று வாழலாம். அப்பா! — மஹா ராஜா தான் எப்படியும் என்னை நவராத்திரி கொலுவில் சிங்காதனத்தின்மீது பத்மாவதி இருக்கவேண்டிய இடத் தில் உட்காரவைத்துக்கொள்வதாக ஏற்றுக்கொண் டாரே, இனி எனக்கென்ன வேண்டியது? — ஆயினும் காரியம் முற்றிலும் சித்திபெறுமுன் நான் சந்தோஷப் பட்டுவிடலாகாது நான் இருக்கவேண்டிய ஜாக்கிரதை யில் எப்பொழுதும் இருக்கவேண்டும்.

[பௌத்தாயனன் வருகிறான்]

வசை: முதல் மந்திரி, பௌத்தாயனரே! மெச்சினேன் உமது புத்தியை!

பௌ: [மனோஹரன் உடைவாளை அவளிடம் கொடுத்து] தாங்களிட்ட கட்டளையை நிறைவேற்றிவிட்டேன். ஆயினும் எப்படி உயிருடன் தப்பி வந்தேனென்று எனக்கே ஆச்சர்யமாயிருக்கிறது!

வசை: அந்தச் சிங்கத்தின் வாயினின்றும் எப்படி தப்பி வந்தீர்?

பௌ: அம்மா, நான் போகும்பொழுதே நீலவேணியிடமிருந்து அந்த வாளைப்பற்றி எல்லா விஷயங்களையும் ஆதியோ டந்தமாக அறிந்துகொண்டேன். பிறகு ஒரு சந்நியாசி வேடம் பூண்டு நமது சேனைகள் தங்கியிருந்த இடத்தைச் சார்ந்து, மனோஹரரிடம் அவரது தாயார் ஆசியுடன் அனுப்பியதாகக் கூறினேன். உடனே அவர் மகிழ்ந்து எனக்கு வேண்டிய உணவு முதலியவற்றைக் கொடு

பித்து, எப்பொழுதும் தன் பக்கலிலேயே இருக்கும்படி கூறினார். இரவிலும் வேறிடத்தில் உறங்கினால் எனக்கு அசௌக்கியமாக இருக்குமெனக் கூறித் தன் விடுதியிலேயே என்னை உறங்கும்படி கட்டளையிட்டார், இது தெய்வாதீனமெனக் கருதி சந்தோஷத்துடன் நான் உடன்பட்டு, நடுநிசியில் சமயம் பார்த்து அவர் அருகில் வைத்திருந்த உடைவாளை மெல்லென எடுத்துக் கொண்டு புறப்பட்டு வந்து விட்டேன்.

வனை: மனோஹரன் உம்மீது சிறிதும் சந்தேகங்கொள்ள வில்லையா ?

பௌ: நான் தன் தாயாரிடமிருந்து வந்ததாகக் கூறியது முதல் என்மீது எள்ளளவும் அவர் சந்தேகங் கொள்ளவில்லை. ராஜப்பிரியன் மாத்திரம் என்னை அடிக்கடி உற்றுப் பார்த்த வண்ணமிருந்தான். அவன் ஏதாவது சந்தேகப் பட்டிருக்கக் கூடும். அப்பொழுதுநான் பூண்டிருந்த வேடத்தைக் கண்டிருப்பீராயின் நீரும் என்னை இன்னா னென அறிந்திருக்க மாட்டீர்.

வனை: மிகவும் சந்தோஷம். காலத்தில் நீர் எனக்குச் செய்த இப்பேருதவியை நான் ஒருகாலும் மறவேன் —மனோ ஹரன் எப்பொழுது இங்கு வருவதாக உத்தேசித்திருக் கிறான் தெரியுமா உமக்கு ?

பௌ: நாளைத்தினம் காலை வருவதாக மஹாராஜாவுக்குச் சேதி வந்திருப்பதாக நானறிந்தேன்,

வனை: அப்படியா? ஆனால் நாம் தாமதிக்கலாகாது! மனோ ஹரன் திரும்பி வருமுன் நமதெண்ணத்தை நிறைவேற்றி விடவேண்டும்—பௌத்தாயனரே, நீர் இது வரையில் செய்த உதவி ஒரு பெரிதன்று, இனி செய்யப்போகிறதே பேருதவியாம். அதையும் செய்வீரென்பதற்குச் சந் தேகமே இல்லை. இந்த உடைவாளை, ஏதாவது ரத்தத் தைப் பூசி, இட்சணமே பத்மாவதியிடம் எடுத்துச் சென்று மனோஹரன் இறந்ததாகவும், இதை அதற்கு ஒரு குறியாக அவளிடம் அனுப்பியதாகவும் கூறி, எப்படி யாவது பத்மாவதி புத்திர சோகத்தால் தற்கொலை புரியும்படி செய்யவேண்டும். தங்களையொத்த புத்தி மான்களுக்கு பெண் பேதையாகிய நான் சொல்லத்தக்க உபாயம் ஒன்றுமில்லை. சோழதேசம் முழுவதையும்

முதன் மந்திரியாக ஆளத்தக்க வல்லமை வாய்ந்த தமக்கு நான் என்ன கூறப்போகிறேன்? பத்மாவதி இறந்த உடனே நீர் முதன் மந்திரியாய் விட்டீர் என எண்ணும்-புறப்படும் உடனே!—

**பௌ:** அம்மா, இது கஷ்டமல்ல—பிறகு மனோஹரன் திரும்பி வந்தால் என் செய்வது ?

**வஸ:** நீர் உரு மாறிப் போம் இப்பொழுது; பிறகு அவன் வருவானாயின் நடக்கவேண்டியவற்றிற்கு நானிருக்கிறேன். புறப்படும் உடனே!—

**பௌ:** இதோ புறப்பட்டுவிட்டேன். [போகும்பொழுது ஒரு புறமாக] சீ! என் புத்தியை என் சொல்வது? இது தவறென நான் நன்றாயறிந்தும், இதில் நான் பிழைப்பது கடினமெனக் கண்டும், இவள் முகத்தைப்பார்த்து இவளது குரலைக் கேட்பேனாயின், என் எண்ணங்களெல்லாம் எங்கேயோ பறக்கின்றனவே!—இவ்வரக்கி எதிரில் நின்று, நீ நரகில்வீழ், என்பாளாயின் அப்படியே வீழ்வேன் என்பதற்குச் சந்தேகமில்லை, இவளது வலையில் மஹாராஜா வீழ்ந்ததும் ஓர் ஆச்சரியமோ?

**வஸ:** பௌத்தாயனரே, புறப்படும், நான் இவ்வளவு கேட்டும் என்ன தாமதிக்கிறீர்?—என்ன யோசிக்கிறீர் ?

**பௌ:** இல்லை, இதோ புறப்பட்டுவிட்டேன். [போகிறான்.]

**வஸ:** பத்மாவதியிறந்தாலும் இறக்காவிட்டாலும் பௌத்தாயனன்இறப்பானென்பதற்குச் சந்தேகமில்லை.ஐயோ! எனது வலையில் அகப்பட்டு எத்தனை பேர் மாள்கிறார்கள். சீ! இவ்வளவுக்கும் நான் அடையும் பயனென்ன? ஒன்றையுங்காணோம். எந்நேரமும் மனச் சஞ்சலம்! சற்றாவது ஓய்வில்லையே! சீ! இதுகெட்டது, இக்காரியத்தை விட்டுவிடலாமென்றாலோ, இவ்வளவு தூரம் இதனுள் பிரவேசித்தபின் பின் வாங்குவதா என்னும் ஆணவமன்றோ என்னைப்பற்றி உந்துகிறது இப்பொழுது! சீ! என்ன வாழ்வு! என்ன வாழ்வு! கவலையற்று பத்மாவதி வாழ்வது இதைப் பார்க்கிலும் ஆயிரமடங்கு உன்னதமானதே! ஒரு வேளை பத்மாவதி இறப்பதன்முன் மனோஹரன் திரும்பி வந்துவிடுவானாயின்?—தன் வாளினைக் காணோமென்று எப்படியும் தேடுவான்! என்ன சஞ்சலம்! என்ன சஞ்சலம்!

[முகத்தைக் கையால் சற்று மூடிக் கொண் டிருந்து பிறகு எடுத்து விடுகிறாள்.]

[கேசரிவர்மன் அருவம் மெல்ல எதிரில் தோன்றுகிறது.]

வனை: யார் அது?—நீயா? ஐயோ! மறுபடியும் வந்தாயோ? போ மறைந்து! போ மறைந்து!

[முகத்தைக் கையால் கெட்டியாய் மூடிக் கொள்கிறாள்.]

கே: வேண்டாம்—வேண்டாம்—வேண்டாம்!

வனை: உன்னை யார் கேட்டது? என் வாழ்வைக் கெடுக்க இறந்த பின்னும் நீ பிறந்திருக்கிறாயே! என்னை அடிக்கடி ஹிம் சிப்பதினால் உனக்கு என்ன பலன்? ஐயோ! உன்னை வேண்டிக் கொள்கிறேன். என் கண்முன் நில்லாதே, நீ வாராதே, போ! போ!

கே: வசந்தசேனை! வேண்டாம்! என்னைக் கொன்ற பாவ மொன்றே உனக்குப் போதும். இன்னும் பிறருக்கு ஏன் தீங்கு செய்ய முயலுகிறாய்? இதனால் உனக்கே முடிவில் இன்னும் கெடுதி நேரிடும். வேண்டாம், இப்பொழுதே சொன்னேன், விட்டுவிடு!

வனை: நான் விடுகிறேன், விடவில்லை, உனக்கென்ன? நீ ஒழிந்து போ.

கே: நீ என் வார்த்தையைக் கேட்கப்போகிறதில்லை!—கெட் டுப்போ!—அழிந்து!போ!—நாசமாய்ப் போ!—சீக்கிரம் என்னை மறுபடியுங் காண்பாய்! [மறைந்து போகிறது.]

வனை: (மெல்லக் கையை எடுத்துப்பார்த்து) அப்பா! ஒழிந்தது பிசாசு! ஐயோ! இந்தச் சங்கடங்களையெல்லாம் அனு பவிப்பதை விட இறத்தலே மேலாகும்!—பத்மாவதி! பத்மாவதி! உன்னுடைய பணிவிடைப்பெண்ணாக நான் எப்பொழுதும் இருந்திருக்கலாகாதோ!—விதியே! விதியே!

[மூர்ச்சையாகிறாள். பிறகு சற்றுப் பொறுத்து எழுந்திருக்கிறாள்.]

சீ! என்னுடைய எண்ணங்கள் தீர்மானங்கள் எல்லாம் எங்கே பறந்தன? நான், முன் வசந்தசேனையாக இன் னும் அரை நாழிகையாகும்.—நந்தவனத்திற்காவது சென்று சேடியருடன் உலாவி இவற்றையெல்லாம் மறக்கப் பார்க்கிறேன்! மறப்பதேது?—இறந்தேனாயின் மறப்பேன்! [போகிறாள்.]

காட்சி முடிகிறது.

## நான்காம் காட்சி

இடம் : —அரண்மனையைச் சார்ந்த காவிரிக் கரையோர முள்ள ஒரு வசந்தமண்டபம். காலம்—மாலை)

பத்மாவதி ஒரு பளிங்காசனத்தின்மீது வீற்றிருக்க நீலவேணி அருகில் நின்று காற்றெழ மெல்ல விசிறுகிறாள்.

விஜயா கரையோரமுள்ள படியின்மீது ஒரு தோழியுடன் உட்கார்ந்திருக்கிறாள். பத்மாவதிக்குச் சற்றுத் தூரத்தில்

சத்தியசீலர் உட்கார்ந்திருக்கிறார்,

ச : —ஆகவே அம்மணி, கெடுதியின் வழி நன்மை யுதிக்குமென உறுதியாகக் கடைப்பிடித்து, நமக்கொரு தீங்கு நேரிடுங்கால் இதுவும் ஏதோ ஒரு நன்மைக்கே நேர்ந்ததெனப் பொறுத்து, அம்மட்டும் இதினும் கேடான ஒரு விபத்து நமக்குச் சம்ப விக்காதொழிந்ததேயென சந்தோஷப்படுதலே முறைமை யாம். சான்றோர்க்கு ஒரு சோர்வு நேரிடின், அதையே தாம் இன்னும் உயர்ந்த உத்தமப் பதவி அடைதற்கு ஓர் உதவி யாகக் கொள்வார். ஏனையரே இடுக்கணுற்ற காலையில் அழிவார். எரியினிலிடின் இழி துரும்பேயழியும், உத்தம மான பொன்னோ, மாசு நீங்கி விளங்கும், இவ்வாறே துன்பம் தூயவரைத் துலக்கச் செய்யும். முற்றுமுணர்ந்த தம்மையொத்தவர்களுக்கு நான் இவைகளை எடுத்துரைப்பது அனாவசியமேயாம்

ப: ஆம், சத்தியசீலரே, நமக்கு நேரிடுங் கெடுதிகள் முடிவில் யோசிக்குமிடத்து ஒரு விதத்தில் நமக்கு நன்மைகளாக முடி கின்றன மனோஹரன் யுத்தத்திற்கு இச் சிறுவயதிற் செல்ல வேண்டி வந்ததே என முன்பு வருத்தமுற்றேன். அக்காலத் தில் நான் அவனை யுத்த முனைக்கனுப்பியிராவிட்டால் இப் பொழுது ஜெயம் பெற்று அவனடைந்த கீர்த்தியை எப்படிப் பெற்றிருப்பான் ?

வி: ஒருவேளை யுத்தத்தில் இறந்திருந்தால்?—

ப : அப்பொழுதுமென்ன? சுத்தவீரனாக யுத்தத்தில் இறந் தான் மனோஹரன் என்னும் கீர்த்தி என்றும் நிலைத் திருக்குமில்லவா? புகழின்றி இப்புவியில் பிறப்பதிற் பய னென்னை?

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார் தோன்ற லின் தோன்றாமை நன்று."

வி: மாமி, இன்றைக்கு எட்டு நாளாய்விட்டதே! இன்னும் வரவில்லையே?

ராகம்— நாயகி. தாளம்—அடதாள சாப்பு.

பல்லவி

இன்னும் வரக்காணேன் மாமி
எது நான் செய்வேன் மாமி (இ)

அநுபல்லவி

என்று வருவாரோ நாதன்
என்றேங்குதென்றன் மனம் (இ)

சரணம்

எட்டு நாளாயும் மாமி
இங்கு வரக்காணேனையோ
அட்டி செய்யலுமாமோ
அபாயமென் நேர்ந்ததுவோ

ப: கண்ணே! ஏன் வருத்தப்படுகிறாய்? எப்படியும் வருவான் சீக்கிரம் வருந்தாதே—

ராகம்—மோகனம். தாளம்—ரூபகம்.

பல்லவி

சந்தேகம் வேண்டாம் என் கண்ணே
நீ தான் தைரியமாக இருப்பாயே (ச)

அநுபல்லவி

எந்த விதத்தாலுமுன் கணவனுக்கு பயமொன்றில்லை
எட்டு நாளைக்குள்ளே வருவான் தடையில்லை. (ச)

சரணம்

போன இடத்தில் ஜெயமே கிடைத்துப்
புகழுடன் வருவான் பயமேன்
தான தருமம் செய்த தவமெல்லாம் வீண்போமோ
தனையன் சுகமாய் வருவான் தவித்திடலாமோ. (ச)

—சத்தியசீலரே, மனோஹரன் எப்பொழுது வருவதகாக் கூறினீர்.?

ச : மஹாராஜாவுக்கு நாளைத்தினம் இங்கு வருவதாகச் சேதி சொல்லி அனுப்பியிருக்கிறார் இந்தச் சந்தர்ப் பத்தில் விஜயாவுக்கு அவர் கூறிய மொழியை மறந்திருப் பினும் மறந்திருப்பார்; இது மன்னிக்கத் தக்கதே.

வி : என்ன மன்னிக்கத்தக்கது? வருகிறேன் என்று கூறி விட்டு வராமலிருப்பது மன்னிக்கத் தக்கதோ?—பகைவரைத் தான் ஜெயித்தாய்விட்டதே, இனி சீக்கிரம் வந்துவிடு கிறதுதானே ?

ச : அம்மா, அப்படியல்ல; ஒரு தேசத்தை ஜெயித்த பிறகு செய்யவேண்டிய ஏற்பாடுகள் எவ்வளவோ இருக் கின்றன. அவைகளை எல்லாம் செய்துவிட்டுத்தானே வரவேண்டும் ?

ப : சத்தியசீலரே, மனோஹரன் பாண்டிய நாட்டினின்றும் வெற்றியில் கொண்ட பொருள்களில் ஏதாவது சிம்மா சனம் அனுப்பியிருக்கிறானா?

ச : ஆம், அம்மணி, அது—மஹாராஜாவின் அரண்மனையி லிருக்கிறது நாளைத்தினம் நவராத்திரி கொலு ஆரம்ப மாகையால் அந்தச் சிம்மாசனத்தின்மீதிருந்து சபை நடத்த வேண்டுமென்று மஹாராஜா ஏற்பாடு செய் திருக்கிறார். அதுவுமன்றித் தான் அதிலிருந்து, வெற்றி பெற்று வரும் மனோஹரரை மரியாதையுடன் அழைக்க வேண்டுமென்றும் ஏற்பாடு செய்திருக்கிறார்.

ப : ஏது மஹாராஜாவுக்கு மனோஹரனிடம் அவ்வளவு பிரீதியுண்டாயது?—எப்படியாவது அவர்களிருவரும் சந்தோஷமாயிருந்தாற் போதுமெனக்கு—

ஒரு தோழி வருகிறாள்

தோ : அம்மா, யாரோ ஒரு பெரியவர் தங்களை உடனே பார்க்க வேண்டுமென்று வந்திருக்கிறார்; மனோஹர ரிடமிருந்து வந்திருப்பதாகச் சொல்லும்படி கட்டளை யிட்டார்.

ப : அப்படியா? உடனே வரச்சொல். [தோழி போகிறாள்.] மனோஹரன் தானாக வராமல் வேறொருவரிடம் என்ன சங்கதி சொல்லி அனுப்பியிருக்கக்கூடும்?

[பௌத்தாயனன் சந்நியாசி வேடம் பூண்டு வருகிறான்.]

சுவாமி, இங்கு எழுந்தருள வேண்டும். தாங்கள் யாரோ தெரியவில்லை. மனோஹரனிடமிருந்து என்ன சமாசாரங்கொண்டுவந்தீர்?

பௌ : [உட்கார்ந்து] உலக வாழ்க்கையென்பது அநித்யம்! நீரிற் குமிழி யாக்கை; நம்மாலென்ன இருக்கிறது? எல்லாம் ஜெகதீசன் செயல்—சிவ சிவ சிவ!

ப : சுவாமி, என் மைந்தன் மனோஹரன் க்ஷேமந்தானே?

பௌ : வருத்தப்பட வேண்டாம், "குடம்பை தனித்தொழிய புட்பறந்தற்றே, உடம்போடு உயிரிடை நட்பு"!

வி : ஐயா! என் பிராணநாதருக்கு ஏதாவது கெடுதி நேரிட்டதா என்ன?

பௌ : "ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும், மாண்டார் வருவாரோ?" ஆகவே நமது மனத்தை நாமே தேற்றிக் கொள்ளவேண்டும். ஆயினும் மனோஹரர் கீர்த்தியடைந்தே பிறகு—

ச : ஐயா! என்ன சமாசாரம்? எங்களுக்கொன்றும் விளங்கவில்லை!

பௌ : தாங்கள்தானே மனோஹரருடைய தாயார்?—தங்களிடம் இந்த உடைவாளைச் சேர்ப்பிக்கச் சொன்னார் அறிகுறியாக!

[விஜயா மாமி! மாமி! எனக் கதறிக் கொண்டு பத்மாவதியின் மடிமீது வீழ்கிறாள்.]

ப : ஐயா! மனோஹரன் ..

பௌ : தாங்களிட்ட கட்டளையை நிறைவேற்றிவிட்டே பிறகு இறந்ததாகச் சொல்லும்படி சொன்னார்.

ப : கண்ணே! மனோஹரா! மனோஹரா! [மூர்ச்சையாகிறாள்.]

ச : அம்மணி! அம்மணி! சற்று பொறும்—ஐயா! இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது. மனோஹரன் வெற்றியடைந்து நாளைத்தினம் திரும்பிவருவதாக சமாசாரம் சொல்லியனுப்பியிருக்கிறார். அவர் எப்படி இறந்திருக்கக்கூடும்? சற்று விரைவில் விளங்கச்சொல்லவேண்டும்— அம்மணி! நீங்கள் வருந்தவேண்டாம். இதில் ஏதோ சந்தேகமிருக்கிறது.

பௌ : சந்தேகமொன்றுமில்லை, பாண்டியனை ஜெயித்து திரும்பி வரும்போது, நேற்றைத்தினம் இரவு, மனோஹரர் பாசறையில் உறங்குங்கால், பாண்டியனது சேவகர்களில் தப்பிப் பிழைத்த சிலர், தங்கள் அரசன் இறந்த பழியைத் தீர்க்கும் பொருட்டு கபடமாய் அறைக்குட் பிரவேசித்து, மனோஹரரை மரணகாயப் படுத்திச் சென்றார்கள். உடனே அங்கு அருகிலிருந்த என்னையழைப்பித்து, இந்த உடைவாளைக் கொடுத்து, உங்களிடம் அறிகுறியாக இதைக்கொண்டுபோய் தனக்கு நேர்ந்த ஆபத்தைக் கூறி, விசனப்படாது சீக்கிரம் தான் சென்றவிடத்துக்கு உங்களையும் வரும்படி வேண்டிக் கொண்டதாகக் கூறும்படி, கட்டளையிட்டனுப்பினார்.

ப : [எழுந்திருந்து.] சரி! இனி யோசிப்பானேன்? கண்ணே, மனோஹரா! நாங்களும் இதோ வந்துவிட்டோம், பயப்படாதே! ஆயினும் நீ வீரனாக வாளுடன் போரில் மாளாது உறங்கும் பொழுது கொலை செய்யப்பட்டு இறக்கவேண்டி வந்ததல்லவா! கண்ணே கண்ணே! [துக்கப்படுகிறாள்.]

ச : அம்மணி! நான் கூறுவதைச் சற்றுக் கேளும். இதில் ஏதோ சூது இருக்கிறது. மனோஹரன் ஒருகாலும் இம்மாதிரியாகத் தமக்குச் சொல்லியனுப்பியிருக்கமாட்டாரே! சற்று நிதானியும். இவ்விஷயத்தை நாம் தீர விசாரிக்கவேண்டும்.

ப : இன்னும் விசாரிப்பதென்ன? சத்தியசீலரே, நமதரண்மனையின் ஒரு மூலையில் எரி மூட்டும்படி கட்டளையிடும் உடனே, நாங்களிருவரும் அக்கினிப்பிரவேசமாக வேண்டும்! மனோஹரன் இறந்தபின் நாங்கள் உயிர்

வாழ்வானேன்? - [திடீரென்று மனோஹரனும் ராஜப்பிரியனும் வருகிறார்கள்.]

வி : (மனோஹரனைக் கட்டிக்கொண்டு) பிராணநாதா! பிராணநாதா!

ப ; (மனோஹரனை ஆலிங்கனம் செய்து) கண்ணே! மனோஹரா!

(மெல்ல நழுவப்பார்க்கும் பௌத்தாயனனை ராஜப்பிரியன் கெட்டியாய்ப் பிடித்துக் கொள்ளுகிறான்.)

ப : கண்ணே! மனோஹரா!

ராகம்—கமாஸ்—தாளம்—சாப்பு.

பல்லவி.

காணக்கிடைத்ததேதோ மைந்தா
கண்ணே உன்னை நான் இன்று (கா)

அநுபல்லவி.

பாணம் பட்டிறந்தாயென்று
பரிதவித்த நான் இன்று (கா)

சரணம்.

பெற்றவென்மனம் பெரிதுங் கலங்கிற்றே
உற்று மலர்ந்த உடல் மலங்கிற்றே
பற்றியெறிந்த என் பாழ்வயிற்றினில்
பாலை வார்த்தாற்போலின்று. (கா)

ரா : சுவாமி! தாங்கள் தானே! அப்பொழுதே நினைத்தேன். எங்கே போகிறீர்கள்? சற்றுப் பொறுங்கள். நானும் உடன் வருகிறேன்!

ம : அம்மணி! என்ன சமாசாரம்? இதென்ன உடைவாளில் ரத்தம்?—சத்தியசீலரே! இதெல்லாம் என்ன?

ச : இளவரசே! சற்றுத் தாமதித்து வந்திருப்பீராயின் உம் அன்னையும் மனைவியும் அக்கினிப் பிரவேசமாகி இறந்திருப்பார்கள். சற்று முன்பாக இந்தக் கபடன் இவ்

வுடைவாளை இக்கோலத்துடன் கொணர்ந்து தாம் பகைவரால் உறங்கும் பொழுது மரணகாயமடைந்து இறந்ததாயும், இறப்பதன் முன் இவ்வுடைவாளை அறி குறியாகத்தம தன்னைக்கனுப்பி, தாம் சென்றவிடத் திற்கு அவர்களையும் சீக்கிரம் வரும்படி வேண்டிய தாயும் கூறினான்—

ரா : அரசே! ஏன், இப்பொழுதாவது என் சொல்லை நம்பு வீரா? அப்பொழுதே இதில் ஏதோ சூதிருக்கிறதெனக் கூறினேனே!

ம : ராஜப்பிரியா! நம்பினேன்! நம்பினேன்! தோழா, எனது யிரை இரண்டாம் முறை காப்பாற்றினை. நான் இன்றைத்தினமே வந்திராவிடின் என் அன்னை இப் பாதகன் சூதினால் இறந்திருப்பார்கள் என்பதற்கைய மில்லை, என் அன்னை இறந்தபின் நானும் இறந்திருப் பேன். அப்பா உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன் ?-

ரா : எனக்கு நீர் செய்யவேண்டிய கைம்மாறொன்றிருக்கிறது இந்த மஹானுபாவர் அங்கிருந்து வந்த வேகத்தில் உடம் பெல்லாம் மாசு படிந்திருக்கிறது அதற்காக கைகால் களைக் கட்டி இவருக்கு நான் காவிரி ஸ்நானம் செய் விக்க வேண்டும், உத்தரவளியும்.—

ம : செய் அப்படியே! நானே கொன்றிருப்பேனிவனை!—

ப : மனோஹரா, பொறு; அப்படியொன்றும் செய்ய வேண் டாம், நாம்தான் இப்பெரிய ஆபத்திலின்றுந் தப்பி னோமே, ஐயோ பாவம்! இவன் பிழைத்துப்போகட்டும், இவனை விட்டுவிடுங்கள்.

ரா : என்ன அம்மணி, இம் பாதகனையா விட்டுவிடும்படி சொல்லுகிறீர்கள்? உங்களையெல்லாம் அழிக்கப் பார்த் தானே சற்று முன்பாக! இதனை மறந்திரோ இதற் குள்ளாக? இவனைத் தண்டியாது உயிருடன் விடுதலே பாவம்!

ப : அப்படியல்ல, இவன் தானாகச் செய்திருக்கமாட்டான் யாரோ ஏவியிருக்கவேண்டுமிவனை!—அப்பா, இனி இம் மாதிரியான தீய தொழிலிற் பிரவேசியாது புத்திசாலி

யாக வாழ். நீ யாராகவிருந்தபோதிலும் இனி இந் நாட்டெல்லைக்குளிராதே. இருப்பாயாயின் உன் உயிருக்குக் கெடுதி நேரிடும்.

ம : அடே பாதகா! யாருடைய உயிரைப் போக்கப் பார்த்தனையோ அவர்களுடைய கருணையினால் உன் உயிர் தப்பினை இனிமேலாவது இம்மாதிரியான தவறு செய்யாதே, போ.

ப : நீயேன் இவ்வேலையில் கையிட்டுக்கொண்டாய்? நாங்கள் உனக்கென்ன தீங்கு செய்தோம்? நீ யார் ?

பௌ : அம்மணி, எனதுயிரைக் காப்பாற்றினீர்கள்! இதை நான் மறவேன் நான் சந்நியாசியன்று, பௌத்தாயனன்!

எல்லோரும் : பௌத்தாயனன்!

பௌ : ஆம், வசந்தசேனையினுடைய ஏவலினால் இத்தொழிற்கு உடன்பட்ட பௌத்தாயனன் நான்!

ம : ஆ! அப்படியா சமாசாரம் ?

[பௌத்தாயனன் தலையைச் சேதிக்க உடைவாளை வீசுகிறான். பத்மாவதி அவனைத் தடுக்கிருள்.]

ப : மனோஹரா, இவனுக்கு நான் உயிர்ப் பிச்சை தந்தபின் நீ கொல்லலாகாது; விட்டுவிடு, இவன் போகட்டும்—விட்டுவிடு என் சொற்படி.—

ம : ஆம்!—சீ! அற்பனே, பிழைத்துப்போ! உன்னைக் கொல்வதில் என்ன பயன்? அந்த வசந்தசேனையையல்லவோ கொல்லவேண்டும்

பௌ : அம்மணி, இரண்டாம் முறை எனது உயிரைக் காத்தீர்!—இளவரசே, இதை நான் என்றும் மறவேன்! உமக்கு ஓர் ஆபத்தில் எப்படியாவது நான் இறப்பதன்முன் உதவுகிறேன் பாரும்!—நான் போகுமுன் ஒன்று கூறுகிறேன். வசந்தசேனை உயிருடனிருக்குமளவும் உமது உயிருக்கு ஹானிதான்! மறவாதீர்! [போகிறான்.]

ம : அந்த வசந்தசேனையை இப்பொழுதே கொன்றுவிட்டு வருகிறேன். இதுவரையில் ஒரு காரணம் வேண்டுமே என்று பொறுத்திருந்தேன். இனி நான் ஒரு நொடியேனும் தாமதியேன்.

ப : மனோஹரா, வா இப்படி, உட்கார்—யுத்தத்திற்குப் போய் ஜெயம் பெற்று வந்தவன் சற்று நேரமாவது என்னிடம் பேசிப் போவதை விட்டு எங்கேயோ திடீரென்று போய் விடுகிறாயே!

ம : ஆமாம், அம்மணி, மன்னிக்கவேண்டும். [உட்கார்ந்து] அம்மா, உமது கட்டளைப்படி முத்துவிஜயனைக் கொன்று, எனது பாட்டனாருடைய சபதத்தை நிறைவேற்றினேனோ இல்லையோ ?

ப : கண்ணே, உன் வாக்கை நிறைவேற்றினாய்! சந்தேகமில்லை. என் மனம் இப்பொழுது குளிர்ந்து சந்தோஷமடைந்தது போல, எப்பொழுதும் நீ ஒரு தீங்குமின்றி நீடூழி காலம் சந்தோஷமாய் வாழ்வாயாக! ஆயினும் கண்ணே, இதைவிட நீ எனக்குச் செய்யவேண்டிய பெரிய உபகாரமொன்றிருக்கிறது, அதைச் செய்வாயா கண்ணே ?

ம : [உடைவாளை வீசி] சொல்லும், இந்த நொடியே செய்கிறேன்! வசந்தசேனையைக் கொன்று வரவா ?

ப : முதலில் இவ்வுடைவாளை உறையில் போடு.—நீ மஹாராஜாவுக்காவது வசந்த சேனைக்காவது என் அனுமதியின்றி உன்னுயிருள்ளளவும் ஒரு தீங்கும் செய்வதில்லையென்று பிரமாணம் செய்துகொடு.

ம : அம்மா, இதென்ன இப்படி கேட்கிறீர்கள்? வசந்தசேனை உமக்கு இதுவரையிற் செய்த தீங்கெல்லாம் போதாதென்று முடிவில் நமதுயிருக்கெல்லாம் ஒரே உலையாக வைத்தாளே சற்று முன்பாக! இதை மறந்துவிட்டீரா என்ன இதற்குள்ளாக? அவளை நான் தண்டியாது விடமாட்டேன். நான் பொறுத்ததெல்லாம் போதும் இதுவரையில். இதைமாத்திரம் என்னைக் கேளாதீர்! வேண்டுமென்றால், மஹாராஜாவை நானொன்றும் செய்யவில்லையென்று பிரமாணஞ் செய்து தருகிறேன்—

ப : அப்படி வேண்டாமெனக்கு, நான் சொன்னபடி கையடித்துக்கொடுப்பாயானால் ஏற்றுக்கொள்ளுகிறேன்; இல்லாவிட்டால் ஒன்றும் எனக்கு வேண்டாம். ஜெயம் பெற்று வந்த மனோஹரன், தன்னைப் பெற்ற தாயார் கேட்கும்படியான ஒரு வரத்தைக் கொடுக்க அசக்தனானா

னென்னப் பலர் நகைப்பார்கள். நாளை, இந்தப் பழிச் சொல்லைப் பெற உனக்கு விருப்பமானால் உன்னிஷ்டப் படி செய்.

ம : ஐயோ! அப்படி ஒன்றுமில்லையம்மணி! நீர் கேட்பதை நான் மறுப்பேனோ? ஆயினும் எதற்காக இப்படிப் பிர மாணம் செய்யும்படி கேட்கிறீர் ?

ப : காலம் வரும்பொழுது நியாயம் கூறுகிறேன். இப் பொழுது என் சொற்படி செய்கிறாயா மாட்டாயா?

ம : அப்படியே ஆகட்டும், அம்மணி. [சத்தியம் செய்கிறான்]

ப : சத்தியசீலரே, ராஜப்பிரியா, விஜயா, நீங்களெல்லோரும் சாட்சி—மனோஹரா, இதை மறவாதே.

ரா : [ஒருபுறமாக சத்தியசீலருக்கு] சத்தியசீலரே, எதற்காக இப்படிப்பட்ட பிரமாணஞ் செய்யச் சொன்னார்கள் ராஜபத்னி? வசந்தசேனைக்காக இவ்வண்ணம் உத்தரவு செய்வானேன்? மஹாராஜாவைப்பற்றி கேட்டுக்கொள் வதுதான் சகஜம். இதற்கேதோ காரணமிருக்க வேண்டும்.

ச : [ஒரு புறமாக ராஜப்பிரியனுக்கு] ராஜப்பிரியா, காரண மின்றி ராஜபத்னி ஒன்றும் செய்யமாட்டார்களென்று உறுதியாக நம்பு

வி : பிராணநாதா, எனக்கொரு வரம்வேண்டும்.

ம : சரி! உனக்கென்னவரம் வேண்டும்? நானினி யுத்தத் திற்கே போகலாகாதெனக் கேட்டுவிடு. பிறகு அரண் மனையில் அந்தப்புரத்தில் உட்கார்ந்துகொண்டு கழலாடிக்கொண்டிருக்கிறேன்.

வி : அப்படியில்லை, பிராணநாதா. இனி, என்னிடங் கூறிய படியே எப்பொழுதும் நடக்கிறதாக வாக்களியும்.

ம : என்ன அப்படி நான் நடவாமற் போனதிதுவரையில்?

வி : இன்றைத்தினம் வருவதாகக் கூறிவிட்டு நாளைத்தினம் வரப்பார்த்தீரே!

ம : ஓஹோ! வாஸ்தவந்தான். என் சொற்படி நடவா திருந்தேனாயின் என்னென்ன தீமைகள் நேர்ந்திருக்கும்! இதினின்றும் ராஜப்பிரியன் தான் காப்பாற்றினான்,

ரா : அம்மா, உங்களுக்கு சமாசாரம் தெரியாதோ? ஐஐயோ! நான் பலவந்தப்படுத்தியல்லவோ அழைத்துக்கொண்டு வந்தேன். அங்கே ஒரு ஸ்திரீயைக் கலியாணம் பண்ணிக் கொண்டு அவ்விடத்தை விட்டு வர மனமில்லாமலல்லவோ இருந்தார். சமாசாரந் தெரியாதோ ?

வி : என்ன பிராணநாதா ?

ம : இதென்ன ராஜப்பிரியா ?

வி : இருக்குமிருக்கும்! அவர் பொய் பேசுவாரோ ?

[முகத்தை முந்தானையால் மூடிக் கொள்கிறாள்.]

ம : அடடே! ராஜப்பிரியா! என்ன எப்பொழுது பார்த்தாலும் நம்மைச் சங்கடத்திலேயே கொண்டுவந்துவிடுகிறாய்! சீசீ! விளையாடாதே, அதோ பார்! விஜயா அழத்தொடங்குகிறாள்!—கண்ணே, விஜயா! அப்படியொன்றுமில்லை.

ராகம்—நாயகி. தாளம்—ரூபகம்.

கண்ணிகள்.

ம : ஈதுனக்குத் தகுமோ கண்ணே
ஏதுகுற்றம் செய்தேன் பெண்ணே
தீது ஒன்றும் செய்தறியேன்
தெள்ளமுதே நீயே பாராய்.

வி : மறந்தீரோ நாதா நீரும்
மாதுநான் என்பதைத் தேரும்
பிறந்தேனோ நானிக்கதிக்கு
பேதைமடியேனோ இன்றே.

ம : கோபமென்மேல் ஏனோ மானே
கூறுவாய் எந்தன் தேனே
பாபமென்ன செய்தேனோ நான்
பகருவாய் இன்றே நீதான்.

வி : உற்று உமைப்பெற்ற சுகம்
சற்றே சொலும் கற்று நீரே
பற்றென்பதைப்பெற்றறியேன்
பகருவதென்னே நான்தான்,

வி : உம்—உம் இருக்கும்.

ம : ராஜப்பிரியா! சீ! உண்மையைக் கூறு!

ரா : ஒன்றுமில்லையம்மா, தாம் வருந்தவேண்டாம். வேடிக்கையாக, வீரலட்சுமியை மணந்தாரெனக் கூறினேன். அந்த சக்களத்தி உமக்கு ஒரு தீங்குஞ் செய்யமாட்டாள்! வருந்த வேண்டாம். (எல்லோரும் நகைக்கிறார்கள்.)

ம : ராஜப்பிரியா, ஆகட்டும், உனக்கும் விவாகமாகட்டும், உன்னை என்ன பாடு படுத்துகிறேன் பார்!

ரா : என்னையா? நான் கலியாணஞ் செய்து கொள்ளுங் காலத்தில் பார்த்துக்கொள்வோம். உம்மைப் போலவா நான்? மையிட்ட கண்ணினின்றும் தண்ணீர் வந்தால் உமது வீரமெல்லாம் எங்கேயோ மறைந்து போய்விடுகிறதே? இல்லாவிட்டால் முத்துவிஜயபாண்டியன் மருமகள் காலில் வீழ்ந்தழுதாளென்று, சத்ருவின் குமாரன் என்றும் பாராமல், உக்கிர குலசேகர பாண்டியனுக்குப் பட்டங் கட்டி விட்டு வருவீரா நீர்?

ப : கண்ணே அப்படியா செய்தாய்? மிகவும் சந்தோஷம் அது தான் சுத்தவீரனுக்கு லட்சணம்! பகைவரைப் பொறுப்பதே மேன்மை.

ரா : சரி, அவருடைய அன்னையல்லவா தாங்கள்! என்ன அப்பா இப்படி பகைவருடன் உறவாடலாமா என்று கண்டிப்பதை விட்டு, சபாஷ் என்று தட்டிக்கொடுக்கிறீர்களே!

ம : ராஜப்பிரியா, முத்துவிஜயன்தான் நமக்கு விரோதி, அவன் குமாரன் நமக்கொரு கெடுதியும் செய்யவில்லையே, அவனையும் ஏன் தண்டிக்க வேண்டும்?

ரா : இப்பொழுது ஒரு கெடுதியும் செய்யவில்லை, இனிமேல் செய்யப்போகிறான். இப்பொழுதே சொன்னேன் பாரும், பாம்பின் வயிற்றில் பாம்புதான் பிறக்கும்.

ம : அதெல்லாமிருக்கட்டும்—சத்தியசீலரே, நாங்களிங்கு வந்திருக்கும் சமாசாரம் மஹாராஜாவுக்குத் தெரிவிக்க வேண்டியதில்லை. நாளைத்தினம் சபையிலே மஹாராஜாவை நான் காண்பேன்.

ச : அப்படியே ஆகட்டும்.

ம : அம்மணி, உங்களைக் கேட்க மறந்தேன்! நானனுப்பிய சிம்மாசனம் வந்து சேர்ந்தா ?

ப : சேர்ந்தது,—மஹாராஜாவின் அரண்மனையிலிருக்கிறது.

ம : அங்குப் போவானேன்? இங்கனுப்பினேனே?

ப : எங்கிருந்தாலென்ன? அதை எப்படியாவது மீட்கவேண்டு மென்னும் எனது கோரிக்கை நிறைவேறிவிட்டது; அவ்வளவுதானே நமக்கு வேண்டியது?

ம : அம்மணி, நாங்கள் விடை பெற்றுக்கொள்ளுகிறோம்; சைனியங்களிறங்கியிருக்குமிடம் சென்று நாளைத்தினம் காலை மஹாராஜாவின் கொலுவிற்கு அப்படியே போகவேண்டியிருக்கிறது —விஜயா, நான் வருகிறேன்.-ராஜப்பிரியா, வா போவோம்; நெடு நேரமாய்விட்டது.

ப : சுகமாய்ப் போய்வாருங்கள், ஜாக்கிரதை.

[மனோஹரன், சத்தியசீலர் ராஜப்பிரியன் போகிறார்கள்]

அம்மட்டும் மனோஹரனிடமிருந்து இவ்வுறுதிமொழி இன்று பெற்றோமே! இல்லாவிட்டால், அவனுக்கிருக்கிற துடிப்பில் கோபம் வந்தால் இன்னது செய்வான் இன்னது செய்யமாட்டான் என்பது நிச்சயமில்லை—விஜயா, வா நாம் உள்ளே செல்வோம். பொழுது போயது.
[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

# இரண்டாவது அங்கம்

## முதல் காட்சி

*இடம்-மஹாராஜாவின் கொலு மண்டபம். காலம்-பகல்.*

*புருஷோத்தம மஹாராஜரான் சிங்காதனத்தின்மீது வசந்த சேனையுடன் வீற்றிருக்கிறார். ஒரு புறமாக வசந்தன், விகடன், அமிர்தகேசரி முதலானோர் உட்காந்திருக்கிறார்கள்.*

*மற்றொருபுறம் ரணவீரகேது முதலான மந்திரி பிரதானிகள் உட்கார்ந்திருக்கிறார்கள். சுற்றிலும் தளகர்த்தர் சபையோர் சூழ்ந்திருக்கிறார்கள். வசந்தசேனையின் பின்புறமாக தாதியர் சாமரம் முதலிய தாங்கி நிற்கின்றனர்.*

ரண : —அதிகமாய்க் கூறுவதிற் பயனென்ன? காலகேய நிவாதகவசர் அத்தனை பேரையும் பற்குனன் ஒருவனாய் நின்று வென்றதுபோல, முத்துவிஜயனது சேனாசமுத்திரம் முற்றையும் நமது மனோஹரர் ஒருவ ர வென்றாரெனக் கூற வேண்டும்! அவரது தாளாண்மையும் தோளாண்மையையும் புயவலிமையையும் சிலை வலிமையையும்பற்றி நான் புகழத் தக்கவனல்லன்; அவரது செய்கைகளே அவற்றைப் பிரசித்தப்படுத்துகின்றன. வாள் யுத்தத்தில் தனக்கு ஒப்புயர்வில்லையென மதித்திருந்த முத்துவிஜயனுடன், பக்க உதவி வேண்டாமெனத் தடுத்து, அந்த வாள் யுத்தமே புரிந்து அவன் மாளும்படிசெய்த சுத்தவீரனை, பதினாறு வயதுடை அறியாப் பாலனென யாவர் உரைப்பாரினி!—அரசே நமது பகைவரையெல்லாம் உலர்ந்த சருகிற்கு அச்கினியென அழியும்படி செய்து, நமது தேசத்திற்கு ஜன்ம விரோதியாகிய பாண்டியனது சிரத்தைக் கொய்து, மீனக்கொடியைத் தாழ்த்தி, வெம்புலிக் கொடியையுயர்த்தி, சோழ நாட்டின் மகிமை உலகெல்லாம் விளங்கும்படி செய்த வீர கண்டையணிந்த தாளனை, வெற்றி மாலை புனைந்த வீரனை, ஜெய லட்சுமி துலங்கும் தோளனை, பகைவர் பணியுஞ் சூரனை, எவர்க்குமஞ்சாத் தீரனை, தாம் மைந்தனாகப்

பெற்றது, தாமும் அடியோமும் இந்நாடும் செய்த ஜன்மாந்தர பலனெனவே கருதவேண்டும்.

எல்லோரும் : சபாஷ்! சபாஷ்!

ரண : ஆகவே மஹாராஜா, இவ்வண்ணம் தமக்கும் எமக்கும் எல்லாருக்கும் இவ்வளவு கீர்த்தியைக் கொணர்ந்த மனோஹரரை இப்பொழுது மரியாதையுடன் அழைப்பதுமன்றி, அவருக்கு இளவரசுப்பட்டமும் தாம் கட்டி எங்களெல்லோரையும் மகிழும்படி செய்வீரெனக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

எல்லோரும் : அப்படியே செய்வீரென நாங்களும் பிரார்த்திக்கிறோம். [எல்லோரும் எழுந்து நிற்கின்றனர்.]

பு : [உட்காரும்படி சைகை செய்து] ரணவீரகேது, சபையோரே, உங்களுடைய வேண்டுகோளுக்கு மெச்சினோம்; இன்றைத்தினம் காலையிலே இதே விஷயத்தைப்பற்றி நமது முதல் மந்திரி சத்தியசீலர் கேட்க அப்பொழுதே அதற்குடன் பட்டு மனோஹரனுக்கு இளவரசு பட்டம் கட்டத் தீர்மானித்திருக்கிறோம்!

எல்லோரும் : மிகவும் சந்தோஷம், மஹாராஜா!

ஒரு மந்திரி : மஹாராஜா, இன்னொரு விஷயத்தைப்பற்றியும் தங்களுக்கு ஒரு மனு செய்துகொள்ளவேண்டியிருக்கிறது. மனோஹரருடன் சென்ற ராஜப்பிரியனுக்கும் தாம் ஏதாவது தக்க மரியாதை செய்ய வேண்டும். நாம் நினைத்தவண்ணமன்றி, அவனும் நமது நாட்டிற்கு ஓர் அரண்போன்ற சுத்த வீரனாகத் தோற்றுகிறான். ராஜப்பிரியன் ஒரு முறை மனோஹரரது உயிரை தனதுயிரை ஹானியிற் படுத்தி, காத்ததாக நாம் கேட்டறிகிறோம். ஆகவே, ராஜப்பிரியனுக்குச் செய்யும் பிரதி மனோஹரருக்கும் திருப்தியாகவேயிருக்கும்.

ரண : ஆம், மஹாராஜா நான் அதைக் கூற மறந்தேன்.
"காலத்தினாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது"

என நாம் அதையும் மறக்கலாகாது. ஆகவே ராஜப்பிரியனுக்கும் ஏதாவது தக்க வெகுமானம் செய்ய வேண்டும்.

பு : அதற்கென்ன அப்படியே செய்வோம்.

வஸ : மகாராஜா! சந்தேகமில்லை, மகாராஜா!

பு : வசந்தா!

வஸ : கொஞ்சங்கூட சந்தேகமேயில்லை, மகாராஜா! நீங்க வேணுமின்னா விகடரெ கேட்டுப் பாருங்கோ.

பு : விகடா! என்ன சமாசாரம் அது?

விக : எனக்கொன்றுந் தெரியாது, மஹாராஜா.

வஸ : அண்ணா! நானு உங்களே ஒண்ணு கேட்டுகிறேன். நம்ப அமிர்தவேசரி ரொம்ப நல்ல பயித்தியரு; அவருக்கும் நல்ல வெருமானம் குடுத்து வீட்டுக்கனுப்பிச்சுடணும். இல்லாப்போனா அவர் கொடுக்க மருந்தெ, அவரே திண்ணுட கட்டளெயிடணும்.

பு : ஸ்! விகடா என்ன செய்கிறாய் அங்கே? வசந்தனைப் பேசாமலிருக்கும்படி பார்த்துக்கொள்.

வஸ : சந்தேகமில்லை மகாராஜா!

விக : ஆமாம், கொஞ்சங்கூட சந்தேகமில்லை, உக்காருங் கையா! [இழுத்து உட்காரவைக்கிறான்.]

ஒரு மந்திரி : [ஒருபுறமாக ரணவீரகேதுவினிடம்] இந்தப் பயித்தியன் தாயாரை மஹாராஜா சிம்மாசனத்தில் உட்கார வைத்துக்கொண்டாரே வழக்கத்துக்கு விரோதமாய், இதையார் கேட்பது?

ரண : [ஒரு புறமாக] ஆமையா, ராஜன் மெச்சினவள் ரம்பை! நாமென்ன செய்யலாம்? எல்லாம் அவளுடைய உத்தரவாயிருக்கிறது, எங்கே நாம் கேட்டதற்கும் குறுக்குசொல்லி விடுகிறாளோ என்று பயந்தேன். அம்மட்டும் அதையாவது மஹாராஜா ஆதங்கமின்றி ஏற்றுக்கொண்டாரே!

ஓர் மந்திரி : அதிருக்கட்டும், சந்தியசீலரெங்கே, இன்னும் வரக் காணோம் சபைக்கு?

ரண : நம் குலகுரு பட்டணத்திற்கு வந்திருப்பதாகக் கேள்விப்பட்டு, மஹாராஜா சத்தியசீலரை

யனுப்பி, சபைக்கு அவரை அழைத்துக்கொண்டு வரும்படி சொல்லியிருக்கிறராம்.

ஒரு சேவகன் வருகிறான்.

சே : பராக்! மந்திரி சத்தியசீலர் அவர்கள் குரு மஹாராஜாவை அழைத்துக்கொண்டு வருகிறார்.

[மஹாராஜா சபையுடன் எழுந்து நிற்கிறார்.]

குரு சத்தியசீலருடன் வருகிறார்.

பு : குருசுவாமி, நமஸ்காரம் —வரவேண்டும், வரவேண்டும்.

[நமஸ்கரிக்க குரு ஆசீர்வதிக்கிறார்.]

தாங்கள் இப்படி எழுந்தருளவேண்டும்,

[குரு உட்கார எல்லோரும் உட்காருகிறார்கள்.]

குரு : புருஷோத்தமா, எல்லாம் நலந்தானா ?

பு : தங்களுடைய கிருபாநோக்கத்தால் எல்லாம் நலந்தான்.

குரு : உன் மகன் மனோஹரனுடைய வெற்றியைக்கேட்டு மிகவும் சந்தோஷப்பட்டோம். சிரஞ்சீவியாக வாழ்வானாக! அவனைப் பார்த்து ஆசீர்வதித்துப் போகவே இங்கெழுந்தருளினோம். பத்மாவதியின் மகன் சுத்த வீரனானது ஓராச்சரியமன்று!—புருஷோத்தமா, உன் பக்கலிலிருப்பது பத்மாவதியல்லவா ?

பு : அல்ல—

குரு : அல்லவா? பின்பு யார் அது? என்ன, கேட்டதற்கு பதில் கூறாது வாளா இருக்கின்றனை ?

பு : வசந்தசேனை.

குரு : அடே, புருஷோத்தமா!—வசந்தசேனையா! —வசந்தசேனையைப்பற்றிச் சில விஷயங்கள் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அடே! இவ்விஷயத்தில் நீ செய்துவந்த தவறுகளையெல்லாம் பொறுத்திருந்தேன். ஆயினும் இதென்ன அதர்மம்? மண அறையிற் கைக்கொள்ளா மங்கையை, நீ இச்சித்திருக்கும்படியான ஒரு ஸ்திரீயை, பலரறிய சிம்மாசனத்தில் உட்கார வைத்துக்கொள்ளு

கிறாயா நீ? இந்த நியாயம் உனக்கு யார் கூறியது? இது வரையிலிப்படி நடந்ததில்லையே! அடே! நானுனக்குக் குருவாயிருந்து இந்த அநியாயம் நடந்தால் உலகத்தார் என்னையன்றோ தூற்றுவார்கள்? வசந்தசேனையை நீ விவாகம் செய்துகொள்ளலாகாதென முன்பே நியாயமெடுத்துக் கூறியிருக்கிறேன். அதுவுமன்றி பட்டத்து ராணி பத்மாவதியிருக்கும்பொழுது வேறொரு ஸ்திரீயை அவளுடைய இடத்தில் நீ எப்படி உட்காரவைத்துக் கொள்ளலாம்? இது என்ன அநீதி! இதுவோ உன்னுடைய செங்கோன் முறைமை?—என்ன சும்மா இருக்கிறாய்?—சத்தியசீலா! நீ மந்திரியாக இங்கிருந்து இவ் விஷயங்களையெல்லாம் நீ எப்படிப்பார்த்துக்கொண்டிருக்கிறாய்? உனக்கும் எங்கே போயது புத்தி?

ச : சுவாமி! என்மீது தாம் முனியலாகாது; இதுவரையில் இம்மாதிரியாக நடந்ததில்லை. இன்றைத்தினம் தம்முடன் வந்த பிறகே இப் புதுமையைக் கண்டேன்! தாம் அவசரப்படலாகாது.—மஹாராஜா, நான் தங்களுடைய ஊழியனாகிய மந்திரி; ஆயினும் மந்திரியினுடைய முதற் கடன் மஹாராஜா ஏதாவது தவறி நடந்தால், தனது சிரசு போவதாயிருந்தபோதிலும், அதை யெடுத்துக் காட்டவேண்டியதே ஆகையால் என்னுடைய கடனை நான் தீர்க்கவேண்டும். பொறுத்தருள வேண்டும்.—மஹாராஜா, தம்முடைய குலகுரு கூறிய வண்ணம் தாம் வசந்தசேனையைச் சிம்மாசனத்தில் உட்கார வைத்துக் கொள்வது நியாயமன்று இது தமது செங்கோன் முறைமைக்கழகன்று. தர்ம சாஸ்திரங்களுக்கெல்லாம் விரோதமாகும். ராஜ தர்மமன்று. க்ஷத்திரியர்கள் ஒரு தாரத்திற்குமேல் பல தாரம் கொள்ளலாம், அன்றியும் இச்சித்துப் பலஸ்திரீகளை வைப்பாக வைத்துக்கொள்ளலாம். ஆயினும் சிம்மாசனத்தில் உட்காரும் பெருமை முதல் மனைவியாகிய பட்டத்து ராணி ஒருத்திக்கே உரியது. ஆகையால் மஹாராஜா, இப்பொழுதும் ஒன்றும் கெட்டுப்போகவில்லை. இப்பொழுதாவது வசந்தசேனையை அந்தப்புரத்திற்கு அனுப்பி விடும் —

(வெளியில் ஜெய பேரிகை முழங்குகிறது)

மனோஹரர் வந்துவிட்டார்!—அரசே! அவர் இக்கோலத்தைக் காண்பது நியாயமன்று; புருஷர்களுள் உத்தமராகிய தமக்கு நான் கூறத் தக்கது இனி என்ன இருக்

கிறது? ஆகவே தரம்,— (மறுபடியும் ஜெய பேரிகை முழங்குகிறது.]

ரணவீரர்கள் இருபுறமும் சூழ்ந்து ஜெயகோஷம் செய்ய, மனோஹரனும் ராஜப்பிரியனும் சேனாதிபதிகள் தளகர்த்தர் புடைசூழவருகிறார்கள்.

எல்லோரும் : [எழுந்து மரியாதை செய்கிறார்கள்.] ஜெய விஜயீபவ!

ம : [சிம்மாசனத்தருகிற் சென்று பிதாவை வணங்குகிறான்.]

பு : [சிம்மாசனம் விட்டுக் கீழே இறங்கி தன் புதல்வனைக் கட்டியணைக்கிறார் ] கண்ணே! மனோஹரா!

சேவகர் : பராக்! பராக்!

பு : மனோஹரா, உனது வெற்றிக்குமெச்சி மகிழ்ந்தேன்! உனது வீரப் பிரதாபம் உலகுள்ளளவும் அழியாது நிலைத்திருக்குமாக! உன் வெற்றிக்குறிகுறியாக இந்த வீர கண்டையை அணிவாயாக! (மனோஹரன் வணக்கத்துடன் வீரகண்டையை வாங்கியணிந்து கொள்கிறான்.)

மனோஹரா, உனக்கு இளவரசு பட்டங் கட்டத் தீர் மானித்தேன் இன்று

(மனோஹரன் பிதாவை வணங்கி, பிறகு குருவை வணங்குகிறான்).

குரு : (ஆசீர்வதித்து) பாண்டிய கோளரியாகிய மனோஹரா! உலகெங்கும் உனது புகழ் பரவ இப்புவியனைத்தும் ஒரு தனிக்குடைக்கீழ் ஆளும் சக்ரவர்த்தியாவாயாக!

(மனோஹரன் சிங்காதனத்திற்கு இன்னும் அருகிற் செல்ல, வசந்தசேனை அதன்மீது வீற்றிருப்பதைக் கண்ணுற்று கோபாவேசத்துடன் வாளை வீசப்போக, சபையோரெல்லாம் நடுநடுங்கி "பொறும்! பொறும்!" எனக் கூவுகின்றனர் )

குரு : மனோஹரா! வேண்டாம்! வேண்டாம்! இது நியாய மன்று பொறு! பொறு!

சத் : (காதில்) அரசே, தம்முடைய தாயாருக்கும் கூறியதை மறவாதீர்! (மனோஹரன் சிறிது நேரம் அசைவற்று நின்று பிறகு தன் வாளை உறையிலிட்டுத் தலை குனிந்த வண்ணம் சபையை விட்டுச் சரேலெனப் போகிறான்; சபையில் பெருங் கூச்சல் உண்டாகிறது.)

சேவகர் : பராக்! குரு மஹாராஜா பேசுகிறார்! இரைய வேண்டாம் எவரும்.

குரு : புருஷோத்தமா! நான் முன்னமே கூறினேனே, கேட்டையா? இதனால் இப்பொழுது என்ன கோலாகலம் நேரிடப் போகிறதோ தெரியாது! இந்நேரம் நீயும் உன் பக்கலிலிருக்கிறவளும் இறக்கவிருந்தீர்களே! நான் தடுத்த படியாலன்றோ மனோஹரன் சற்று கோபம் தணிந்து சென்றான்! அவன் முனிந்தால் மூவுலகும் பொடியாய் விடும், ஜாக்கிரதை! இப்பொழுதே சொன்னேன், இனியாவது என் சொற்படி கேட்டு மனோஹரனைச் சாந்தப் படுத்தினால் நீ இன்னும் கொஞ்ச காலம் சுகமாய் வாழலாம். இல்லாவிடின் உனது நாச காலம் சீக்கிரத்தில் கிட்டியதென நினை; சுத்தவீரனாகிய மனோஹரன் சத்தியத்திற்குட்பட்டவன், ஆகவே பிதாவாயிற்றே யென்று பார்த்தான்போலும், அவன் வாளா சென்றானே என்று நினையாதே. உனது பகைவரை வெற்றி கொண்டு மீண்ட சத்தியவானாகிய உன்மைந்தன் கண்ணினின்றும் ஒரு நீர்த்துளி விழுமாயின், அது உனது ராஜ்யத்தையெல்லாம் நொடிப் பொழுதில் பஸ்மீகரப் படுத்தும் ஆலகால விஷமென எண்ணுவாய்! என்ன சொல்லுகிறாய் இப்பொழுதாவது?—சரி, குல குருவாகிய என் கடனை ஒழித்துவிட்டேன். இனி உன் தலைவிதி! உனது விநாசகாலத்திற்கே உனக்கு இவ்வித விபரீத புத்தி தோற்றுகிறது! நான் இனிமேல் இங்கிருப்பது நியாயமன்று. நான் போகிறேன்.

சத் : சுவாமி, தாங்களிவ்வாறு கோபித்துச் செல்லலாகாது—

குரு : சத்தியசீலா! என்னிடம் நீ பேசுவதிற் பயனில்லை, உன் அரசனுக்குப் புத்தி கூறு, போ!

(கோபத்துடன் போகிறார். சபையில் மறுபடியும் ஆரவாரம் உண்டாகிறது.)

சத் : மஹாராஜா! இப்படி நம் குரு கோபத்துடன் சபையை விட்டுச் செல்வதைத் தாம் சும்மா பார்த்துக்கொண்டிருப்பது நியாயமன்று. இவ்வண்ணம் குலகுருவின் மனத்தை நோகச்செய்தல் நமது ராஜ்யத்திற்குப் பெருங் கேட்டை விளைக்கும்! அதுவுமன்றி வெற்றி பெற்ற வீரனாகிய தமது மைந்தன் மனத்தைத்தாம் திருப்தி செய்வதைவிட்டு இவ்வாறு அவர் கண்ணீருடன் சபையை விட்டுச் செல்லச் செய்தல் தமது செங்கோற் கழகன்று; இது ராஜாங்கத்திற்கு அழியாப் பழியையும் கெடுதியையும் விளைவிக்கும். ஆகவே தாம் எப்படி யாவது இவ்விருவரையும் சமாதானப்படுத்திச் சந்தோஷிக்கச் செய்யவேண்டுமென்று மிகவும் வணக்கத்துடன் பிரார்த்திக்கிறேன்.

பு : மந்திரி, நீசென்று நம் குலகுருவின் கோபத்தைச் சாந்தப் படுத்தி அழைத்துவா நானழைப்பதாகக் கூறி.

(சத்தியசீலர் போகிறார்.)

ரா : மஹாராஜா, நான் தங்களுடைய ராஜாங்கத்தின் உணவை உண்டவனாகையால் தமக்கு வரப்போகிற தீங்கையெடுத்துக் கூறாவிட்டால் பாதகமாம். அதற்காகக் கூறுகிறேன். இப்பொழுதோ மனோஹரர் வருத்தத்துடன் போயிருக்கிறார். தமது ராஜ்யத்துச் சைனியங்களெல்லாம் அவரைத் தெய்வமெனக் கீழ்ப் படிந்து அவர் சொல்லுக்கிரண்டுசொல்லாமல் நடக்கின்றன அவர் கோபங் கொண்டு ஒரு வார்த்தை கூறினபோதிலும், அல்லது அவரை அவமரியாதை செய்தார்களென்பதைக் கேள்விப்பட்டபோதிலும், இப் பட்டணமும் இவ்வரசும் என்ன பாடு படுமோ எனக்குத் தெரியாது! இந்நாட்டு ஜனங்களும் மனோஹரரென்றால் மிகவும் அன்பு பாராட்டி வருகிறார்கள். முன்பே பிரஜைகள் தம்முடைய விஷயத்தில் ஒருவாறாயிருக்கிறார்களென்பது தாம் அறியாத விஷயமன்று. இப் பொழுது மனோஹரரை அவமதித்தது உலர்ந்திருந்த சருகில் எரியிட்டது போலாகும்! பின்பு எது எப்படியாகுமோ தாமே யோசிக்கவேண்டியது. என கடமை ஒழித்துவிட்டேன். பிறகு மஹாராஜாவின் இஷ்டம்.

புரு : ராஜப்பிரியா, நீ சென்று மனோஹரனிடம் நாம் வருவதாகக் கூறி அவனது கோபத்தைச் சற்று தணி, இதோ

நான் வருகிறேன். (ராஜப்பிரியன் போகிறான். புருஷோத்தமன் சரேலென்று இன்னொரு புறமாகப் போகிறார். கோலாசலமாய்ச் சபை கலைகிறது.)

வஸந்த : (தனக்குள்) சரி!—ஐயோ! நான் என்னதப்பு செய்தேன்! எப்படியாவது மஹாராஜாவை இப்பொழுது என் வசப் படுத்தாவிட்டால் என்கதி தீர்ந்தது! மஹாராஜா மனோஹரனை இப்பொழுது பார்க்கும்படி விடலாகாது! (தன் தாதியருடன் போகிறாள்.)

காட்சி முடிகிறது.

## இரண்டாவது காட்சி

இடம்—அரண்மனை நந்தவனம். காலம்—மாலை.

வசந்தன் தலை முழுவதும் பூச்சரங்கள் தொங்க உடல் எல்லாம் மஞ்சள் நீரால் நனைக்கப்பட்டு அலங்கோலமாய் ஓடி வருகிறான்.

வஸ : ஆ! சந்தேகமில்லை! சந்தேகமில்லை! இதான்சரியான இடம்.

[ஒரு கல்லாசனத்தின் கீழ்மறைந்து கொள்கிறான்.]

பத்மாவதிதேவி மெல்ல வருகிறாள்.

ப: கொடுத்து வைத்தவர்கள் அனுபவிக்கிறார்கள், அவர்களைப் பார்த்து நான் பொறாமைப்படலாகாது-இங்குச் சற்று உட்காருவோம்; இங்கொருவரும் வரமாட்டார்களென நினைக்கிறேன்—ஆ! உலகில் நடக்கும் விந்தைகள் விந்தைகள்! மனோஹரனுக்காக எல்லோரும் உற்சவம் கொண்டாடுவது, மனோஹரன் ஒரு பக்கம் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறது! அவனது தாயார் ஒரு பக்கம் துக்கித்துக்கொண்டிருக்கிறது!—ஹா! என் ஜென்மமே ஜன்மம்! எவ்வளவுதான் பொறுப்பது? எதற்கும் ஓர் அளவில்லையா?—ஆயினும் நான் என் பொருட்டு வருந்தவில்லை, என் விதி எனக்குச் சகஜமாய்

விட்டது. என்பொருட்டு மனோஹரன் வருந்துகிறானே, அதைத்தான் பொறுக்க முடியவில்லை. தான்படும் வருத்தத்தை எவரிடமாவது கூறுகிறானா, என்னிடமாவது கூறுகிறானா? ஒன்றுமில்லை; தனக்குள் நினைந்து நினைந்து வருந்துகிறானே! ஐயோ! அவனுடைய கைகால்களை நானல்லவோ கட்டிவிட்டிருக்கிறேன்? இல்லாவிடில் அவன் காலை சபையில் நடந்த காரியத்தைப் பொறுப்பவனா? மஹாராஜாவையும்,—அவளையும்—அரை நொடிப்பொழுதில்கொன்றிருப்பான் என்பதற்குத் தடையில்லை. தான் எனக்காக மீட்ட சிம்மாசனத்தின் மீது, மஹாராஜாவுடன் சமானமாய், நான் உட்கார வேண்டிய இடத்தில், அவள் உட்கார்ந்திருந்ததைக்கண்ட பொழுது, அவனது மனம் என்ன கலங்கிற்றோ! என்ன வருந்தியதோ! சுத்தவீரனாகிய மனோஹரனோ இந்த அவமானத்தைப் பொறுப்பவன்? தன் மானத்தைத் தன்னுயிரினும் மேலாகப் பாவிக்கின்றவன் தனக்கு நேரிட்ட இழிவைக் கண்ணாரக்கண்டும் வாளா இருப்பவனோ அவன்?—கண்ணே! மனோஹரா! நம் அன்னை இவ்வளவு அவமானத்தை நேரிற்கண்டும் பொறுக்கும்படி செய்து, பழி வாங்க வொட்டாமல் வாக்கால் நம்மைக் கட்டி விட்டாளல்லவா என்று நினைந்தே கண்ணீர் விட்டனையோ? கண்ணே! உன் நலத்தைக் கோரியே இவ்வாறு செய்தேன்! நம் அன்னைக்காக இவ்வளவும் பொறுக்கிறோமென நினைத்து சும்மா இரு!—அம்மட்டும் இப்படி ஏதாவது நேரிடுமென்று முன்பே மனோஹரனிடம் இவ்வுறுதிமொழி வாங்கிக்கொண்டது நமததிர்ஷ்டமே! வழக்கப்படி சாயங்காலம் என்னைப் பார்த்துவிட்டுப் போக வருபவன் இன்றைத்தினம் ஏன் வரவில்லை? இவ்வுற்சவங் கொண்டாடுமிடத்திலாவது இருப்பானெனக் கருதி இங்கு வந்து பார்த்துங்காணோம். இன்னும் காலையில்நடந்த விஷயத்தைக்குறித்து நினைந்துவருந்திக்கொண்டிருக்கிறானோ? அல்லது பழி வாங்க ஏதாவது வகைதேடிக்கொண்டிருக்கிறானோ?—என் அனுமதியின்றி அவ்வண்ணம் ஒன்றும் செய்யான்—கண்ணே! மனோஹரா! உனது நலத்திற்கு நானே சத்துருவானேன்போலிருக்கிறதே! ஐயோ! என் வயிற்றிற் பிறந்த கொடுமையோ அது?—ஈசனே! ஈசனே நான் எவ்வளவுதான் பொறுப்பேன்?—[கண்ணீர் விடுகிறாள்.]

[மனோஹரன் பின்புறமாக மெல்ல வந்து பத்மாவதி அருகில் உட்காருகிறான்.]

ப: கண்ணே! மனோஹரா! எங்கே இதுவரையில் உன்னை அரண்மனையிற் காணோம, நான் எங்கும் சுற்றிப் பார்த்தேனே?

ம: நானும் உம்மைத் தேடி அரண்மனையெங்கும் சற்று முன் பாகச் சுற்றி வந்தேன்.

ப: நீ ஒருவேளை வெற்றி வசந்தம் கொண்டாடுமிடத்தில் இருப்பாயென்று இப்பூந்தோட்டத்திற்கு வந்து சுற்றிப் பார்த்தேன், சற்று முன்னே என் கண்ணிற் பட வில்லையே?

ம: நானும் அவ்வாறே நினைத்து உம்மைத் தேடி வந்தேனிது வரையில்.

ப: என்ன சமாசாரம்? ஏதாவது முக்கியமுண்டோ?—என்ன நீ சற்று முன்பாக அழுதுகொண்டிருந்தாற்போலிருக்கி றதே?

ம: அம்மா, என்னை மன்னிக்கவேண்டும். நானும் உங்களை அதே கேள்வி கேட்க வாயைத் திறந்தேன்—அம்மணி, என்ன சமாசாரம் ?

ப: மனோஹரா, ஏன் என்னிடம் ஒளிக்க முயலுகிறாய்? இன்றைத்தினம் காலை கொலு மண்டபத்தில் நடந்த விஷயமெல்லாம் தெரியும் எனக்கு.

ம: யார் சொன்னது ?

ப: யார் சொன்னாலுமென்ன?—சத்தியசீலர் சொன்னார்— கண்ணே, அது என் தலைவிதி, அதற்காக நீ வருத்தப் படுவானேன் ?

ம: அம்மணி, நான் எவ்வாறு பொறுப்பேனிதை? உமக்கு பணிப் பெண்ணாயிருந்த அந்த வசந்தசேனை, மஹா ராஜாவின் அருகில், நான் தமக்காகக்கொணர்ந்த சிங்கா தனத்தில், நீர் உட்கார்ந்திருக்கவேண்டிய இடத்தில் உட் கார்ந்திருப்பதைக் கண்டும், நான் பொறுத்திருக்க வேண்டியதாயிற்றே! அம்மணீ; வீணில் என் கையைக் கட்டி விட்டீரே! எனக்கு நேரிட்ட இந்த அவமானத்தைக் குறித்து நான் வருந்தவில்லை, தமக்கு இதனால் நேரிடும் மானக் கேட்டை நான் எவ்வாறு பொறுப்பேன்? வெற்றி

வீரனாயும் மனோஹரன் தன் தாய்க்கு நேரிட்ட மானக் கேட்டை வாளா பார்த்திருந்தான் என என் பகைவர் கூறுவரே! அதை நான் என் செவியால் எவ்வாறு கேட்டேன்? அம்மணி! அம்மணி! நான் பொறுப்பது இவ்வளவென்று உமக்குத் தெரியாது; அம்மணி, இனி என்னால் பொறுக்க முடியாது!—

மஹாராஜாவின் மனம் பொறுத்ததே, நீ ஏன் பொறுக்கலாகாது ?

என்ன அம்மா? எது எப்படியிருந்தபோதிலும் உமக்குப் பட்டத்து ராணி எனனும் சுதந்திரமும் போய்விடுமா? அம்மா, இனி நான் சற்றுந் தாமதிக்க முடியாது, தயை செய்து முன்பிட்ட கட்டளையை மீட்டுக்கொண்டு எனக்கு உத்தரவளியும். அரைநாழிகையில் இவ்வளவு தொல்லைக்குங் காரணமாயிருக்கும் அந்த வசந்த சேனையை தேவர் வந்து தடுத்தபோதிலும் கொன்று விட்டு வருகிறேன்; பாரும் வேண்டுமென்றால் என் வீரத்தை; ஒரு வார்த்தை சொல்லும் இப் பட்டண முழுவதையும் அதஞ்செய்து வருகிறேன்!

கண்ணே, நீ செய்வாயென்பதற்குச்சந்தேகமென்ன? இவ் வற்பப் பெண்பிள்ளையோ உன்னுடைய கோபத்திற் கெதிர் நிற்பவள்? கண்ணே, ஆயினும் நீ ஒன்று யோசிக்க வேண்டியிருக்கிறது. நான் மஹாராஜாவினுடைய பத்தினி நீ அவர் மகன். நம்மிருவருடைய கடமையும் என்னவெனில் அவருடைய நலத்தையும் சுகத்தையும் எப்பொழுதும் நாட வேண்டியதே; ஆகவே மஹாராஜாவுக்கு இப்படி நடப்பதில் இஷ்டமிருக்குமாயின் அவருடைய இஷ்டத்திற்கு நாம் குறுக்காக ஏதாவது செய்யலாமா? நீ முனிந்து அவளைக் கொன்றால் மஹாராஜா துக்கப்படப் போகிறார். அந்தத் துக்கத்தை நாமும் அனுபவிக்க வேண்டுமன்றோ? அவருக்குத் துக்கம் தரும் படியான காரியத்தை நாம் செய்யலாமா? கண்ணே, இவைகளெல்லாம் உனக்குத் தெரியாத விஷயங்களல்ல. ஆகவே என்னுத்தரவின்றி அவளுக்கு ஒரு தீங்கும் செய்யேனென்று கூறியதை எக்காலும் மறவாதே! இதற்காக நீ வருத்தப்படலாமோ ?

[மனோஹரன் கண்ணீரைத் துடைக்கிறான்.]

ம : இதற்குத்தான் உம்முடைய வயிற்றில் வீணன் நான் ஒருவன் பிறந்தேனோ? பிறந்ததற்கு நல்ல உபகாரம் செய்கிறேன்! நீர் வருந்த நான் பார்த்துக்கொண்டிருப்பது!

ப : நான் வருத்தப்படுகிறேனென்று உனக்கெப்படித் தெரியும்?

ம : நீர் சொல்லாமற்போனாலும் எனக்கு நன்றாகத் தெரியும். அதையறியாவிட்டால் நானுமது மகனோ? [எழுந்திருந்து] இதோ ஒரு வார்த்தை கூறுகிறேன். அம்மணி! என்பிதா வசந்தசேனையை நீக்கி, உம்மிடம் பிரியம் வைத்து, உம்மை வரவழைத்து அதே சிம்மாசனத்தில் உட்கார வைத்துக்கொள்ளும்படிச் செய்யவிட்டால் நான் மனோஹரனன்று, உமக்கு நான் புத்திரனன்று!

ராகம்—அடாணா; தாளம்—ஆதி.

பல்லவி

எண்ணிய சபத மிதுவே-அம்மா நானும்
எண்ணிய சபத மிதுவே !

அநுபல்லவி

எண்ணிலாத் துன்பமுமக் கெவன்செய்தானோ அவனை
இவ்வுலகில் இழிபடச்செய்வேன் என்றுநான் இன்று(எ)

சரணம்

தேசத்திற்றுளிரத்தம் உள்ளமட்டும்
செய்வேன் துரோகியை அநர்த்தம்
ஆகுங்காரியம் அனைத்தும் ஆகட்டும் இதனால்
அன்னையே உம்மனம் அறிந்திடக் கூறிவிட்டேன் (எ)

ப : ஐயோ! கண்ணே! என்ன யோசியாது சபதம் செய்துவிட்டாய்! முடியாத காரியத்தை நீ இவ்வாறு ஏற்றுக் கொள்ளலாமா? வேண்டாம், நான் சொல்வதைக் கேள்,

ப: அம்மணி! என்னுயிருள்ளளவும் முடியாத காரியம் என்று எனக்கொன்றில்லை. இதில் உமக்கு கொஞ்சமும் சந்தேகம் வேண்டாம்.

வ: [கீழிருந்து] ஆஹா! சந்தேகமில்லை!

ப: யார் அது?—என்ன சப்தம் அது?

ம: யார்?—ஒருவரையுங் காணோமே!

(கரத்தில் ஒருமாலையை ஏந்தி விஜயா வருகிறாள்.)

விஜயா! நீயா கூவினாய்?

வி: இல்லையே!—மஹாராஜாவும் சின்ன மாமியும் இந்த வழியாக வருகிறார்களென்று சொல்ல வந்தேன் மாமியுடன்.

ம: விஜயா, இப்படி வா. இன்னொரு முறை அந்த வசந்த சேனையைச் சின்ன மாமியென்று கூறுவாயானால் எனக்குக் கோபம்வரும். சொல்லாதே, தெரியுமா?

வி: இனிமேல் சொல்லவில்லை.

ப: மனோஹரா, என்ன எப்பொழுது பார்த்தாலும் கடு கடுத்தே பேசுகிறாயே விஜயாவுடன்! அதிலும் இப் பொழுது கர்ப்பமாயிருக்கிறாள், பாவம்! இது நியாய மன்று. அவள் என்ன செய்வாள்? இனிமேல் அவளுடன் கடுகடுத்துப் பேசாதே. நான் வருகிறேன். இனி நான் இங்கிருப்பது சரியன்று, நான் அந்தப்புரம் செல்கிறேன் மனோஹரா' நீ கூறியதை மறந்துவிடு அசாத்தியமான காரியம் அது. நீ என்னிடம் கூறியது ஞாபகமிருக் கட்டும்.—விஜயா காத்துக்கொண்டிருக்கிறாள் பார். அவளுடன் மற்றவர்களைப்போல் சந்தோஷமாய் உற்சவங் கொண்டாடிக் காலங்கழி.

[விரைந்து போகிறாள்.]

ம: கண்ணே, கோபித்துக்கொள்ளாதே! ஏதோ அவசரத்தில் கடுமையாய் மொழிந்துவிட்டேன்.

[முத்தம் கொடுக்கிறான்.]

வி: [சிரிப்புடன்] இல்லை, பிராணநாதா, வாரும்.

ம: எங்கே வருவது?

வி : அதோ பாரும் ஆங்காங்குப் பெண்கள் தம் காதலருடன் நீர் நிரம்பிய தடாகங்களிலிறங்கி ஒருவர்மீதொருவர் தண்ணீர் வாரி இறைத்து விளையாடியும், நிலவை வியந்து பூங்கமழ் சோலைகளிலுலாவியும், பூச் செண்டுகளால் ஒருவரையொருவர் அடித்தும், பூ மாலைகளால் ஒருவரையொருவர் கட்டியிழுத்தும், மகரந்தத்தைத் தூவியும், மல்லிகை மலர்களைச் சூடியும், ஒருவர் கண்ணை ஒருவர் பொத்தியும், இன்னும் இப்படி பற்பல விதமாகக் காலங்கழிக்கிறார்களே, தென்றலும் சுகந்தமும் மெல்லனெவீசும் இவ்வழகிய பூஞ்சோலையில்! பிராணநாதா, இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டு தனியாயிருக்க என்மனம் ஒப்புமா? வாரும், நாமும் போய் விளையாடுவோம்.

ம : கண்ணே, என் மனம் ஏதோ ஒரு மாதிரியாக இருக்கிறது இப்பொழுது வினோதத்தின்மீது செல்லவில்லை.

வி : உம்! உம்! நான் எப்பொழுது அழைத்தாலும் இப்படித் தானே! உம்! உம்!

ம : இதென்னடா பெரிய தொந்தரவாயிருக்கிறது!—என்ன செய்யவேண்டும் என்கிறாய்? நானா விளையாடுவது?

வி : அவர்களெல்லாம் என்ன செய்கிறார்கள்? அவர்கள் விளையாடவில்லையோ ?

ம : அவர்களெல்லாம் முழு முண்டங்கள், அவர்களுக்கு வேறொரு வேலையுமில்லை. விஜயா, நான் சொல்வதைக்கேள்—

வி : நான் கேட்கமாட்டேன்.

[முகத்தை முந்தானையால் மூடிக் கொள்கிறாள்.]

ம : அடடா! தீர்ந்தது!—கண்ணே, அழவேண்டாம், இதோ வந்துவிட்டேன். (கண்ணீரைத் துடைத்து) என்னை வெல்லுவதற்கு இந்தப்பாணம் ஒன்று எப்பொழுதும் வைத்துக் கொண்டிருக்கிறாயே!

வி : அதுதான் சரி! வாருமிப்படி.

(பூமாலையால் அவனைக்கட்டி இழுக்கிறாள்.)

ராஜப்பிரியன் ஒரு புறமாக வருகிறான்.

ரா : சபாஷ்! சபாஷ்! இவர்தான் சுத்தவீரர்! சொன்னால் வெட்கக்கேடு; யாவராலும் பிடிபடாத சுத்த வீரதீர னெனப் பெயர் வைத்துக்கொண்டு ஒருவனிதையின் கரத்திலுள்ள பூ மாலையாற் கட்டுண்டீரே!—அடடா! இவர் எங்கிருந்து புறப்பட்டார்!

மறைவிடத்திலிருந்து வசந்தன் வெளியே வருகிறான்.

வ : ஆஹா! சந்தேகமேயில்லை!

ம : வசந்தா!

வ : சந்தேகமேயில்லை! ஏனையா எம்முதுவுமேலே உக்காந் துக்கினு இருந்திங்கோ?

ம : நான் எங்கே உட்கார்ந்துகொண்டிருந்தேன் ?

வ : பின்னெ ஏன் முதுவு நோவுது ?

ரா : நல்ல நியாயமான கேள்வி, பின்பேன் அவர் முதுகு நோகுது? முகுது வளைந்துபோய் விட்டாற்போலிருக் கிறதே, ஐஐயோ!

ம : வசந்தா! என்ன சமாசாரம்? எங்கிருந்தாய் இத்தனை நேரம் ?

வ : நீங்க எங்கே உக்காந்திக்கினு இருந்திங்க ?

ம : இதோ இக் கல்லாசனத்தின் மீது உட்கார்ந்தேன்.

வ : சரிதான்! சந்தேகமில்லை. நானு அதுங்கீழே உக்காந் துக்கினு இருந்தேன். அதுதான் முதுவு நோவுது ஐயையோ! முதுவு வ ளெ ஞ் சி போனாப்போலே இருக்குதே!

ரா : நல்ல நியாயம், சந்தேகமில்லை. ஐயா, அதிருக்கட்டும். இதன் கீழே ஏன் ஒளிந்திருந்தீர்கள் ?

வ : கேக்கமாட்டைங்கோ பின்னே! அதோ அந்த குளத் தண்டே விளையாடரபொண்ணுங்கல்லாம், தண்ணி யாலேயும் பூவாலேயும் என்னெ அடிச்சாபோலே உந்

களையும் அடிச்சிருந்தா, நீங்களும் ஓடியாந்து இங்கே பதுங்கிக்கினுதான் இருப்பிங்கோ.

ம : என்ன தைரியசாலி!

வ : சந்தேகமில்லை! அதிருக்கட்டும்—இப்போ முதுவு நோவுதே அதுக்கென்ன செய்றது? ஐயோ! வளைஞ்சே போச்சே!

ரா : ஆமாமையா! வளைந்தே போய்விட்டது. வசந்தரே! ஆத்தி சூடியிலே "ஙப்போல்வளை" என்பதற்கு அர்த்தம் தெரியுமா உமக்கு?

வ : என்ன, என்ன அர்த்தம்?

ரா : 'ங'வைப்போல் வளைந்திரு என்று அர்த்தம். அந்த மாதிரியாக இருக்கிறதுபோல் தோற்றுகிறதே! "ஙப் போல் வளை"!

வ : ஐயையோ! ஙப்போல்வளே! ஙப்போலவளே!

(அழுகிறான்.)

ரா : ஐயா! அதற்சழுவேண்டாம்: நான் ஒரு யுத்தி சொல்லுகிறேன் அதன்படி கேளும், உலைக்கடவயித்தியன் என்று ஒருவனிருக்கிறான்; அவனிடம் சென்றால் குணப் படுத்தி விடுவான்.

வ : ஆ! ஆ! அப்படியா? எங்கேயிருக்கிறாரு அந்த வயித்தியரு? பேரென்ன? ஒலெக்கட வயித்தியரா?

(எல்லோரும் நகைக்கிறார்கள்)

என்னெப் பாத்தா உங்களுக்கு சிரிப்பாயிருக்குதோ? அப்படியா சங்கதி? இதோ அம்மா வர்ராங்கோ, நீங்கோ பேசிக்கினிருந்ததெயெல்லாம் சொல்லிட்றேன்; ஒலெக்கட வயித்தியரு எங்கேயிருக்கிறாரு இண்ணு சொன்னா சும்மா விட்டுடறேன்; என்னா சொல்றீங்கோ?

(மறுபடியும் நகைக்கிறார்கள்.

ரா : மஹாராஜா வருகிறார் இனி நாம் இங்கிருக்கலாகாது

(போகிறான்.)

புருஷோத்தம மஹாராஜன் வசந்தசேனையுடன் உல்லாசமாய்ப் பேசிக்கொண்டு வருகிறார். சற்றுத் தூரத்தில் தாதியர் சந்தனம், பூக்கள், சுகந்த பொடி முதலியன கரத்திலேந்தி வருகிறார்கள்.

சத்தியசீலர் இன்னும் தூரத்தில் வருகிறார்.

வனை : வசந்தா, இதென்ன கோலம்?

வ : அதிருக்கட்டும் அம்மா! ஒலெக்கட வயித்தியரு எங்கேயிருக்கிறாரு சீக்கிரம் சொல்லுங்க! என்முதுவு வளைஞ்சிப்போச்சி நப்போல்லளெ! சந்தேகமில்லை! கொஞ்சங்கூட சந்தேகமேயில்லை! சீக்கிரம், சொல்லுங்க; கொணப்படுத்தணும்.

(மனோஹரனும் விஜயாவும் நகைக்கிறார்கள்.)

பாருங்கம்மா, திரும்பியும் என்னெப்பார்த்து சிரிக்கிறாங்கோ—சொல்விடட்டுமா? ஆவட்டும்!—அம்மா! உங்களே சிம்மாசனத்திலேயிருந்து தள்ளிட்டு, அவுங்கோ அம்மாளே மஹாராஜா பக்கத்திலே உக்காரவைக்கப் போறாராம் அண்ணாத்தே—ஆவட்டும்!

வனை : யார்? மனோஹரனா?

வ : ஆமாம், அப்படி செய்ரேன் இண்ணு சபதம் பண்ணாரு.

வனை : மும்மூர்த்திகளாலும் முடியாதகாரியம் இந்த வேசி மகனால் முடியப்போகிறதோ? அவன் கெட்டான், நீ வா இப்படி.

ம : என்ன சொல்லினை! என்ன சொல்லினை? (வாளை வீசி) அண்ணா! கேட்டீரா வசந்தசேனை சொன்னதை? — என்ன சும்மா இருக்கிறீர்?—என் தாயாரிடம் தாதியாயிருந்த ஒரு ஸ்திரீ என் அன்னையை வேசியென்றழைப்பதா? என்ன சொல்லுகிறீர்? உம் குலபத்தினியை வேசியென்று ஒருத்தி அழைக்க நீர் கேட்டுக்கொண்டிருப்பதா?—என்ன பேசாமலிருக்கிறீர்?—நீர் உம்முடைய பத்தினியின் மானத்தைக் காப்பாற்றாவிட்

டாலும் நான் என் தாயாரின் மானத்தைக் காப்பாற்ற வேண்டும் என் தாயை வேசியென்று கூறிய நாவை இப்போதே அறுத்தெறிகிறேன்!

[வசந்தசேனையை வெட்ட அருகில் நெருங்குகிறான்.

பு : (மனோஹரன் கரத்தைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு) மனோஹரா! விடு வாளை!—

ம : ஏன் ?

பு : நான் சொன்னபடி கேள்—விடு வாளை!

ம : நான் விடமாட்டேன். உமக்கு வல்லமையிருந்தால் தடுத்துக்கொள்ளும். என் அன்னையைத் தூற்றிய நாவைத் துண்டித்தேவிடுவேன்!

ச : [மனோஹரன் காதில் மெல்ல] மறந்தீரோ உம் அன்னைக்குக் கூறியதை?

ம : [அசைவற்று நின்று] உம்மை யாரையா இங்கு வரச் சொன்னது? நல்ல சனி! (வாளைக் கீழே எறிந்து விட்டு கண்களில் நீர் ததும்பப் போகிறான் புருஷோத்தம மஹாராஜன் ஒருபுறமாகத் தலை குனிந்த வண்ணம் போகிறார்.)

வசை : (விஜயா அழுவது கண்டு) பாசாங்குக் கள்ளி! நீயும் அழ ஆரம்பித்துவிட்டாயா? உன் புருஷனை யார் என்ன செய்துவிட்டார்கள்! காக்கை கர் என்றால் கணவனை அப்பா என்று கட்டிக்கொண்டாளாம்! அழு நீலி! போ அந்தத் துஷ்டனிடம்.

சத் : அம்மா, அழாதேயும்; வாரும்.

(சத்தியசீலர் விஜயாவை அழைத்துச் செல்கிறார்.

வ : அம்மா! வரவர எனக்கு கூனு அதிகமாவுதுபோலேயிருக்குதே! நப்போல்வளே அதிகமாவுதே! வாங்க, சீக்ரம் ஒலெக்கட வயித்தியர்கிட்ட போவணும்.

வசை : அடி! இந்தப் பயித்தியக்காரனை அரண்மனைக்கு இழுத்துக் கொண்டு போங்கள்! அந்த வயித்தியன் ஒருவனிருந்தானே அவனெங்கே? (வசந்தனை தாதியர் அழைத்துச்

செல்கிறார்கள்.] ஆ! நான் இன்றைக்கெழுந்த வேளை என்ன வேளையோ? சிம்மாசனத்தின்மீது மஹாராஜா வுடன் உட்கார்ந்ததும் போதும், நான் பட்ட பாடும் போதும். ஒவ்வொரு வினாடியும் எங்கு என்னுயிர் போகிறதோ என்றல்லவோ நடுங்கியிருந்தேன். மனோ ஹரன் கரத்தினின்றும் இரண்டு முறை நான் தப்பியது தெய்வாதீனந்தான். சிம்மாசனத்திலுட்கார்ந்திருந்த பொழுதும் எரி நெருப்பின்மீதில் உட்கார்ந்திருந்தால் எவ்வளவு சுகமனுபவிக்கலாமோ அவ்வளவு சுகமனுபவித் தேன்! அது போனாற்போகட்டும்.—இப்பொழுது என்னையுமறியாதபடி என் வாயில் என்ன சொல் வந்து விட்டது! சீ! என் புத்தி காலையில் நான் பட்ட சங்கடத் தினால் மழுங்கிற்றென்றே நினைக்கிறேன்! இல்லா விடின் மனோஹரனை வேசி மகனென்னபேனோ? பத்தினியாகிய பத்மாவதியை இவ்வாறு சொல்லு வேனோ? வசந்தனைப்பார்த்து வேசி மகனெனக் கூறின் அது உண்மையாயிருக்கும்! என் சமாசாரத்தைப் பிறர் மேல் அறியாதபடி கூறிவிட்டிருக்கவேண்டும்! என்ன மூடபுத்தி!—இப்பொழுது இவைகளையெல்லாம் யோசித்து வருத்தப்படுவது குணமன்று மஹாராஜா வோ மிகவும் கோபங்கொண்டு போயிருக்கிறார். கோப மிராதோ பிறகு?-இப்பொழுது உடனே நான் சென்றால் கோபம் அதிகரிக்குமேயொழிய தணியாது. சற்று அது வாகத்தணிந்த பிறகு செல்லவேண்டும். ஏது, இனி எல்லாம் சங்கடமாகத்தான் முடியும்போலிருக்கிறது! மனோஹரன் இரண்டு முறையும் நீறுபெற்ற சர்ப்பம் போலடங்கிச் சென்றான் என்னவோ விசேஷம் தெரிய வில்லை—சீ! அவசரப்பட்டு ஒரு வார்த்தை சொல்லி விட்டுப்பிறகு அதன் பொருட்டு எவ்வளவு கஷ்டம் அனுபவிக்கவேண்டியிருக்கிறது! [போகிறாள்.

காட்சி முடிகிறது

## மூன்றாவது காட்சி

இடம் : பத்மாவதியின் அறை  காலம் : காலை.

பத்மாவதி : மஞ்சத்தின்மீது சாய்ந்திருக்க விஜயா அருகில் உட்கார்ந்து கொண்டிருக்கிறாள்.

ப: கண்ணே! விஜயா! இதற்காகவா நீ வருத்தப்படுவது? அவள் ஏதோ பிதற்றினால் அதை ஒரு பொருட்டாக நீ மதித்து அதற்காக வருத்தப்படலாமோ? முகத்தைத் துடைத்துக்கொள், மனோஹரனை என்னவென்று வைதாள்? நடந்த சமாசாரமென்ன?

வி: நீங்களும் இளவரசரும் அங்கே பேசிக்கொண்டிருந்ததை வசந்தன் ஒளிந்திருந்து கேட்டுக்கொண்டிருந்தானாம்—

ப: வசந்தனா?

வி: ஆம், பிறகு மஹாராஜாவும் வசந்தசேனையும் அந்தப் பக்கம் வர வசந்தன் தன் தாயாரிடத்திலே போய், இளவரசர் வசந்தசேனையை அந்த சிம்மாசனத்தி னின்றும் நீக்கி, உம்மை மஹாராஜா அதன்மீது உட்கார வைத்துக்கொள்ளும்படி எப்படியாவது செய்விப்பதாகச் சத்தியஞ்செய்ததாகக் கூறினான். அதைக் கேட்டவுடன் வசந்தசேனை மும்மூர்த்திகளாலும் ஆகாத இக்காரியம்- இந்த—இந்த—இந்த— (அழுகிறாள்.)

ப: கண்ணே, அழாதே! சொன்னபடி கேள்—என்ன சொன்னாள்?

வி: (அழுதுகொண்டே) பிராணநாதரைப்பார்த்து இந்த—இந்த—வேசி மகனால் ஆகப்போகிறதா என்றாள் மாமி!

ப: (திடுக்கிட்டெழுந்து) என்ன சொன்னாள்! என்ன சொன்னாள்?

வி: (என் பிராணநாதரை வேசி மகன் என்று சொன்னாள் மாமி!

ப: அதைக் கேட்டுக்கொண்டு மஹாராஜா சும்மாக்வா இருந்தார்? மனோஹரனும் சும்மாகவா இருந்தான்?

வி : மஹாராஜா தலையைத் திருப்பிக்கொண்டு சும்மாகத் தானிருந்தார். பிராணநாதர் மிகுந்தகோபத்துடன் உம்மை வேசி என்ற நாவை உடனே வெட்டி எறிகிறேன் என்று வசந்தசேனை அருகிற் சென்றார்—

ப : பிறகு? பிறகு ?

வி : அப்பொழுது உடனே மஹாராஜா பிராணநாதர் கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு வாளை விட்டு விடும்படி கட்டளையிட்டார்.

ப : ஆனால் அவளைச் சும்மாகவா விட்டுவிட்டான் மனோ ஹரனும் ?

வி : மஹாராஜா அவ்வாறு கட்டளையிட்டும், நாவை அறுத் தாலொழிய விடேன் என்று பிடிவாதமாகக் கூறினார். பிறகு சத்தியசீலர் ஏதோகாதிற்கூற, உடனே வாளை யெறிந்துவிட்டுக் கண்களில் நீர் தாரை தாரையாய்ச் சொரிய சரேலென்று போய்விட்டார்.

ப : கண்ணே! மனோஹரா! நீயே புத்திரசிகாமணி!-விஜயா, பிறகு மஹாராஜா என்ன செய்தார் ?

வி : அவரும் ஒருவருடனும் பேசாமலே இன்னொருபுறமாகப் போய்விட்டார்.

ப : அவ்வளவாவது என் மானத்திற்காகச் செய்தாரே, வசந்த சேனையை அவள் சொன்னதற்காக மெச்சிக் கொள் ளாமல்! இதுவும் என் பாக்கியந்தான்! இன்னும் யாராவ திருந்தார்களா அவ்விடத்தில், இதையெல்லாம் கேட்டுக் கொண்டு ?

வி : ஆம் சத்தியசீலர் இருந்தார்.

ப : சத்தியசீலர்! அவர் என்ன செய்தார்? அவரும் வாளா இருந்துவிட்டாரோ ?

வி : ஆமாம,

ப : ஆமாம் அவராவது நியாயம் அநியாயம் மஹாராஜா வுக்கு எடுத்துரைக்க லாகாதா? மனோஹரன்தான் என் வாக்கால் கட்டுண்டிருக்கிறான்; மஹாராஜாவோ,

கேட்கவேண்டியதில்லை. இந்த சத்தியசீலருக்கு எங்கே போயது? சீ! அவர்களையெல்லாம் வெறுத்தென்ன பயன்? என் தலையெழுத்தை நோகவேண்டும்.— [மஞ்சத்தின் மீது சாய்கிறாள்.] ஐயோ! இந்த நிலைமைக்கும் வந்துவிட்டேனா நான்? இப்படியுமிருந்ததோ என் விதி! என்னை என் கணவர் முன்னிலையிலேயே, ஒருத்தி—இம்மாதிரியாகப் பேசவும் நேர்ந்ததே! மஹாராஜாவினுடைய உள்ளந்தான் எவ்வண்ணம் பொறுத்ததோ? எப்படியிருந்தபோதிலும் நான் அவருடைய பத்தினியன்றோ? எனக்கு வரும் இழி சொல் அவரையும்சாருமன்றோ? ஈசனே!—

வி : [பத்மாவதியின் கண்ணீரைத் துடைத்து] மாமி, அழ வேண்டாம். மாமி, நீங்கள் கண்ணீர் விடுவதை நான் பார்த்து எப்படி சகிப்பேன்?

ப : எனக்காக நான் வருந்தவில்லை! அச் சொல்லைக் கேட்ட பொழுது மனோஹரனது மனம் எவ்வாறு பற்றியெரிந்திருக்க வேண்டும்! இம் மானக்கேட்டைச் செவியுறக் கேட்டும் நாம் பழிவாங்கா வண்ணம் நமது தாயார் நம்மைப் பந்தித்துவிட்டனளே என்று என்ன வருந்தியிருப்பான்!—மனோஹரா மனோஹரா! சீ! இப்பழிச் சொல்லைக் கேட்டபிறகும் நான் உயிரோடிருக்கிறேனே! மனோஹரா! உன் பொருட்டே நான் உயிர் தரித்திருக்கிறேன், இல்லாவிடின் உடனே என் உயிரை விட்டிருப்பேன்—மனோஹரனிடம் இப்பொழுது ஒரு வார்த்தை கூறுவேனாயின் மும்மூர்த்திகள் வந்து தடுத்த போதிலும் வசந்தசேனையைக் கொல்வான் என்பதற்குச் சந்தேகமில்லை. இப்படிப்பட்ட அதிசூரனை நான் மகனாகப் பெற்றும் இவ்வசையை நான் பொறுக்க வேண்டிவந்ததே! மனோஹரனுக்கு விடையளிக்கவா வசந்தசேனையைக் கொல்லும்படி?—சீ! என்ன என்னை நானே மறந்தேன்! அப்படி செய்வேனாயின் நான் இது வரையில் பொறுத்திருந்த தெல்லாம் என்ன பிரயோஜனமாகும்: இது எனக்கு ஏற்றதன்று. மஹாராஜா தான் ஏதோ குற்றம் செய்தால் நானும ஒரு குற்றம் செய்ய வேண்டுமோ? சீ! இவ்வண்ணம் என மனத்திலுதித்ததே தவறு! வருவனவெல்லாம் வரட்டும், இதைவிட இன்னும் கேடு வேறென்ன சம்பவிக்கப்போகிறதெனக்கு? இதைப் பொறுத்தவள் எதையும் பொறுப்பேன்! ஆயினும் மனோஹரன் வருந்திக்கொண்டிருப்பான். அவனுக்கு ஏதாவது சமாதானம் சொல்ல வேண்டும்.—விஜயா, மனோஹரன் எங்கே?

வி : நான் சற்று முன்பாகப் பார்த்தபொழுது காவிரியோரத்தில் தன் தலையை இடது கையில் தாழ்த்திக்கொண்டு நதி நீரை உற்றுப் பார்த்த வண்ணமாய் உட்கார்ந்திருந்தார். நான் எதிரில் போய் சற்று நேரம் நின்றும், என்னைத் திரும்பிப் பார்க்கவில்லை, எங்கே கோபித்துக் கொள்ளப்போகிறாரோ என்று நான் பேசாமல் திரும்பி வந்துவிட்டேன். இப்பொழுது அங்கே இருக்கிறாரோ என்னவோ தெரியாது.

ப : நாம் அங்கே போவோம் வா—இல்லை சற்றுப் பொறு இதோ சத்தியசீலருக்கு ஒரு நிருபம் எழுதிவிட்டு வருகிறேன். அவர் எவ்வாறு இதையெல்லாம் பார்த்துக் கொண்டு சும்மா இருந்தாரோ கேட்போம்.

[ஒரு பெட்டியினின்றும் ஓலையும் எழுதுகோலும் எடுத்து ஒரு நிருபம் எழுதுகிறாள்.]

விஜயா, நீ சென்று நீலவேணியை அழைத்துவா,

[விஜயா போகிறாள்.]

ஒரு யோசனை தோற்றுகிறதெனக்கு; நேரில் மஹாராஜாவுக்கே ஒரு நிருபம் எழுதிக் கேட்போம். எப்படியிருந்தபோதிலும் அக்கினி சாட்சியாக மணந்த மனைவி நான் என்பதை அவர் மறந்திருக்கமாட்டார்! அவரை நான் பாராவிட்டாலும் ஏன் எழுதிக் கேட்கலாகாது? என்ன நியாயந்தான் சொல்லுகிறாரோ பார்ப்போம்.

[இன்னொரு நிருபம் எழுதுகிறாள் ]

சீ! என்ன! என் கண்ணீர் மறைக்கிறது!—

விஜயாவும் நீலவேணியும் வருகிறார்கள்.

நீ : அம்மணி, சற்று வேலையாகப் போயிருந்தேன், மன்னிக்க வேண்டும்,

ப : சரிதான்; நீலவேணி, நீயே இதைச் செய்யத்தக்கவள் இதோ இரண்டு நிருபங்களிருக்கின்றன இந்த மேல் விலாசத்தின்படி இதை மஹாராஜாவுக்கும், இதை சத்தியசீலருக்குங் கொடுத்துவிடு. மஹாராஜாவுக்குக் கொடுக்கும்பொழுது வேறொருவருமில்லாத சமயம் பார்த்துக்கொடு. இதில் ஒன்றும் தவறில்லை. ஆயினும் ஒருவருமறியாதபடி கொடு, தெரியுமா ?

நீ : அம்மணி, அப்படியே செய்கிறேன். தங்களுடைய வார்த்தைக்குக் குறுக்குண்டோ? எப்படியாவது மஹாராஜாவும் தாங்களும் ஒருமைப்பட்டுச் சுகமாய் வாழ்ந்தால் போதுமெனக்கு.

ப : நீலவேணி, அப்படியொன்றுமில்லை. இது வேறு சமாசாரம். நான் சொன்னபடி செய், போ சீக்கிரம்

நீ : அப்படியே ஆகட்டும், அம்மா. [போகிறாள்.]

ப : நாமினி போவோம் வா. [போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

## நான்காவது காட்சி

இடம்—அரண்மனையில் ஒரு மூலை. காலம்—காலை.

விகடன் தள்ளாடிக்கொண்டு வருகிறான்.

விக : இதென்னமோ சமாச்சாரம் தெரியலே? என்னமோ லேகியம் தித்தீச்சிக்கினு இருந்துதுண்ணு எடுத்து சாப்பிட்டுட்டேன் வயித்தியர் பொட்டியிலேயிருந்து, அது நம்மெ தள்ளுது. பூர்ணாதி லேக்யம்—நல்ல லேக்யம்! [கீழே விழுகிறான்.]

வசந்தன் ஓடி வருகிறான்.

வ : ஐயா! ஐயா! விகடரே! எழுந்திருங்கையா!

விக : எங்கே? லேக்யம்!

வ : இங்கே வயித்தியரு வந்து கேட்டா, நானு இங்கே இல்லே இண்ணு சொல்லிடுங்கோ—தெரியுமா? சந்தேகமில்லை. நானு இங்கே ஒளிச்சிக்கிறே!

[மூலையில் ஒளிந்துகொள்கிறான்.

விக : சர்தான், சர்தான்—ரொம்ப நண்ணா இருக்குது லேக்யம்!

அமிர்தகேசரி வருகிறான்.

அ : எங்கே காணோம்? இங்கேதான் ஓடிவந்தாற்போலிருக்கிறது. இதோ விகடர் படுத்திருக்கிறார். இவரைக் கேட்போம்.—ஐயா, விகடரே,—

விக : லேக்யம்! லேக்யம்!—

அ : என்ன லேக்யம்! ஐயா, சற்றெழுந்திருமையா! பகற் பொழுதில் தூங்கலாகாதென்று தன்வந்திரி கௌசிகர் கலைக்கோட்டுமுனி முதலிய பெரியோர்கள் வயித்திய சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறார்களையா; எழுந் திரும், இதென்ன தூக்கம்?

விக : அல்லாம் பூர்ணாதி லேக்யந்தா, போங்கையா!

அ : பூரணாதி லேகியந்தானா! என்ன விளையாடுகிறீர்? வசந்தர் எங்கே, பார்த்தீரா?

விக : என்னாயா தொந்தரவு பண்றிங்கோ? என்னாயா வோணும்?

அ : வசந்தர் எங்கே ?

அ : அல்லாம் அந்த வயித்தியரு பொட்டியிலேயிருக்கும், போயி நீங்களும் சாப்பிட்டுவாங்க.

அ : ஓஹோ! நம்முடைய பெட்டியிலிருந்து பூரணாதி லேகியத்தைத் திருடிச் சாப்பிட்டுவிட்டு மயங்கிக் கிடக்கிறார் போலிருக்கிறது!—ஐயா விகடரே, அது போனாற்போகிறது, வசந்தர் எங்கே?

விக : வசந்தனா? அதோ அங்கே இல்லே, போயி பாத்துக் குங்கோ வேணுமின்னா! [மறுபடியும் படுத்துக்கொள் கிறான்.]

அ : இதென்ன கஷ்டம்! அங்கே போய்ப் பார்ப்போ மெதற்கும்.

வ : (மூலையிலிருந்து) ஐயா! விகடரே! அந்த வயித்தியரு வந்தா இல்லேயின்னு சொல்லிடுங்கோ, தெரியுமா?

அ : ஓ! ஆசாமி உள்ளேயிருக்கிறார்—வாருமையா வெளியே!

வ : வரட்டுமா?

அ : வாரும்.

வ : [வெளியே வந்து] ஏ! நீங்களா?

அ : நான்தான், தயவு செய்து இந்த மருந்தைச் சாப்பிட்டு விடுங்கள்.

வ : அதிருக்கட்டுமையா!—ஐயா விகடரே! நீங்கதானே என்னெ காம்பிச்சி குடுத்திங்கோ! சந்தேகமில்லை!

அ : கொஞ்சம் மருந்தைப் புசித்துவிடுங்கள்.

வ : இவரெ கேக்காதே. நானு மருந்து சாப்பிடமாட்டேட—ஐயா, விகடரே, இந்த மருந்து சாப்பிடலாமா?

விக : என்னா மருந்து, லேக்யமா?

அ : அவர் மயக்கமாய்க் கிடக்கிறார், அவரைக் கேட்பதில் பிரயோஜனமில்லை, ஐயா.

வ : என்ன மருந்து? சொல்லுங்க ஐயா—ஓகோ! என்ன மானா வெஷங் கொடுத்துக் கொண்ணுடப் பாக்கறிங்களோ? வயித்தியரே! பயித்தரெ அஞ்சி, பத்திரம்!

அ : ஈசனே! ஜகதீசனே!—இது நெல்லிக்கனி லேகியம்.

வ : ஐயா, விகடரே, நெல்லிக் கண்ணி லேக்யமாம். சாப்டலாமா?

விக : சீசீ! அதெல்லாம் ஒதவாத், பூர்ணாதி லேக்யும் சாப்பிடுங்கோ, பலே சொகுசு!

(மறுபடியும் கீழே விழுகிறான்)

வ : ஐயா, இது வாணாம்; பூர்ணாதி லேக்யம் கொடுத்தா கொடுங்கோ, இது வாணாம்.

அ : ஐயோ! பூரணாதியா? அதைச் சாப்பிட்டுவிட்டுதான் மயக்கம் பிடித்துக் கிடக்கிறாரே இவர், தெரியவில்லையா? வேண்டாமையா, இதைப் புசியும்.

வ : இது வாணாம், பூர்ணாதிதான் வோணும். சந்தேகமில்லை! சந்தேகமில்லை!

(ஒருவரையொருவர் சுற்றியோடி முடிவில் இருவருமாக விகடன் பேரில் விழ, விகடன் எழுந்திருந்து இவரையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு கூச்சலிடுகிறான்.)

வசந்தசேனை வருகிறாள்.

வஸை : இதென்ன! மஹாராஜா இருக்குமிடத்தருகில் இவ்வளவு கூச்சலென்ன? இங்கு யாரும் காவலாளிகளில்லையா? உங்களுக்கென்ன வேலை இங்கே? போங்கள் வெளியே!

(வசந்தன் ஒருபுறமாக ஓடிப்போகிறான்.)

விக : அண்ணாத்தெ, நம்மெ தூக்கிக்கினு போங்க, அண்ணாத்தே!

(அமிர்தகேசரியைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ள அமிர்தகேசரி அவனை மெல்ல அழைத்துச் செல்கிறான்.)

வனை : (ஆசனத்தில் உட்கார்ந்துகொண்டு) எனக்கின்னது செய்கிறதென்று தோன்றவில்லை. ஒரு புறம் உடனே மஹாராஜாவைப் போய்ப் பார்க்கலாமாவென்று தோற்றுகிறது; ஒரு புறம் பார்க்கலாகாது என்று தோற்றுகிறது. இப்பொழுது பார்த்தால் ஒருவேளை என்னைக் கண்டதும் கோபம் முன்னிலும் அதிகரிக்குமோ என்னவோ? பாராவிட்டாலோ, அப்படியே இவரது மனம் திரும்பாது நிலைத்துவிட்டால் என் செய்வது?

நீலவேணி வருகிறாள்.

நீ : அம்மா, உம்மை அந்தப்புரமெங்கும் தேடியலைந்துவிட்டல்லவோ வந்தேன்.

வனை : என்னவோ முக்கியசமாசாரமிருக்கவேண்டும்!—என்ன சீக்ரம் சொல்.

நீ : பத்மாவதி மஹாராஜாவுக்கு ஒரு நிருபம் எழுதியிருக்கிறார்கள்.

வனை : பத்மாவதியா? எங்கே அது? மஹாராஜாவிடம் போய்ச் சேர்ந்துவிட்டதா அது ?

நீ : இல்லை, என்னிடத்தில்தானிருக்கிறது.

வனை : கொடு இப்படி! கொடு இப்படி!

நீ : கொடுத்தால் என்ன தருகிறீர்கள் எனக்கு ?

வனை : என்ன வேண்டுமென்றாலும் தருகிறேன், கொடு இப்படி!

[நிருபத்தை வாங்கிப் பிரித்து வாசிக்கிறாள்.]

"பிராணநாதா நான் ஏன் தங்களைப் பிராணநாதா என்று அழைக்கலாகாது? எது எப்படியிருந்தபோதிலும் தாம் எனது பிராணநாதர் என்பதை நான் எனதுயிருள்ளளவும் மறவேன். பிராணநாதா! நான் எவ்வளவு துயரந்தான் பொறுப்பேன்? நான் பொறுத்ததெல்லாம் போதாதோ? தமக்குப்பிறந்த குமாரனை ஒருத்தி வேசி மகனென்று கூறத்தாம் சும்மா கேட்டுக்கொண்டிருத்தல் நியாயமா? இப்பழிச் சொல் தம்மையும்

சார்ந்ததன்றோ? இது நியாயந்தானா! எல்லாமுணர்ந்த தமக்கு நான் என்ன கூறக்கூடும்? எல்லாம் தம்முடைய சித்தம். இங்ஙனம்—பத்மாவதி''—நீலவேணி, அதென்ன நிருபம்?

நீ : இதுவும் பத்மாவதி எழுதியதுதான். சத்தியசீலருக்குக் கொடுக்கும்படி கட்டளையிட்டார்கள்.

வசந் : அப்படியா? கொடு இப்படி அதையும்.

நீ : (மெல்லிய குரலுடன்) மஹாராஜாவின் நிருபத்தை ஒருவருமறியாத சமயம் பார்த்துக் கொடுக்கும்படி கட்டளையிட்டார்கள்.

வசந் : உம்! அப்படியா?—இதிலென்ன எழுதியிருக்கிறது பார்ப்போம்— [நிருபத்தைப் பிரித்து வாசிக்கிறாள்.]

''ஐயா, தாம் இந்த ராஜ்யத்தில் உயிருடனிருக்கும் பொழுது இப்படிப்பட்ட அநியாயம் நடக்கலாமா? மனோஹரனை ஒருத்திவேசிமகன் எனக்கூறினால் தாம் அதனைக்கேட்டுக்கொண்டுவாளாயிருப்பதா? இதுவோ உம்முடைய நீதி? மிகவும் அழகாயிருக்கிறது! இதுவரையில் நற்பெயரெடுத்தது எதற்கு லாபம்? இது ஒன்றால் உமது புகழெல்லாம் அழியுமன்றோ? தாம் இவ்வசையைப் பொறுத்துக் கேட்டுக்கொண்டிருந்ததற்கு சீக்கிரம் நியாயமறிய விரும்புகிறேன். இங்ஙனம், பத்மாவதி''—ஆ ஹா! வசந்தசேனை அதைரியப்படாதே!—சற்று முன்பாக இனி என்ன இருக்கிறதென ஏங்கியிருந்தேனல்லவா? தெய்வம் என்னுடைய பங்கில் இருக்கிறதென்பதற்குச் சந்தேகமில்லை.—நல்லயோசனை! இந்த யோசனை எனக்கன்றி வேறு யாருக்குத் தோன்றும்?

[ரகசியமாக நிருபங்களை மாற்றி விடுகிறாள்.]

நீலவேணி, உன்னையொத்த புத்திசாலிகளுடைய உதவியிருக்குமளவும் எனக்கென்ன குறை?

நீ : அம்மா, எனக்கென்ன புத்தியிருக்கிறதம்மா?

வசந் : அப்படியல்ல. உன் புத்தி உனக்குத்தெரியுமோ? பிறருக்கல்லவோ தெரியும்; உன்னுடன் பல நாள் பழகி வந்த எனக்கல்லவோ தெரியும்.

நீ : எல்லாம் உம்முடைய பாக்யந்தான்.

வனை : நீலவேணி, உனக்கேதாவது விருப்பமிருந்தால் கேள், தருகிறேன்.

நீ : எனக்கென்ன அம்மா, வேண்டும்?—என் தமயனாருக்கு விவாகம் நிச்சயித்திருக்கிறார்கள்; அதற்கு நூறு வராகன் செலவு பிடிக்கும்—

வனை : ஆயிரம் வராகன் தருகிறேன்; அதற்காக நீ சிந்தைப்பட வேண்டாம்.

நீ : எல்லாம் தங்களுடைய பாக்கியமே!

வனை : நீலவேணி, நீ இதுவரையில் எனக்குச் செய்துவந்த உபகாரமெல்லாம் ஒரு பெரிதன்று; இப்பொழுது நீ எனக்கு ஒரு பெரிய உதவி செய்யவேண்டும். செய்கிறாயா ?

நீ : அம்மணி, அதென்ன அப்படிக் கேட்கிறீர்களே! சொல்லும், இந்த நொடியே செய்கிறேன்.

வனை : சந்தேகமென்ன!—நீலவேணி, நான் இப்பொழுது புறப்பட்டுப் போய் மஹாராஜாவிடம் பேசிக்கொண்டிருக்கிறேன். நீ தூரத்தில் அவருக்குத் தெரியாதபடி வந்திருக்கவேண்டும், நான் ஒரு ஸைகை செய்கிறேன். அப்பொழுது உடனே நீ அவரெதிரில் வந்து இந்நிருபத்தை அவருக்குக் கொடுக்கவேண்டும், அவருடைய மேலவிலாசம் எழுதியிருக்கிறது. பார்த்தையா இதை. கொடுத்து, சற்று தூரத்தில் நின்றுகொண்டிரு. நான் "ஏன் நிற்கிறாய்? போ" என்று கட்டளையிடுவேன். உடனே, போகும்பொழுது, தற்செயலாய் இந்நிருபம் உன்னிடமிருந்து கீழே விழுவதுபோல் இதை நழுவவிடவேண்டும், அப்பொழுது மஹாராஜாவாவது நானாவது "அது என்ன?" வென்று கேட்கநேரிடும். உடனே மிகவும் பயந்தவள்போல் பாசாங்கு செய்து இதை ஒருவருமறியாதபடி பத்மாவதிசத்தியசீலரிடம் கொடுக்கும்படி கட்டளையிட்டதாக அவரிடம் கூறவேண்டும். பிறகு நடக்கவேண்டிய காரியங்களை நான் பார்த்துக்கொள்ளுகிறேன். மஹாராஜா இந் நிருபத்தையும் தன்னிடம் கொடுக்கும்படி கேட்டால் முதலில் இஷ்டமில்லாதவள் போல் பாவித்து, பிறகு கொடுத்துவிடு, தெரியுமா ?

நீ : அம்மா, அப்படியே செய்கிறேன். இதில் அணுவளவும் பிசகேன்.

வனை : ஆம், புத்திசாலியாகிய உனக்கு இன்னும் நான் கூற வேண்டியதில்லை. மறவாதே; நான் சொன்னபடி செய். நான் மஹாராஜாவிடம் போகிறேன்.

[போகிறாள்.]

நீ : நம்மையே என்ன ஏமாற்றப்பார்க்கிறாள் இந்த வசந்த சேனை! இவளும் என்னைப்போல் தாதியாயிருந்தவள் தானே! தனக்கிருக்கிற புத்தி எனக்கும் இருக்குமென்று நினைக்கவில்லை போலும்? ஆயினும் அதிர்ஷ்ட வசத்தால் மஹாராணியாய் விட்டாள்; அவள் சொற்படி நான் நடக்கவேண்டியதுதானே? எப்படியும் ஆயிரம் வராகன் பெறும் விதத்தைப் பார்க்கவேண்டும்!

[போகிறாள்.]

காட்சி முடிகிறது

# மூன்றாவது அங்கம்

## முதல் காட்சி

இடம்—அரண்மனையில் அந்தரங்கமான ஓர் அறை—காலம்—பகல்

புருஷோத்தமராஜன்—தனக்குத்தானே பேசிக்கொண்டிருக்கிறார்.

பு : ஐயோ ஒரு ஸ்திரீயினுடைய வலையிலகப்பட்டு புருஷோத்தமனுடைய புத்தியும் கீர்த்தியும் இவ்வாறு மழுங்கிப் போவதா? இல்லாவிடில், பத்மாவதியை வேசியென வசந்தசேனை கூறும்பொழுது, நான் சும்மா கேட்டுக்கொண்டிருப்பேனா? எனக்கு எவ்வளவோ கோபம் பிறந்தும் அவளது முகத்தை நோக்கியபொழுது எல்லாம் பறந்ததே! இனி மனோஹரனை நான் முகமெடுத்து எவ்வாறு காண்பது? இப்படிப்பட்ட நிகரற்ற வீரனை நான் மகனாகப் பெற்றும், அவனுடன் நான் மற்ற தந்தையரைப்போல் இன்புறுவதற் கில்லையே! இந்த வசந்தசேனையின்பொருட்டு மனோஹரன் வேசிமகன் என்கிற பட்டப்பெயர் தரிக்கும்படி நேரிட்டதே! சீ! இவளது மகிமையே மகிமை! ஒரு அற்பத் தாதியாயிருந்தவளுக்கு நம்மால் இவ்வளவு மஹத்துவம் வந்துவிட்டதல்லவா? ஆயினும் இவள், தன்னுடைய நிலைமை இன்னதென்றறிந்து அதன்படி நடவாமல், உத்தம ஸ்திரீயாகிய பத்மாவதியை இவ்வாறு தூற்றலாமா? மனோஹரன் வீரர்க்குள் வீரன்! அவனை வேசி மகனென அழைக்கலாமா? சீ இப்படிப்பட்ட ஸ்திரீயின் வலையிலகப்பட்டு இப்பதினாறு வருடங்களையும் கழித்துவிட்டோமே வீணில்! சிறு வயதில் பின் வருவதைப்பற்றி யோசிக்கிறோமா?—ஐயோ! பத்மாவதி என்னைப் பார்ப்பதுமில்லை. மனோஹரனும் மகத்தான கோபங்கொண்டிருக்கிறான். பிரஜைகளெல்லாம் என்னை வெறுக்கிறார்கள். இனி அதர்ம வழியில் நான் செல்வது நியாயமன்று. இனிமேலாவது திருந்தி நற்பெயரெடுக்கவேண்டும் இவ்வசந்தசேனையைப் பார்ப்பதும் தவறு!—ஆம்! ஆம் வீண் தீர்மானங்கள்! வீண் எண்ணங்கள்! ஐயோ! என் மனவுறுதியை நான் என்னென்றிகழ்

வேன்! இத்தீர்மானங்களெல்லாம் வசந்தசேனையின் பாதத்திலணிந்த கிண்கிணிச் சப்தத்தைக் கேட்கும் பொழுதே எங்கோ பறக்கின்றன! என் நல்லறிவெல்லாம் அவளது முகப்பார்வை பட்டவுடனே எங்கோ ஓடி ஒளிக்கிறதே, இல்லாவிடின் அவளைச் சிம்மாசனத்தில், பலரறிய சபையில் எனதருகில், உட்காரவைத்துக் கொள்வேனோ? இல்லாவிடின் என் சொந்த மனைவியை அவள் வேசியெனக் கூறவுங் கேட்டிருப் பேனோ?—ஜகதீசனே! உலகாளும் என்னை இவள் ஆள் கின்றனளே!—சீ! இதென்ன வாழ்வு? எல்லோரும் நகையார்களா? இனியாவது இவளது வலையில் படாது தப்பிப் பிழைக்கவேண்டும்! [உட்காருகிறார்]

வசந்தசேனை மெல்ல வருகிறாள்.

உன்னை யார் இங்கு வரச்சொன்னது? போ, இனி என் முன் வரவேண்டாம்!

வனை : பிராணநாதா, இனி நான் வரவில்லை இதுதான் கடைசி முறை நான் இப்புவியில் தம்மைக் கண்ணாற் பார்க்கப்போகிறது. பிராணநாதா, இந்தப் பதினாறு வருஷகாலமாகத் தமக்கு மனைவியாயிருந்ததற்காக இப்பொழுதுதான் தம்மை நான் ஒரு வரங்கேட் கிறேன்.—என்மீது கருணை புரிந்து இவ்வாளால் என்னைக் கொன்றுவிடும், தமது அழகியகரத்தால். நான் வேண்டிக்கொள்வது இவ்வளவே! இதாவது செய்யலாகாதா?

பு : வசந்தசேனை! இதென்ன இது?

வனை : பிராணநாதா, நான் இனி உயிர்வாழ்வேன், நான் வாய்தவறி ஏதோ கூறிவிட்டதற்காக இப்படியும் தண்டிக்கலாமா? பிராணநாதா, இனி அடியாள் இறந்த பின் உம்மை எதாவது வேண்டப்போகிறேனோ? இதுவே எனது கடைசிவேண்டுகோள்! இவ்வளவு மனமிரங்கி என் னைக் கொன்று என் துயரத்தைப் போக்கலாகாதா?

பு : வசந்தசேனை, நீ ஏன் இறக்கவேண்டும்?

வனை : பிராணநாதா, அதற்குக் காரணமுங் கேட்க வேண்டுமோ? இவ்வுடலை நான் தரிப்பதே தமது

இன்பத்தின்பொருட்டு; என்னால் தமக்குத் துன்பம் நேரிடும் பட்சத்தில், இவ்வுடல் இருப்பானேன்?

[அழுகிறாள்.]

பு : வசந்தசேனை, அழாதே! அழவேண்டாம்!!

வசனை : பிராணநாதா, நான் இறப்பதற்காக அழவில்லை. நான் போன பிறகு தமது சுகத்தையெல்லாம் என்னைப் போல் யார்பார்த்துக்கொள்ளப் போகிறார்களென்றே எனக்குக் கண்ணீர் வருகிறது!

பு : வசந்தசேனை, இறப்பதைக் குறித்து இப்பொழுது யோசிக்க வேண்டியதில்லை. அழாதே! நான் சொல்வதைக் கேள்! இப்படி உட்கார்—வசந்தசேனை, எதெப்படியிருந்தபோதிலும் மனோஹரனையும் மத்மாவதியையும் நீ அவ்வாறு தூற்றலாமா?

வசனை : பிராணநாதா, நான் தான் ஏதோ வாய் தவறிச் சொல்லிவிட்டேனென்று ஏற்றுக்கொள்ளுகிறேனே! இன்னுமென்ன? இவ்வேதனையை அனுபவிப்பதைவிட நான் இறந்தலே நலம்!

பு : கண்ணே, போனது போகட்டும். இனி அதைக் குறித்து வருந்தாதே—இனி நீ இம்மாதிரி ஒருகாலும் கூற மாட்டாய், எனக்குத் தெரியுமே; அழாதே, நான் சொன்னபடிகேள்.—என்ன சமாசாரம்?

வசனை : ஒன்றுமில்லை, பிராணநாதா,—களைத்திருக்கிறாற் போல் இருக்கிறதே; காலையில் போஜனங் கொள்ள வில்லையோ?

பு : இல்லை, கண்ணே.

வசனை : அது ஏனப்படி? நான் ஒரு வேளை பாராவிட்டால் எல்லாம் கெட்டுப்போய்விடுகிறது. நான் சென்று சித்தஞ் செய்யச் சொல்லவா ?

பு : வேண்டாம், சற்றுப் பொறுத்துப் போகிறேன்—வசந்தசேனை, அம்மட்டும் இரண்டுமுறை மனோஹரன் காத்தினின்றும் தப்பிப் பிழைத்தனையே! நானருகில் இருந்திராவிடில் நீ இறந்தேயிருப்பாய்!

வனை : அதைப்பற்றியெல்லாம் இப்பொழுது யோசிப்பானேன்? பிராணநாதா, திருவையாற்றருகில் நமக்காக ஒரு நூதனத்துறை கட்டும்படி உத்தரவு செய்திருந்தீரே அது முடிந்து போயிற்றா?

பு : முடிந்துபோய் விட்டது.—மனோஹரன் அருகிலிருக்கும் பொழுது எப்பொழுதும் நீ மிகவும் ஜாக்கிரதையா யிருக்க வேண்டும். அவனுக்குக்கோபம் மூண்டுவிட்டால் நான் தடுத்தாலுமாகாது, மற்றவர் தடுத்தாலுமாகாது' சற்றும் யோசிக்காமல் என்ன மூடத்தனமாய் அவனை வேசி மகனென அழைத்தாய்!

வனை : காரணமின்றி—பிராணநாதா, நாம் எப்பொழுது அந்தத் துறையைப் பார்க்கப் போவது?

பு : அதிருக்கட்டும்—என்னவோ கூறவந்தவள் நிறுத்தி விட்டனையே! என்ன கூறவந்தாய்? சொல், சொல்.

வனை : அதெல்லாமிப்பொழுதெதற்கு?—பி ரா ண நா தா, நாளைத்தினம் போவோமா அங்கு ?

பு : கண்ணே, என்னவோ கூறவந்தாய், சொல் அதை ஒளியாதே.

வனை : ஒன்றுமில்லை. காரணமின்றி இவ்வுலகத்தில் எதுவும் பிறவாது என்று கூறவந்தேன், வேறொன்றுமில்லை—பிராண நாதா, நாளைத்தினம் போய் நாம் ஜலக் கிரீடை செய்வோமா? —பிராணநாதா, அதைப்பற்றி யெல்லாம் ஒன்றும் யோசியாதீர்,—சொல்லும் நான் கேட்பதற்கு, என்ன பிராணநாதா?

பு : என்ன காரணமின்றிப் பிறவாது? நான் எதைப்பற்றி யோசிக்கிறேன்? வசந்தசேனை, உன் மனத்தில் ஏதோ இருக்கிறது, இன்னதென்று சொல், சொல்!

வனை : வதந்தி காரணமின்றிப் பிறக்குமோ? 'உலைவாயை மூடினாலும் ஊர் வாயை மூடலாகுமா?' என்கிறார் களே, அதைத்தான் கூறினேன்.—அப்புறம், அந்தத் துறைக்குப் போகலாமா நாளை? சொல்லும் பிராண நாதா.

பு : வசந்தசேனை, என்ன வதந்தி?

வனை : போம், பிராணநாதா! நான் கேட்டதற்குப் பதில் கூறாது என்னென்னவோ யோசிக்கிறீர்கள்.

பு : இல்லை. இல்லை; உன்னிஷ்டப்படி நாளையே போகலாம்.— அதென்ன வதந்தி சொல்லிவிடு; நான் கேட்பதை நீ மறுக்கலாமா? நீ கேட்பதை நான் மறுக்கிறேனோ? என் கண்ணல்ல, சொல் சீக்கிரம்.

வனை : ஐயோ! இதென்ன தொந்தரவு! என்வாய் தவறி ஏதோ சொல்லிவிட்டேன், பிறகு கஷ்டமாய் முடிந்ததே.— பிராணநாதா, நான் இப்பொழுதே சொன்னேன், அதை நீர் கேட்பது நியாயமன்று; நானும் உமக்குச் சொல்லுதல் நியாயமன்று.

பு : அப்படிப்பட்ட விஷயமென்ன? எனக்கு எப்படியும் நீ சொல்லத்தான் வேண்டும்!

வனை : பிராணநாதா, தாமிவ்வாறு பிடிவாதமாய்க் கூறலாகாது; ஜனங்கள் இதைப்பற்றிப் பேசிக்கொள்வதைக் குறித்து உமக்குக் கூறி நான் ஒருகாலும் துக்கம் விளைவிக்கமாட்டேன்; என்னுயிர் போனாலும் சரி; தமக்கு நான் மனச்சஞ்சலத்தையுண்டு பண்ண மாட்டேன். ஜனங்கள் பேசிக்கொள்வது ஒரு வேளை தவறாயினுமிருக்கும். யாருக்குத் தெரியும்?

பு : வசந்தசேனை, இந்த சமாசாரத்தை முற்றிலும் கூறினாலொழிய நான் இன்றைத்தினம் போஜனங் கொள்ளேன்.

வனை : பிராணநாதா, நான் எல்லா சமாசாரங்களையும் கூறி உமக்களவற்ற வருத்தத்தையும் அவமானத்தையும் கொண்டுவர மாட்டேன். உயிருள்ளளவும் இது உமக்குத் தெரியாதிருப்பதே நலம் வேண்டுமென்றால் இது பத்மாவதியைக்குறித்த விஷயமென்று மாத்திரம் கூறுகிறேன்,—வாரும் போஜனங் கொள்ள.

பு : பத்மாவதியைப் பற்றி விஷயமா? அவளைப்பற்றிய விஷயமென்ன இருக்கப்போகிறது? வசந்தசேனை, நீ முற்றிலும் ஆதியோடந்தமாகக் கூறினாலொழிய நான் வரமாட்டேன். ஒரே வார்த்தை!

வனை : பிராணநாதா, நீர் என்னைக் கொன்றாலும் சரி, நான் ஒருவர் மீது கோள் சொல்லமாட்டேன்.

[ஒரு புறமாய்ப் போய் உட்கார்ந்து கொண்டு மெல்லச் சைகை செய்கிறாள்.]

மெல்ல நீலவேணி வருகிறாள்

நீ : மஹாராஜா, நான் வரலாமோ ?

பு : என்ன சமாசாரம் ?

நீ : ஒன்றுமில்லை, தங்களிடத்தில் ஒரு நிருபம் கொடுக்க வேண்டியிருக்கிறது.

பு : என்ன நிருபம் ?

நீ : பெரிய ராணி கொடுக்கும்படி கட்டளையிட்டார்கள்.

பு : உனக்கென்ன பயித்தியம் பிடித்திருக்கிறதோ? என்னிடமா? பத்மாவதியா?

நீ : ஆம், இதோ பாரும்.

பு : இது கனவா?—[படிக்கிறார்.] "சோழ நாட்டுக் கெடிஸ்தலாதிபதி புருஷோத்தம மஹாராஜாவின் சன்னிதானத்திற்கு"—பத்மாவதியின் கடிதமா இது ?

நீ : ஆம்.

பு : ஆம், சந்தேகமில்லை. அவளுடைய கையெழுத்து எனக்கு ஞாபகமிருக்கிறது!—என்ன ஆச்சரியம்!

[பிரித்துத் தனக்குள் படிக்கிறார்.]

என்ன? இதென்ன இது!—கனவு காண்கிறேனோ என்ன? —பத்மாவதியா நமக்கு இப்படி எழுதுகிறாள்? இன்னொரு முறை வாசித்துப் பார்ப்போம்.—சீ! [மறுபடியும் படிக்கிறார் தனக்குள்.] சந்தேகமில்லை! இதென்ன விந்தை! எனக்கா இப்படி எழுதுவது?—

வனை : நீலவேணி, ஏன் இங்கு நிற்கிறாய்? போ.

[நீலவேணி போகும் பொழுது தற்செயலாய் விழுவதுபோல் மற்றொரு நிருபத்தைக் கீழே விட்டு, திடீரென்று பயந்தவள் போல் அதை எடுத்து மறைத்துக் கொள்ளுகிறாள்.]

நீலவேணி, அதென்ன?

பு: நீலவேணி, அதென்ன, நிருபமா?

நீ: [பயப்படுவதுபோல் நடித்து] ஆம்.
[போக முயல்கிறாள்,

பு: நீலவேணி! வா இப்படி, நான் கேட்டுக்கொண்டிருக்கிறேன், எங்கே போகிறாய்?

நீ: இல்லை.

பு: என்ன நிருபம் அது?—என்ன! நான் கேட்கிறேன், சும்மா இருக்கிறாய்?

நீ: மஹாராஜா!

பு: என்ன? சீக்கிரம் சொல்!

நீ: [மஹாராஜாவின் காலில் வீழ்ந்து] மஹாராஜா, என்னை மன்னிக்க வேண்டும். இந்த நிருபத்தைப்பற்றி என்னை ஒன்றும் கேட்கலாகாது, தம்மை இரந்து வேண்டிக் கொள்ளுகிறேன். பத்மாவதிதேவியறிந்தால் எனதுயிர் போய்விடும்!

பு: என்ன ஆச்சரியமாயிருக்கிறது! பத்மாவதியின் நிருபமா எனக்கா? யாருக்கு அது?

நீ: மஹாராஜா, தமக்கல்ல, பத்மாவதிதேவி எனக்கு—

பு: எனக்கல்ல! பிறகு யாருக்கு?

நீ: இதை ஒருவருக்கும் வெளியிடலாகாது, வெளியிட்டால் உனதுயிர் போய்விடுமென்று எனக்குக் கட்டளையிட்டார்கள் பத்மாவதிதேவி.

பு: நீலவேணி! கொடு இப்படி அந்நிருபத்தை!

நீ: மஹாராஜா! எனதுயிர் போனாலும் நான் கொடுக்க மாட்டேன்! என்னை மன்னிக்கவேண்டும். என்னை இதுவரையில் காத்து வந்த தேவிக்கு நான் ஒருகாலும் துரோகம் செய்யேன்! மஹாராஜா! மஹாராஜா!

பு: நீலவேணி! [வாளை உருவி] அந்நிருபத்தை நீயே கொடுக்கின்றையா அல்லது உன்னைக்கொன்று எடுத்துக் கொள்ளவா?

நீ : மஹாராஜா! தாம் எப்படியாவது என்னுயிரைக் காப்பாற்ற வேண்டும் ஐயோ! என்னுயிர் போனாலும் வேறெவருக்கும் காண்பிப்பதில்லையென்று பிரமாணம் செய்திருக்கிறேனே!

பு : கொடு இப்படி! (பிடுங்கிக்கொண்டு) "மந்திரி சத்திய சீலர் அவர்களுக்கு"— (பிரித்து வாசிக்கிறார்) "எனது பிராணநாதர் அவர்களுக்கு" என்ன!

(திடுக்கிட்டெழுந்து நிருபத்தை விரைவில் தனக்குள் வாசித்துப் பார்த்து அதிக கோபத்துடன் கிழித்தெறிகிறார்.)

போ என்முன் நில்லாதே!

[நீலவேணியைப் பிடித்து அறைக்கு வெளியாகத் தள்ளிவிட்டு, மஞ்சத்தின்மீது சாய்கிறார்.]

வஸை : பிராணநாதா! பிராணநாதா! இதென்ன? இதென்ன மஹாராஜா?

பு : வசந்தசேனை! என்னை இனி மஹாராஜாவென்றழையாதே! நான் இனி அப்பெயரை வகிக்கத் தக்கவனல்லன்.

வஸை : என்ன இது பிராணநாதா? ஏதோ நீலவேணி நிருபம் கொண்டுவந்து கொடுத்தாள்; அதைக் கிழித்தெறிந்துவிட்டு இவ்வாறு துயரப்படுகிறீரே! என்ன சமாசாரம்? என்ன நிருபம்? என்னிடங் கூறலாகாதா?

பு : வசந்தசேனை, நீ வாய் தவறிக் கூறியது நிஜமாய் முடிந்தது மனோஹரன் வேசிமகன்தான்! பத்மாவதி வேசிதான்! சந்தேகமில்லை!— சீ! இப்படியுமிருந்ததா என்னுடைய விதி? இதுவரையில் என் கண் விளங்காதிருந்ததே! இந்த அவமானத்தையும் நான் பொறுக்க வேண்டுமோ?

வஸை : மஹாராஜா, இப்படி தமக்குத் துக்கம் நேரிடுமென்றே இதைப்பற்றித் தாம் என்ன வற்புறுத்திக் கேட்டும் சொல்லமாட்டேன் என்றேன்.

பு : ஆனால் இது உனக்கு முன்பே தெரியுமோ?

வனை : மஹாராஜா, தாம் ஒருவர் தவிர மற்றெல்லோருக்கும் இது நெடு நாளாகப் பிரசித்தமான விஷயமே! தமக்குக் கூறினால், எங்கு கோபங்கொள்ளுகிறீரோ என்று எல்லோரும் பேசாதிருக்கிறார்கள் நானும் எங்கு இப்படி தமக்கு மிகுந்த வருத்தம் நேரிடுகிறதோ என்று சும்மா இருந்தேன்!

பு : [முத்தமிட்டு] கண்ணே, நீயே பதிவிரதை!

வனை : ஆயினும் மஹாராஜா, இவ்விஷயமெப்படி உமக்குத் தெரிந்த திப்பொழுது?

பு : எப்படித் தெரிந்ததா? அத்துஷ்டை சத்தியசீலனுக்கெழுதிய நிருபமே என் கையில் கிடைத்தது! இதோ கிடக்கிறது பார்!-பத்மாவதி! சத்தியசீலா! உங்களிருவரையும் இன்னும் சில நொடிப் பொழுதில் கசக்கிப் பிழிந்துவிடுகிறேன் பாருங்கள்! அப்படியா சமாசாரம்? இதோ புறப்படுகிறேன்!

வனை : பிராணநாதா, தாம் அவசரப்படலாகாது; தீர விசாரியாது ஒருகாரியமும் செய்யலாகாது. பிறகு ஏதாவது தப்பிதமாயிருந்தால் தாம் வருத்தப்பட நேரிடும்.

பு : இன்னும் என்ன விசாரிப்பது? என் கண்ணால் பசுவின் தோலைப் போர்த்த புலியாகிய அப் பாதகி, சத்திய சீலனுக்கு எழுதிய கடிதத்தையே நேரிற் கண்டபின், இன்னும் என்ன அத்தாட்சி வேண்டும்? இந் நிருபத்தில் அவனுக்குப் பிறந்த பிள்ளையாக மனோஹரனைச் சுட்டி எழுதியிருக்கிறாள்! இன்னும் என்னவேண்டும்?

வனை : பிராணநாதா, "கண்ணாரக்கண்டதும் பொய், காதாரக் கேட்டதும் பொய், தீர விசாரித்தது மெய்'' என்று நாம் இன்னும் விசாரியாது ஒரு காரியமும் செய்யலாகாது.

பு : ஏன், மறுபடியும் மறுபடியும் அதையே சொல்லிக் கொண்டிருக்கிறாய்? இன்னும் என்ன விசாரிப்பது? சொல்.

வனை : பிராணநாதா, எனக்கு ஒரு யோசனை தோற்றுகிறது. இது உண்மையோ அன்றோ, என அறியும் பொருட்டு சத்தியசீலரையே வரவழைத்து மனோஹரனைப்பற்றிப் பேசிப் பார்த்தாலோ?—

பு : பேசுவதாவது! அவர்களைக் கொலைவதை விட்டுப் பேசுவதானது? இந்த வேசியின் மகனோ எனக்குப் பிற்காலம் இந் நாட்டையாள்வது? அவனுக்கோ நான் இளவரசு பட்டம் சூட்டுவது? அவனையே முதலில் கொல்ல வேண்டும். அவனது பலமிருத்தலாலல்லவோ இவ்விருவரும் இறுமாந்திருக்கிறார்கள்?—நான் இறந்தாலும் சரி—

வனை : பிராணநாதா, நான் சொல்வதைச் சற்றே செவியுற்றுக் கேளும். எனக்கொரு நல்ல யுக்தி தோற்றுகிறது. சத்திய சீலரை வரவழைத்து, அவரை திடீரென்று ஒரு காரணமுங் கூறாமல், மனோஹரனைக் கொன்று வாவென்று கட்டளையிட்டனுப்பினால், அவர் என்னபதில் கூறுகிறாரோ பார்ப்போம்; தனக்குப் பிறந்த மகனாயிருந்தால் மனோஹரனைக் கொல்ல ஏற்றுக்கொள்ளமாட்டார், பின்வாங்குவார், அதில் எல்லாவுண்மையும் வெளியாகும். பிராணநாதா, யாராயிருந்தபோதிலும் தீர விசாரியாது தண்டிக்கலாகாது.

பு : வசந்தசேனை, இதுவே நல்ல யோசனை. அப்படி உண்மை வெளியாகும்பட்சத்தில் சத்தியசீலனைக் கொண்டே மனோஹரனைக் கொல்வித்தால், இது சத்தியசீலனுக்கும் தக்க தண்டனையாகும். பிறகு இவ்விருவரையும் நாம் சிட்சிக்கும் விதத்தில் சிட்சிப்போம்:— யார் அங்கே வெளியே? சேவகா!

ஒரு சேவகன் வருகிறான்.

அடே, உடனே சென்று மந்திரி சத்தியசீலரை நான் வரவழைப்பதாகக் கூறி—

சத்தியசீலர் வருகிறார்.

சரிதான்—நீபோ அவரே வந்துவிட்டார்

[சேவகன் போகிறான்.]

சத்தியசீலரே, வாரும். உம்மைத்தான் அழைத்துக் கொண்டு வரும்படி கட்டளையிட்டுக்கொண்டிருந்தேன், தாமே இங்கு வந்ததேது தற்செயலாய்?

ச: மஹாராஜா காலைமுதல் போஜனம் செய்யாதிருப்பதாகச் சேதி வரவே, என்ன காரணமென்று விசாரித்துப் போக வந்தேன். தேகம் ஒன்றும் அசௌக்கியமில்லையே?

பு: தேகத்திற்கொன்றும் அசௌக்கியமில்லை.

ச: மிகவும் சந்தோஷம் ஆனால் தாங்கள் போஜனங் கொள்ளச் செல்லலாமே ?

பு: இதோ போகிறேன்,—ஆயினும் அதற்குள் உம்மை ஒரு கேள்வி கேட்கவேண்டும்; அதற்காகத்தான் உம்மை வரவழைக்கவிருந்தேன்—ராஜத்துரோகிகளுக்கு என்ன தண்டனை விதித்திருக்கிறது நமது சாஸ்திரங்களில்?

ச: மஹாராஜா, செங்கோன் முறைப்படி அரசாட்சி செய்யும் அரசர்க்குத் துரோகம் செய்பவர்களை சிரச்சேதம் செய்து விடும்படி மனு கூறியிருக்கிறார்.

பு: மந்திரிகளுடைய கடமை மஹாராஜாவின் உத்தரவின்படி நடக்கவேண்டுமென்பதல்லவா ?

ச: ஆம், சந்தேகமில்லை.

பு: சத்தியசீலா! எங்கே பார்க்கிறாய்? உடனே புறப்பட்டுப் போய்—மனோஹரனைக் கொன்று வா!

ச: யாரை?

பு: மனோஹரனை.

ச: என்ன? மனோஹரரையா ?

பு: ஆம்

ச: மஹாராஜா! தம்முடைய குமாரரையா?

பு: ஆம்.

ச: இதென்ன எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதோ? அல்லது மனோப்பிராந்தியோ ?

பு : சத்தியசிலா! என்ன யோசித்துக்கொண்டிருக்கிறாய்? புறப்படு உடனே!

ச : மஹாராஜா! இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது! வேடிக்கையார்த்தமாகக் கூறுகிறீரா என்ன?—மனோஹரரையா கொன்றுவரும்படி கட்டளையிடுகிறீர்?—நானோ மனோஹரரைக் கொல்வது?

பு : வேடிக்கையென்ன இருக்கிறது இதில்? உண்மையாகத் தான் கட்டளையிடுகிறேன்:

ச : நானெப்படி அவரைக்கொல்வது? எதற்காகக் கொல்ல வேண்டும்? இதென்ன நியாயம்! தம்முடைய புத்திரரைக் கொல்லும்படி தாமே கட்டளையிடுகிறீரே! மஹாராஜா, நான் நம்பத் தக்கதாயில்லையே!

பு : சத்தியசிலா! மந்திரியினுடைய கடமை மஹாராஜாவின் சொற்படி நடப்பதென்றனையே! இதுதானோ? என்னை நீ ஒரு நியாயமுங் கேட்கவேண்டியதில்லை, போ! இந்த நொடியே சென்று மனோஹரனைக் கொன்று வர வேண்டும்!

ச : மஹாராஜா, தமது சொற்படி நான் நடக்கவேண்டிய துண்மையே. ஆயினும் இதைப்பார்க்கிலும் முக்கியமான கடமையொன்று மந்திரியாகிய எனக்கிருக்கிறது. அது மஹாராஜா ஏதாவது ராஜ தர்மத்திற்குத் தவறாய் நடந்தால், அதை எடுத்துக் கூறவேண்டுமென்பதே! மஹாராஜா, எப்படிப்பட்ட மஹாபாதகம் செய்தவனையும் தீர விசாரியாமலும், அவனுக்குக் காரணம் கூறாமலும் தண்டிப்பது நியாயமன்று. ஆகவே முதலில் மனோஹரர் என்ன குற்றஞ் செய்தாரென்று ஆராய்ந்தறிந்து, பிறகு அக் குற்றத்திற்கு உயிரிழக்கும்படி தண்டித்தல் நியாயமா என்று தீர்மானித்து, அவர் அதற்காகக் கூறும்படியான நியாயமிருந்தால் அதையும் விசாரித்த பிறகே அக்குற்றத்திற்குத் தக்க தண்டனை விதிக்கவேண்டும் முதலில், மனோஹரர் என்ன குற்றஞ் செய்தார்?

பு। சத்தியசிலா! என்ன அதிகமாய்ப்பேசுகிறாய்? உன் நியாயமெல்லாம் எதற்காகக் கூறுகிறாய் என்று எனக்கு நன்றாய்த்தெரியும்; நான் சொன்னபடி செய்கிறயா மாட்டாயா? நான் காரணம் சொல்லமாட்டேன்.

ச। மஹாராஜா, சற்று என்மீது தயை கூர்ந்து நான் கூறுவதைக் கேட்கவேண்டும். இது நியாயமல்ல, காரணமின்றி மனோஹரரைக் கொல்லும்படி விதிப்பது எல்லா சாஸ்திரங்களுக்கும் விரோதம். அதுவுமன்றி அதனால் அரசுக்குப் பெருங் கேடு விளையும். அவர் நமது பகைவரையெல்லாம் வென்று வெற்றி வீரனாக மீண்டிருக்கிறார். ஜனங்களெல்லாம் அவர்மீது மிகப் பிரீதியுற்றிருக்கிறார்கள். முன்பே ஜனங்கள் கலகப்பட்டிருக்கின்றனர் இந்த அநியாயத்தையும் கேள்விப்படுவார்களானால் தமது ஆளுகையினின்றும் மீறித்தம்மீதே படையெடுத்தாலுமெடுப்பார்கள். நமது ராஜ்யத்திற் கெல்லாம் பேரரண் போலிருக்கிறார், அவரை—

பு। மந்திரி! இந்நியாயங்களெல்லாம் உன்னை நான் கேட்கவில்லையே! நீ என் கட்டளைப்படி மனோஹரனைக் கொல்கின்றனையா மாட்டாயா?

ச। மஹாராஜா, மற்ற நியாயங்களெல்லாமிருக்கட்டும். நான் எப்படி மனோஹரரைக் கொல்ல முடியும்? அவர் முனிந்தால் என்னைப் பொடியாக்கிவிடுவார். அவரைக் கொல்வதெப்படி? அரசே, இந்த வேலை செய்ய என்னாலாகாது. இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது!

பு। [ஒருபுறமாக] ஆம், வசந்தசேனை, நீ கூறியதுண்மையே.

ச। மஹாராஜா, அதுவுமன்றி தாம் அவரைக் கொல்லும்படி கட்டளையிட்டதாக அவரிடம் சென்று கூறின், அவர் என்னை ஒருகாலும் நம்பமாட்டாரே; பித்தம் பிடித்தவனென்றல்லவோ இதைக் கேட்கும் ஜனங்களெல்லாம் என்னை ஏளனம் செய்வார்கள்!

[புருஷோத்தமன் ஒரு நிருபம் எழுதுகிறார்.]

மஹாராஜா, தாம் ஏதோ புத்தி சபலத்தினால் இவ்வாறு கட்டளையிடுகிறீர்கள். சற்று நிதானிப்பீராகில் எல்லாம் தணிந்துவிடும். மனோஹரர் உயிரிழக்கத் தண்டிக்கும்

படியாக என்ன குற்றம் செய்திருக்கக்கூடும்? ஒன்றுமிராது! தாம் அவசரப்பட்டு ஏதாகிலும் செய்வீராகில் முடிவில் இது நமது ராஜ்யத்தை வேருடன் அழிக்கும் காரணமாம்.

பு : சத்தியசீலா! என்ன சும்மா பேசிக்கொண்டிருக்கிறாய்? போதும், நிறுத்து! இதோ இதைப் பார்த்துக்கொள்! [நிருபத்தை எறிந்து] உன்னிஷ்டம்!—வசந்தசேனை, வா போவோம் நாம் போஜனங்கொள்ள.

[வசந்தசேனையுடன் போகிறார்.

ச : இதென்ன வசந்தனுக்குப் பிடித்திருக்கும் பயித்தியம் இவருக்கும் பிடித்திருக்கிறதா என்ன—இதில் என்ன எழுதியிருக்கிறார்?—"இன்றைத்தினம் சூரியன் அஸ்தமிக்குமுன் நீ மனோஹரன் என்பவனைக் கொல்லாவிட்டால் உன்னைச்சிரச்சேதம் செய்துவிடுவேன், இது சத்தியம்—புருஷோத்தமன்"—ஐயோ! இதென்ன! என் தலைவிதியோ? சரி நம்முடைய வேலை முடிந்தது! நாம் வந்த வழியிது! இனியென்னவிருக்கிறது? நானோ மனோஹரனைக்கொல்வது? இந்த உலகத்திலுள்ள எந்தச் சுத்தவீரனாலுமாகாத காரியம் என்னாலேயோ ஆகப்போகிறது? எலியை அனுப்பிப் புலியைக் கொன்றுவரும்படி கட்டளையிட்டதொக்கும்! அன்றியும் இது சாத்தியமான காரியமாயிருந்தபோதிலும், நானோ மனோஹரனைக் கொல்வேன்? பிறந்ததுமுதல் மகனில்லாப் பாவியாகிய நான் என் மகன்போல் பாவித்து, பாராட்டி, சீராட்டி வந்து இப்போது என் கையால் அச்சீமானைக்கொல்வேனோ? மஹாராஜாவுக்கு விதியின் வழி மதி செல்கிறது போலிருக்கிறது. எல்லாம் அத்துஷ்டை வசந்தசேனையால் வந்ததென்பதற்குச் சந்தேகமில்லை. நேற்று மனோஹரரை வேசி மகனென வைதவள், இன்றுமஹாராஜாவைக் கொண்டு இவ்விதம் நமக்குக் கட்டளையிடும்படி செய்தாளென்பதற்குச் சிறிதும் சந்தேகமில்லை. அதன்பொருட்டு வழக்கத்தைப் போல் நடுவில் என்னுடன் வார்த்தையாடாது, வாய் மூடியிருந்தனள். இவைகளையெல்லாம் இப்பொழுது யோசிப்பானேன்? நான் இப்பொழுது என்ன செய்வது? சீ! தகப்பனுக்கும் மகனுக்கும் சண்டை மூட்டி வைத்தவனெனும் கெட்ட பெயர் நமக்கு வேண்டாம். ஆயின்

நான் வீணில் இறப்பதோ? போய் கேட்டுப் பார்ப்போம் மனோஹரரையே, இதற்கு என்ன நியாயம் கூறுகிறா ரென்று! அவர் சத்தியவான், எப்படியும் இருவரி லொருவர் இறக்கவேண்டிவரின் நானிறக்கவேண்டுமே யொழிய மனோஹரர் இறப்பது நியாயமன்று—நான் இறக்கத்தான் வேண்டும்! இப்படிப்பட்ட மஹாராஜா விடம் மந்திரியாயிருந்ததற்குத் தண்டனை வேண் டாமோ?—ஐயோ! நானெப்படி மனோஹரரிடம் இதைக் கொடுத்துக் கேட்பது? ஈசனே! ஈசனே! எல்லா முனது செயல்!

ச: ராகம்—செஞ்சுருட்டி. தாளம்—சாபு

பல்லவி

இதுதானா எந்தன் விதி
ஏதுநான் செய்குவேன் சிவசிவமே (இது)

அநுபல்லவி.

பாதிமதியோனே பாவியாயென்றனை
படைத்ததேனறியேன் சிவசிவமே. (இது)

சரணம்.

கோதிலாமன்னன்மெய் கூறியும் கேளாமல்
சீறியே சென்றனன் சிவசிவமே. (இது)

[போகிறார்.]

காட்சி முடிகிறது.

## இரண்டாவது காட்சி

இடம்—நந்தவனம். காலம்—மாலை.

மனோஹரன்—ஓர் ஊஞ்சலின் மீது சயனித்திருக்க, விஜயா பக்கத்திலுட்கார்ந்து வெற்றிலை மடித்துக் கொடுக் கிறாள்.

வி: பிராணநாதா, பாண்டியதேசத்திற்குப் போய்வந்தீரே என்ன சமாசாரம்? எல்லாம் சொன்னீரா என்னிடம்?

ம : உன்னிடம் என்ன சமாசாரம் சொல்வது? உனக்கென்ன தெரியும்?

வி : எனக்கொன்றும் தெரியாதோ? எல்லாம் தெரியும். என்னிடம் சொல்ல இஷ்டமில்லையென்று சொல்வது தானே; வேறு யாராவது கேட்டால் சொல்லுவீர்கள்; நான் கேட்டால் சொல்வீர்களா? உம்! உம்!

ம : கண்ணே, ஏன் கோபித்துக் கொள்ளுகிறாய்? என்ன வேண்டுமென்றாலும் சொல்லுகிறேனுனக்கு உறந்தை நகரைப் பிடித்த சமாசாரஞ் சொல்லவா? அல்லது முத்து விஜயனது குஞ்சரத்தைக் கொன்றதைப்பற்றிச் சொல்லவா? அல்லது முத்து விஜயனை வாள் யுத்தத்தில் முடித்ததைப் பற்றிச் சொல்லவா ?

வி : உம்! உம்! இதெல்லாம் யார் கேட்டது? எப்பொழுது பார்த்தாலும் உங்களுக்குக் கொல்லுகிறதும், வெட்டுகிறதும், ஜெயிக்கிறதுந்தானே! தூங்கும்பொழுதுகூட அதைப்பற்றியே கனவு காண்கிறீர்கள். என்னைப்பற்றி எப்பொழுதாவது கனவு காண்கிறீர்களா? உம்! உம்!

ம : கண்ணே, கோபித்துக் கொள்ளாதே! உன் மாமியார் உன் மீது கோபித்துக் கொள்ள வேண்டாம் என்று நன்றாய்க் கட்டளையிட்டாலுமிட்டார்கள்! என்பாடு கஷ்டத்தில் வந்து விட்டது பிறகு என்னதான் சொல்லச் சொல்கிறாய்? கண்ணே, விஜயா, இப்படி வா. கோபங் கொள்ளாதே இதற்கெல்லாம், கொடு அந்த வெற்றிலைச் சுருளை இப்படி.

வி : பிராணநாதா, அங்கெல்லாம் போயிருந்தீரே, அங்கு பெண்கள் ஏதாவது நூதனமாக ஆபரணங்கள் அணிந்து கொள்ளுகிறார்களா? என்ன என்ன ஆபரணங்கள் அணிகிறார்கள்? சொல்லும் ஒன்றும் விடாது.

ம : விஜயா, இதுதானா எனக்கு வேலை? நான் அங்கே ஸ்திரீகள் என்ன அணிகின்றனர் என்று அறியவோ போயிருந்தேன்? வேறெதாவது யுக்தியாய்க் கேட்கலாகாதா?

வி : உம்! உம்! எனக்கு வேறொரு சங்கதியும் வேண்டாம், நான் மாமியிடம் போகிறேன்.

ம : (அவளைத் தடுத்து) அடடா! இதென்ன சங்கடமாய் முடிந்ததே!—விஜயா, வா இப்படி, என் கண்ணாயிற்றே நீ, உட்கார் இப்படி. வேறெதையாவது கேள். இதெல்லாம் எனக்கு எப்படித் தெரியும்?

வி : ஆனால் பிராணநாதா, வெளியில் போயிருந்தீரே எனக்கென்ன கொண்டுவந்தீர்கள் ?

ம : கொண்டு வந்ததை நான் சொன்னால் என்ன தருகிறாய் எனக்கு?

வி : என்ன வேண்டுமுமக்கு ?

ம : என்ன தருகிறாய் எனக்கு?

வி : (தன் முகத்தை மூடிக்கொண்டு) ஒரு முத்தந் தருவேன்!

ம : அப்பா! உன்வாய் முத்தம் அவ்வளவு விலை உயர்ந்ததோ?

வி : இல்லையோ, பிராணநாதா?

ம : ஆமாம், நீ கோபித்துக்கொள்ளாதே அம்மட்டும்.

வி : எனக்கென்ன கொண்டுவந்தீர், சொல்லும்,

ம : உனக்காக என்னைத்தான் கொண்டு வந்தேன்!

வி : இவ்வளவுதானோ, பிராணநாதா!

(முகத்தைத் திருப்பிக் கொள்கிறாள்.)

ம : விஜயா, உனக்கு என்னைப் பார்க்கிலும் வேறென்ன வேண்டும்? என்னைவிட உனக்கு மேலான பொருள் என்ன இருக்கிறது?

வி : ஆம், பிராணநாதா, உண்மையே! (ஒரு முத்தங் கொடுத்து.) இன்னும் என்ன கொண்டு வந்தீர்கள்?

சத்தியசீலரும் ராஜப்பிரியனும் ஒரு புறமாகப் பேசிக் கொண்டு வருகிறார்கள்.

ரா : உதவாது! நான் எப்படியும் சொல்வேன்,

ச : வேண்டாம், நான் சொன்னபடி கேளும்.

ம : ராஜப்பிரியா! சத்தியசீலரே! என்ன இருவரும் சச்சரவிட்டுக்கொண்டு வருகிறீர்கள்?—விஜயா நீ போ.

(விஜயா போகிறாள்.)

ச: அரசே, நாங்கள் இந்த சமயத்தில் இங்கு வந்ததற்காக மன்னிக்கவேண்டும்.

ம: அதுவொன்றுங் குற்றமில்லை. நீங்கள் வந்ததென்ன? ஏன் இருவரும் சண்டையிட்டுக்கொண்டு வந்தீர்கள்?

ச: ஹா! (கண்ணீர் விடுகிறார்)

ம: சத்தியசீலரே! என்ன கண்ணீர் விடுகிறீர்?

ச: ஒன்றுமில்லை; தங்களிடம் விடைபெற்றுப்போக வந்தேன். தெய்வாதீனத்தால்—

ம: என்னிடம் விடை பெற்றுக் கொள்வதாவது? என்ன சமாசாரம்?

ச: அரசே, தெய்வாதீனத்தால் நான் சீக்கிரம்—இறக்க வேண்டி வந்திருக்கிறது.

ம: என்ன ?

ச: ஆகவே அதற்குள் தம்மைக் கண்டு விடைபெற்றுச் செல்ல வேண்டுமென்று வந்தேன்.

ம: இதென்ன சமாசாரம்? உமக்கென்ன பித்தம் அதிகரித்திருக்கிறதா என்ன? தாம் ஏன் இறக்க வேண்டும்? ராஜப்பிரியா, இதெல்லாம் என்ன ?

ச: [மஹாராஜாவின் உத்தரவைக் கையில் கொடுக்கிறார்.]

ம: (படித்துப்பார்த்து) இதென்ன ஆச்சரியம்! மஹாராஜாவுக்குப் பயித்தியம் பிடித்திருக்கிறதோ? அல்லது விநாச காலம் கிட்டியதோ? இது உண்மையாயிருக்குமோ? அல்லது நான் உறங்குகிறேனோ? மஹாராஜாவாவது இப்படிப்பட்ட கட்டளையிடுவதாவது!—சத்தியசீலரே, இதெல்லாம் என்ன விளையாட்டு?—ராஜப்பிரியா, உனது வேடிக்கையோ இது ?

ச: அரசே, இவ்வளவும் உண்மைதான். மஹாராஜாவே சற்று முன்னர் என்னை அழைத்து இவ்வண்ணம் கட்டளையிட்டார்.

ம : என்ன காரணம்பற்றி இவ்வாறு கட்டளையிட்டார்? இது நம்பத்தக்கதாயில்லையே!

ச : நான் எவ்வளவோ தர்மங்களைக்கூறி இரந்து கேட்டும் இதற்கு நியாயமொன்றுங் கூறேனென்றார். பிறகு இதை எழுதி என்னிடம் கொடுத்துவிட்டுச் சரேலென்று அந்தப்புரஞ் சென்றார்.

ம : மஹாராஜாவுக்குப் பயித்தியம் பிடித்திருக்கிறது என்பதற்குச் சந்தேகமில்லை.—சத்தியசீலரே, இப்பொழுதென்ன செய்யப்போகிறீர்?

ச : நான், செய்வதென்ன இருக்கிறது? மஹாராஜா ஆக்கினைக்குட்பட்டு, நான் இறப்பதே! வேறென்ன இருக்கிறது?

ம : ஏன் என்னைக் கொல்கிறதுதானே?

ச : அரசே, இதுவரையில் நான் பட்டது வருத்தமன்று! இப்பொழுதுதான் எனக்குத் துக்கமாயிருக்கிறது! தம்முடைய வாயால் இவ்வண்ணம் கூறுகிறீரே, நான் இதற்கோ பாத்திரன்? முதலில் எலி புலியைக் கொல்லும் சக்தி வாய்ந்ததோ? இல்லை, அப்படிப்பட்ட உலகிலில்லாச் சக்தி நான் படைத்தவனாயினும் ஒரு நியாயமில்லாமல் தமது உயிரைப்போக்குவேனோ? ஐயனே! அப்படி ஏதாவது நியாயமிருப்பினும், தமது கண்டு விரலில் தினையளவு சேதிப்பதைவிட என் கழுத்தைவெட்டிப் பெறிவேன் என் கரத்தாலேயே, என்று உறுதியாய் நம்பும். ஆயினும் மஹாராஜா நான் என்ன வேண்டியும் கேளாமல் கட்டளையிட்டுவிட்டார்—இதை என் விதி எனப் பொறுத்து, எனதுயிரை என் கரத்தினாலேயே மாய்த்துக்கொள்ளச் சித்தமாயிருக்கிறேன். மஹாராஜாவின் கட்டளையைக் கேட்டவுடனே இறந்திருப்பேன், ஆயினும் தம்மைக் கடைசி முறை பார்த்துவிட்டு, பிறகு தற்கொலை புரியலாமென்று வந்தேன்.

ம : [கட்டியணைத்து] சத்தியசீலரே! மெச்சினேன் மெச்சினேன்! இப்படிப்பட்ட ஆப்தர் என்பொருட்டு உயிரிழக்க நான் சும்மா பார்த்துக்கொண்டிருப்பேனோ? சத்தியசீலரே, இதற்கு நான் ஒருகாலும் சம்மதியேன்! என்

உயிருள்ளளவும் என்பொருட்டு நீர் உயிர் விட ஒருகாலு முடன்படேன்! இந்தப் புருஷோத்தம மஹாராஜா வினால் என்ன முடியும்? அரிஅரப் பிரம்மாதிகள் வந்த போதிலும் நான் உம்மைக் காப்பாற்றுகிறேன்; அஞ்சாதீர்!

ச: அரசே, நான் இறப்பதற்கு அஞ்சவில்லை. ஆயினும் நாம் மஹாராஜாவின் கட்டளையின்படி நடக்க வேண்டும்.

ரா: எல்லாம் அவர்கட்டளையின்படி இதுவரையில் நடந்தது போதும்! ஏன் ஐயா? இனியாவது நான் இளவரசருடன் பேசலாமா?—அரசே, இனி நாம் தாமதிக்கலாகாது. இதுவரையில் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தோம். இனி பொறுப்பது தவறு. நாம் பொறுக்கப் பொறுக்க இது அதிகரிக்கிறதேயொழிய குறைந்தபாடில்லை. வில் வளைகிறதேயென ஏமாந்திருக்கின்றனர் போலும்! அரசே, இக் காரியத்திற்கெல்லாம் மூல காரணமா யிருப்பவள் அந்த வசந்தசேனையே! மஹாராஜா அவள் சொற்படி ஆடி வருகின்றனர்! உடனே நாம் புறப்பட்டுப் போய் இந்த நொடியே அவளைக் கொன்று வருவோம் முன்பு. பிறகு எல்லாம் சரியாய்விடும். நம்முடைய சைனியங்களெல்லாம் நமது வசத்திலிருக்கிறார்கள். நாம் ஒரு வார்த்தைக் கூறினாலும் பட்டண முழுமையும் அதம் செய்து விடுவார்கள்!

ம: ராஜப்பிரியா, நீ கூறியதில் சந்தேகமில்லை! அந்த வேசி வசந்தசேனைதான் இதற்கெல்லாம் காரணமாயிருக் கிறாள். சற்றும் சந்தேகமில்லை. இந்த நொடியே போயவளை நானே கொன்று வருகிறேன். என் தாயாரை அவள் இம்சித்ததற்கெல்லாம் பழி வாங்க வேண்டும்! எடுத்துவா என் உடைவாளை!

ச: அரசே, அவசரப்படாதீர்! சற்று தாமதியும்!

ம: என்ன தாமதிப்பது இனி?—ராஜப்பிரியா! எடுத்துவா உடைவாளை, இல்லாவிட்டால் நான் இப்படியே போகிறேன். [போகப்புறப்படுகிறான்.]

ச: [ஒரு புறமாக மனோஹரனுக்கு] அரசே, தம்முடைய தாயாருக்குக் கூறிய வார்த்தையைத் தாம் பழுது படுத்தலாகாது! [மனோஹரன் அசைவற நின்றுவிடு கிறான்.]

ரா : என்ன ஐயா கூறினீர்? இப்படிப்பட்ட சமயம் நேர்ந்த போதிலும், சும்மா இருப்பதாகச் சத்தியஞ் செய் தாரோ? தன்னைக்கொல்ல வந்தது பசுவானாலும் கொல்லும்படி கூறியிருக்கிறதை மறந்தீரோ? வசந்த சேனை மனோஹரருடைய உயிருக்கே வழி தேடி விட்டாளே! இனி தாமதிப்பதேதற்கு?

ம : ராஜப்பிரியா, அப்படியல்ல; என் அன்னை உத்தர வின்றியன்றோ இவர்களைத் தொடுவதில்லையென்று பிரமாணம் செய்து கொடுத்தேன். இவ்விஷயங்களை யெல்லாம் கேட்பார்களாயின் எப்படியும் அவர்களே உத்தரவு கொடுப்பார்களென்பதற்குச் சந்தேகமில்லை வாருங்கள் போவோம். இத் துஷ்டையைப் பொடிப் பொடியாக்கி சற்றுநேரத்தில் காற்றில் தூற்றிவரு கிறேன்! மனோஹரனை அறியாள்போலும்! வசந்த சேனை! எனது சௌரியத்தைக் காண்பாய்சீக்கிரம்!— வாருங்கள் போவோம். [எல்லோரும் போகிறார்கள்.

காட்சி முடிகிறது.

## மூன்றாவது காட்சி

இடம்—அந்தப்புரத்திலோர் அறை, காலம்—மாலை

பத்மாவதி, நீலவேணி, விஜயா வருகிறார்கள்.

ப : நீலவேணி, என்ன காரணத்திற்காக மஹாராஜா இவ் வாறு சத்தியசீலருக்குக் கட்டளையிட்டிருக்கக்கூடும் ?

நீ : அம்மா, அதெல்லாம் எனக்கொன்றும் தெரியாது. நான் தற்செயலாய் அந்த அறையோரமாகச் சென்ற பொழுது மஹாராஜா உரத்த சத்தமாய் இதைச் சொன்னதைக் கேட்டேன். வேறொன்றுங் கேட்க வில்லை. ஆகையால் எப்படியாவது நம்முடைய ராஜ குமாரரது உயிரைக் காப்பற்றுவீரென்று தம்மிடம் விரைந்தோடிவந்து கூறினேன். அம்மணி, ஒரு வேளை இதெல்லாம் வசந்தசேனையினுடைய தீயசெயலா யிருக்கவேண்டுமென்று தோன்றுகிறதெனக்கு!

சந்தேகமில்லை; இப்பொழுது சத்தியசீலரெங்கிருக் கிறார், தெரியுமா ?—

நீ : தெரியாது,

வி : மாமி, பிராணநாதருடன் நான் சற்று முன்பாகப் பேசிக் கொண்டிருக்கும்பொழுது சத்தியசீலரும் ராஜப்பிரியரும் வந்தார்கள்; உடனே எழுந்து வந்துவிட்டேன். மாமி! என் பிராணநாதர் இறக்கவேண்டுமா ?

ப : கண்ணே விஜயா, இன்னும் நாம் தைரியத்தைக் கைவிட வேண்டியதில்லை. இன்னும் சற்று பார்ப்போம்.

நீ : அம்மணி, இவ்விஷயங்களெல்லாம் நான் தமக்குக் கூறிய தாக வசந்தசேனை கேள்விப்பட்டால் என்னுயிர்ப்போய் விடும். ஆகலால், தாயே, நான் தம்மிடம் கூறியதாக ஒருவரிடமும் கூறவேண்டாம்.

ப : நீலவேணி நீ ஒன்றிற்கும் அஞ்சவேண்டாம். அப்படியே நீ கூறியதை நான் உரைக்கவில்லை—பயப்படாதே.

நீ : அம்மா, நானிப்பொழுது இங்கிருத்தலும் தவறு. நான் வருகிறேன் அம்மணி, ஜாக்கிரதை! (போகிறாள்.)

ப : என்ன காலம்! என்ன காலம்! இது உண்மையா யிருக்குமா? மஹாராஜா மனோஹரனையா கொல்லும் படி கட்டளையிட்டார் சத்தியசீலருக்கு? இல்லாவிடில் இன்றைத்தினத்திற்குள் சத்தியசீலர் உயிரிழக்கவேண் டுமோ? சத்தியசீலர் ஒருகாலும் தன்னுயிர் போனாலும் மனோஹரனுக்குத் தீங்கிழைக்கார்! ஐயோ! நம்பொருட்டுத் தர்ம சொரூபமாகிய சத்தியசீலர் உயிரிழக்க வேண்டுமோ? இதிருக்கட்டும்—மனோஹரன் இச்சங்கதியைக் கேள்விப்படுவானாயின், அவன்து கோபத்தை அடக்குவார் யார்? ஐயோ! நான் புருஷனையாவது பறி கொடுக்கவேண்டும், அல்லது பிள்ளையையாவது பறி கொடுக்கவேண்டும்! தன் பொருட்டு சத்தியசீலர் இறக்க மனோஹரன் ஒருகாலும் சம்மதியான்! ஐயோ! நானிச் சங்கடத்தை அனுபவிப்பதைவிட பிறவாதிருக்கலா காதா? நானிப்பொழுது இறப்பேனாயின் இத்துன்பங் களெல்லாம் நீங்கியிருப்பேன்!—அதிலும் பிரயோஜன மில்லை. நானிறப்பேனாயின் மனோஹரனுக்கு எரிகிற கொள்ளியை ஏறத் தள்ளியதுபோல் சினம் மூண்டு மஹாராஜாவைக் கொல்வானென்பதற்குத் தடை யில்லை நானே, அவரைக் கொன்றதாகும் இது. மஹா

ராஜாவினிடம் நேரிற் சென்று அவர் பாதத்தில் விழ்ந்து இருவருக்கும் சமாதானஞ் செய்யவா? ஐயோ! அப்படி செய்வேனாயின் நான் இதுவரையில் மேற்கொண்டிருந்த விரதமெல்லாம் வீண்போமே! போனாலும் பெரிதன்று! அதுவே முறை நொடியேனும் இனி நாம் தாமதிக்கலா காது!—விஜயா, எழுந்திரு, மனோஹரன் எங்கிருக் கிறான் என்றனை? வா—நாமிருவரும் போவோம வனிடம் காரியம் மிஞ்சிப்போய்விடுமுன்.—

வி : பிராணநாதர் நந்தவனத்தில் தெற்குப் புறம்—
மனோஹரன், சத்தியசீலர், ராஜப்பிரியன் வருகிறார்கள்.

[மனோஹரன் காலில் விழுந்து] பிராணநாதா! பிராண நாதா! எனக்கு மாங்கல்ய பிட்சை தாரும்,

ம : ஓஹோ! நாம் வருமுன் இவர்களுக்கு எப்படியோ சமா சாரம் தெரிந்துவிட்டாற்போலிருக்கிறது. விஜயா, இதென்ன இது? உனக்கென்ன வேண்டும்?

வி : நீர் இறப்பதில்லையென்று எனக்குச் சத்தியம்செய்து கொடும்.

ம : நான் எப்பொழுதும் இறப்பதில்லையென்றோ?

வி : இப்பொழுது நீர் இறப்பதில்லையென்று சத்தியம் செய்து கொடும். இல்லாவிட்டால் உமது பாதத்தை நான் விடேன்.

ம : இதென்ன விந்தை? விஜயா! என் காலை விடு! அதோ பார், என் தாயார் எனக்காக நின்றுகொண்டிருக்கிறார் கள்!

வி : நீர் சத்தியம் செய்து கொடுத்தாலொழிய நான் விடவே மாட்டேன், பிராணநாதா! [அழுகிறாள்.)

ம : கண்ணே! அழவேண்டாம். அப்படியே ஆகட்டும். எழுந் திரு.

ரா : (சத்தியசிலருக்கு) எங்கே ஐயா போயிற்று, உமக்குப் புத்தி? இதையெல்லாம் பார்த்துக்கொண்டு நாம் சும்மா விருப்பதோ ?

ம : அம்மணி, நாங்கள் வருமுன் எல்லாவிஷயங்களும் உங் களுக்குத் தெரிந்துவிட்டாற்போலிருக்கிறது! யார் சொல்லியிருக்கக்கூடும் ?

ப : சத்தியசீலரே, இது உண்மைதானோ? என்ன காரணத்திற்காக மஹாராஜா இவ்வாறு கட்டளையிட்டார்?

ச : அம்மணி, உண்மைதான், தாங்களே நேரிற் பார்த்துக் கொள்ளலாம். (உத்தரவைக் கையில் கொடுத்து) அம்மணி, தாங்களெல்லோரும் ஏன் வருத்தப்பட வேண்டும்? என்னாலாவது ஒன்றுமில்லை. நான் இவ்வுலகில் இனி பெறப்போகிற சுகம் ஒன்றுமில்லை; என் அற்ப உயிரைத் தங்கள் பொருட்டும் மனோஹரர் பொருட்டும் விடுவதைவிட வேறு எனக்கென்ன உயர்ந்த கதி வேண்டும்? ஆகவே நானிறக்கச் சித்தமாயிருக்கிறேன்.

ம : (எழுந்திருந்து) சத்தியசீலரே! இம் மாற்றங் கூற வேண்டாமென்று உமக்கு நான் எத்தனை முறை சொல்வது? இன்னொரு முறை இதைக் கூறுவீராயின் நான் இன்னது செய்வேனென்று சொல்லமாட்டேன் என்னுயிருள்ளளவும் என் பொருட்டு ஒரு எறும்பும் இறக்கச் சம்மதியேன் நான்!

ப : (உத்தரவைத் திருப்பிக் கொடுத்து) மஹாராஜா இதற்கு ஒரு காரணமுங் கூறவில்லையா?

ச : அம்மணி, நான் எவ்வளவோ நியாயங்களைக் கூறிப் பார்த்தேன்! எவ்வளவோ வேண்டினேன்! ஒரு காரணமுங் கூற மாட்டேனென்றார்.

ப : சத்தியசீலரே, இப்போதிதற்கென் செய்வது?

ரா : என்ன செய்வதாவது?

ம : என்ன செய்வதாவது! அம்மணி, இன்னும் சந்தேகமா? இவ்வளவிற்கும் அத்துஷ்டை வசந்தசேனை காரணமாயிருக்கிறாள்? என்பதற்குச் சந்தேகமில்லை. அவள் தான் இவ்வாறு மஹாராஜாவுக்குப் போதித்திருக்க வேண்டும். அவளை உடனே கொன்றுவிட்டால், பிறகு நாம் மஹாராஜாவை வசப்படுத்திக்கொள்ளலாம். பிறகு நமது துயரமெல்லாம் பறந்தோடிப்போம். அம்மணி, என்ன சொல்லுகிறீர்கள்? நான் உமது கட்டளையை மீறி நடக்கமாட்டேன் என்பது உமக்கே தெரியும். ஆதலால், ஒரு வார்த்தை சொல்லும்; இந்த

நொடியே நான் வசந்தசேனையைக் கொன்று பழி வாங்குகிறேன்!—அம்மணி, என்ன நான் கேட்பதற்குப் பதில் கூறாதிருக்கிறீர்கள்?

ரா: அம்மணி, இனி தாங்கள் உத்தரவளிக்கத் தாமதிக்க லாகாது! தாங்கள் ஒன்றிற்கும் அஞ்சவேண்டாம். வசந்தசேனை இறப்பாளாயின் மஹாராஜாவைப் பிடித் திருக்கும் சனி ஒழியும்; அவர் முன்போலாகிவிடுவார். வசந்தசேனையிறந்தால் நமக்கு மாத்திரமல்ல, இந்நகர வாசிகளுக்கெல்லாம் சுபமாகும். எப்படியாவது தாங்கள் பரோபகாரத்தையெண்ணியாவது இந்த உத்தரவளிக்க வேண்டும்.

வி: ஆமாம், மாமி! வசந்தசேனை செத்தால்தான் நல்லது! என்னையும் பிராணநாதரையும், உம்மையும் என்ன என்ன வைதாள் அன்றைத்தினம்!

ச: அம்மணி, ஒரு விதத்தில் இது நல்ல யோசனையென்றே தோன்றுகிறதெனக்கு, எப்படியும்—

ப: சத்தியசீலரே! என்ன நீரும் இவர்களுடன் சேர்ந்தீர்? மனோஹரா, நீ கூறியதெல்லாம் உண்மையே. வசந்த சேனைதான் ஒருவேளை இதற்கெல்லாம காரணமா யிருந்தாலுமிருக்கலாம். ஆயினும் நான் பழிவாங்குகிற விஷயத்தைப்பற்றி யோசிக்குமுன், மஹாராஜா என்ன காரணத்தைக் குறித்திவ்வாறு கட்டளையிட்டாரென்று விசாரித்தறியவேண்டும்—

ம: அம்மணி, இதென்ன மறுபடியும் பழையகதை ஆரம்பிக் கிறீர்களே? இன்னும் நியாயங்கேட்பதென்ன அவரை? நான் சாகவேண்டிய நியாயந்தான்! வேறென்ன வேண்டும்? இந்த நியாயம் தங்களுக்குச் சம்மதிதானோ?

வி: பிராணநாதர், தாம் இப்பொழுது இறப்பதில்லை யென்று எனக்கு வாக்களித்திருக்கிறீர்கள், மறவாதீர்!

ம: அம்மணி, இது உமக்கே நியாயமாகத் தோற்றுகிறதா? இனி என்னால் சும்மாவிருக்கமுடியாது! ஒரு வார்த்தை

சொல்லும். அரி அரப்பிரம்மாதிகள் வந்து தடுத்தாலும் அந்த வசந்தசேனையைக் கொன்று அரை நொடியில் எல்லாவற்றையும் சரிப்படுத்திவிடுகிறேன்! அம்மணி, என்ன சும்மாவிருக்கிறீர்கள்? அவள் உங்களுக்குச் செய்த தீங்குகளையெல்லாம் மறந்தீரோ? மஹாராஜாவைத் தாங்கள் பதினாறு வருடங்களாகப் பாராதிருப்பதற்கு அவள்தான் காரணமென்பதையாயினும் நினையீரோ? நம்மிருவருடைய உயிரையும் சற்றுமுன்பாகப்போக்கப் பார்த்தாள் என்பதைக் கவனியீரோ? இவைகளெல்லாம் போகட்டும். நேற்றைத் தினம் என்னைத் தூற்றி, உம்மையும் அவமானப்படுத்தினாள் என்பதாவது தம்முடைய ஞாபகத்திற்கு வரலாகாதா? அம்மணி, இப்பொழுது மஹாராஜாவைக் கொண்டு என் உயிருக்கு உலைவைத்திருக்கிறாள். அம்மா! அம்மா! இனி என்னால் பொறுக்க முடியாது! ஒரு வார்த்தை சொல்லும்! ஒரு ஒரு வார்த்தை!

[காலில் வீழ்ந்து தேம்பி அழுகிறான்.]

ப: [வாரி எடுத்துக் கட்டி முத்தமிட்டு] கண்ணே! மனோஹரா! நீ கூறுவதெல்லாம் உண்மையாயிருப்பினும் நாம் ஒரு காரியத்தைத் தீர விசாரியாது ஒன்றும் செய்யலாகாதே.

ம: அம்மா, நீர் என்மீது கொண்டிருக்கும் பட்சத்தைவிட வசந்தசேனையின் மீது அதிக பட்சமுடையவர்களாயிருக்கிறது போல் தோன்றுகிறது. அவளுக்காகத் தாம் இவ்வளவு பரிந்து பேசுவானேன்? நான் எவ்வளவு துயரம் சகிக்கிறேனென்று உங்களுக்குத் தெரியாது கொஞ்சமேனும்!

[ஒரு புறம் கோபமாய்ப் போய் உட்காருகிறான்.]

ப: [ஒரு புறமாக சத்தியசீலருக்கு] சத்தியசீலரே, சற்று நாம் பொறுப்போமாயின், மஹாராஜாவின் மனம் திரும்பினும் திரும்பும். மனோஹரன் நேராகச் சென்று மஹாராஜாவை நியாயங் கேட்டுப்பார்க்கிறது தானே?

ச: ஆம், அது நல்ல யோசனையெனத் தோன்றுகிறதெனக்கு.

ப : கண்ணே, மனோஹரா, இப்படி வா. ஏன் என்மீது வீணில் கோபித்துக் கொள்ளுகிறாய்?

ம : உங்கள்மீது கோபங்கொள்ளவில்லையம்மா! ஆயினும் நான் எவ்வளவுதான் பொறுத்திருப்பது?

ப : கண்ணே, நான் சொல்வதைக் கேள். நீ இப்பொழுதே நேரிற் சென்று மஹாராஜாவைக்கண்டு நியாயம் கேட்டுப்பார். அவர் என்ன சொல்லுகிறாரோ அதை யறிந்துகொண்டு பிறகு நடக்கவேண்டிய காரியங்களைத் தீர்மானிப்போம்.

ம : அம்மணி, அம்மணி! இதிற் சற்றும் பிரயோஜனமில்லை. அரை நொடியில் முடிக்கவேண்டிய வேலைக்காகத் தாம் எவ்வளவு கஷ்டம் வைக்கிறீர்கள்! ஆயினும் தமக்காக அப்படியே செய்கிறேன். இதன் பிறகாவது என்னிஷ்டப் படி செய்ய உத்தரவு கொடுக்கிறீர்களா?

ப : அதற்கென்ன? பார்த்துக் கொள்வோம். நீ சீக்கிரம் புறப்படு—சத்தியசீலரே, ராஜப்பிரியா, நீங்களிருவரும் உடன் செல்லுங்கள்.

ம : அப்பா! இப்படி கட்டுப்பட்டிருப்பதைவிட, இந்த உலகத் தில் பிறவாதிருப்பதே நலம். அல்லது பிறந்தால் பேடியாகவாவது பிறக்கவேண்டும்!—நான் வருகிறேன்.

[மனோஹரன், சத்தியசீலர், ராஜப்பிரியன் போகிறார்கள்.]

ப : கண்ணே! மனோஹரா! நீயும் என்னை வெறுத்துச் செல்கிறாயோ? கண்ணே! கண்ணே! நான் என் செய் வேன்? வேறு என் செய்வேன்?

வி : மாமி! நீர் என் பிராணநாதருக்காக வருத்தப்பட வேண்டாம். அவர்தான் இப்பொழுது இறப்பதில்லை யென்று வாக்களித்திருக்கிறாரே எனக்கு.

ப : விஜயா, நான் சற்று தனித்திருக்க வேண்டும், நீ சற்று அப்புறம் போயிரு.

வி : அப்படியே, மாமி; நீங்கள் அதைரியப்படவேண்டாம்.
[போகிறாள்]

ப : இனி நாம் தாமதிக்கலாகாது. ராஜ சபையில் என்ன நடக்கிறதோ? மஹாராஜா இணங்காவிடின், மனோஹரன் அவரையும் கொன்றாலுங் கொன்று விடுவான் வந்தது வரட்டுமென்று. ஐயோ! நான் என்ன செய்வது? இப்படிப் பார்த்தால் புதல்வன், அப்படிப் பார்த்தால் புருஷன். ஆம், அவர் என்னை எப்படி வருத்திய போதும், புருஷன் புருஷன்தான், நான் அவருடைய பத்தினிதானே! ஐயோ! இந்தத் தர்மசங்கடத்திற்கு நான் என் செய்வது? இரண்டு பாம்புகளுக்கு இடையிலகப்பட்ட தேரைபோலானேனே!—ஆம், ஆம். இப்பொழுது நம்முடைய சபதத்தையெல்லாம் பார்த்தால் முடியாது! எப்படியும் நான் ராஜசபைக்குப்போக வேண்டும். எதனாலும் முடியாமற்போனால், நானாவது அவர் காலில் வீழ்ந்து வேண்டிப்பார்க்கிறேன். அதிலும் அவர்மனம் இளகாமற் போகுமோ பார்ப்போம். நான் ஒருவருமறியாதபடி என்துருவத்தை மறைத்துச் செல்லவேண்டும்!—ஈசனே ஈசனே! இப்படியும் என்மன நிலைமையைப் பரீட்சிப்பீரா?

[விரைந்து போகிறாள்.]

காட்சி முடிகிறது.

## நான்காவது காட்சி

இடம்—மஹாராஜாவின் கொலு மண்டபம். காலம்-மாலை

புருஷோத்தமன் வசந்தசேனையுடன் சிம்மாதனத்தில் வீற்றிருக்கிறார்;

மந்திரிகள், பிரதானிகள் முதலானோர் புடைசூழ்ந்திருக்கின்றனர்.

வசந்தன், விகடன், அமிர்தகேசரி ஒருபுறம் உட்கார்ந்திருக்கின்றனர்.

மற்றொருபுறமாக ரணவீரசேது முதலானோர் உட்கார்ந்திருக்கின்றனர்.

ராஜப்பிரியன் சிம்மாதானத்திற்கு எதிரில் நிற்கிறான்.

பு: ராஜப்பிரியா, எதற்காக அவன் என்னைப் பார்க்க விரும்புகிறான்?

ரா: அது அவர் வந்து நேரிற் காணும்பொழுது தெரிகிறது. மஹாராஜா, எட்டியாவது சீக்கிரம் காவலாளிகட்கு உள்ளே விடும்படி உத்தரவு செய்யும். இல்லாவிடின் உண்மையைக் கூறுமிடத்து அவர்களையெல்லாம் மீறிக் கொண்டு வருவார், அவ்வளவுதான்!

வசே: [மஹாராஜாவின் காதில் ஏதோ ரகசியமாய்க் கூறுகிறாள்.]

பு: அப்படியல்ல, ராஜப்பிரியா, அப்படி மனோஹரன் என்னைக் காணவேண்டுமென்றால் நமது அரண்மனைச் சேவகர்களைக் கொண்டு இரும்புச் சங்கிலிகளால் கட்டிக் கொண்டு வரும் பட்சத்தில் காண்கிறேன். இல்லாவிட்டால் பார்க்கமாட்டேன்.

ரா: [ஒரு புறமாக] ஏன்? மஹாராஜாவுக்குப்பயமாய் இருக்கிறது போல் காண்கிறது!—மஹாராஜா, இதென்ன யோசனை? மனோஹரரையா இரும்புச்சங்கிலிகளாற் கட்டிக் கொண்டு வரும்படி கூறுகிறீர்! என்ன யுக்தி? அதைவிட ராஜகேசரியை தாமரை நூலினாற் கட்டிக்

கொண்டு வரும்படி கட்டளையிடலாகாதா? மஹாராஜா, அவரையார் கட்டுவது? எப்படி கட்டுவது? மனோஹரரை இன்னாரென்று மறந்தீரோ? மஹாராஜா, தங்களிடம் ஒன்றையும் எனக்கு ஒளிக்க இஷ்டமில்லை. தாங்கள் முன்பிட்ட கட்டளையைக் கேட்டபொழுதே எல்லோரையும் அரை நொடியில் அதமாக்கியிருப்பார் ஆயினும் தந்தையாயிற்றேயென்று பார்க்கிறார்போலிருக்கிறது; நாங்கள் கூறச் சற்றுக் கோபத்தையடக்கிக்கொண்டிருக்கிறார். இல்லாவிடில் இக்காவலாளிகள் தடுக்கவோ அவர் நின்றுவிடுவார்? அவர்கள் ராஜ கட்டளையென்று காலில்விழுந்து வேண்ட, பச்சாத்தாபப்பட்டு, அவர்கள்மீது குற்றமில்லையென்று கண்டு, உலகமரியாதைக்காக என்னையனுப்பித் தம்மைக் கேட்டுவரச் சொன்னார்.

பு: ராஜப்பிரியா, இதையெல்லாம் நீ எனக்குக் கூற வேண்டியதில்லை அவன் என்னைப் பார்க்கவேண்டுமென்றால் அவ்விதம் வந்தாலொழிய நான் பாரேனென்று சொல், போ!

ரா: உத்தரவுபடி, மஹாராஜா, நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். பிறகு தங்களுடைய இஷ்டம். அவரிடம் சென்று இதைச் சொல்கிறேன். இதனாலுண்டாகும் நன்மை தீமை தம்மையே சேரும்!

[போகிறான்.]

ஒரு மந்திரி: மஹாராஜா! மனோஹரர் இன்ன குற்றஞ் செய்தாரென்று நாங்களெல்லோரும் அறிய விரும்புகிறோம். என்ன காரணம்பற்றித் தாங்களிவ்வாறான கட்டளையிடும்படி நேரிட்டதோ அதை நாங்கள் தெரிந்துகொள்ளும்படி அனுக்கிரகிக்கவேண்டும்.

பு: அக்காரணத்தை உங்களுக்குக் கூற எனக்கிஷ்டமில்லை.

ர: மஹாராஜாவின் சித்தம்; மஹாராஜா, அவ்வாறே மனோஹரர் பெருங் குற்றஞ் செய்ததாயிருந்தபோதிலும், கருணைக் கடலாகிய தாம் அதை மன்னித்து, எங்களெல்லோரையும் சந்தோஷிப்பிக்கச் செய்வீர்களென்று மிகவும் பிரார்த்திக்கிறோம். எப்படியிருந்த

போதிலும் தங்களுடைய குமாரர்; குமாரராயிற்றே யென்று கேட்க வரவில்லை நாங்கள், ஆயினும் உயிரிழக்கும்படி கட்டளையிட்டதைவிட வேறு ஏதாவது தண்டனை விதிக்கலாகாதா? தாங்கள் அறியாத விஷயமன்று; ராஜப்பிரியர் கூறியவண்ணம் அவரைக் கொல்பவர் யாரிருக்கின்றனர்? அவர் முனிந்தால் இம்மூவுலகும் பொடியாய் விடுமே! ஆகையால், அவரது கோபத்திற்கு நம்மைப் பாத்திரர்களாக்கிக்கொள்ளலாகாது! அதுவுமன்றி, மனோஹரர் ஒருவரைப்பற்றி நமது பகைவரெல்லாம் அஞ்சியிருக்கின்றனர். அவர் நமது ராஜ்யத்திலில்லாவிட்டால் அவர்களெல்லாம் கொண்டாட்டத்துடன் நம்மை அதஞ் செய்ய வருவார்கள்; அன்றியும் மனோஹரர் இப்பொழுதுதான் வெற்றி விஜயனாய் நமது ஜன்ம சத்ருவாய பாண்டியனைக் கொன்று மீண்டமையால், நமது ஜனங்களெல்லாம் அவர் மீது அன்பு மிகுந்து, அவரைத் தெய்வம்போல் தொழுது வருகின்றனர். இப்பொழுது அவருக்குத் தாம் தீங்கிழைக்க நினைப்பதைக் கேட்பினும் ஜனங்களெல்லோரும் கலகஞ் செய்வார்கள்! இவைகளையெல்லாம் கருதாவிடினும், தமக்குப் பிற்காலம் அவரில்லாவிட்டால் இவ் விராஜ்யத்தையாள்பவர்யார்?—

வ : சந்தேகமில்லை! நாளில்லெயோ? சந்தேகமென்னா? மஹாராஜா! இவ்வளவு கஷ்டம் என்னாத்துக்கு? நம்போ பயித்தியர்கிட்டச் சொல்லி, மருந்து குடுக்கச் சொன்னா சுளுவா தீந்துப் பூடுவாரு அண்ணாத்தே, சந்தேகமென்னா இதுக்கு? அவருக்கும் பயித்தியம் புடிச்சி இருக்குது, உங்களுக்கும் பயித்தியம் புடிச்சியிருக்குது. எல்லாருக்கும் பயித்தியம் புடிச்சி இருக்குது! சந்தேகமில்லை! சந்தேகமில்லை!

பு : விகடா! வசந்தனை இங்கு யார் அழைத்துவரச் சொன்னது? அழைத்துக்கொண்டு போ வெளியே!

விக : ஐயா! போதும் உங்கபிரசங்கம், வாங்கோ. பழி ஒரண்டே. பாவம் ஒரண்டே. வாங்க, ஐயா வாங்க.

வ : இல்லெ மஹாராஜா! எம் முதுவேகூட வளெச்சுட்டாரு, நப்போல் வளெ! மஹாராஜா! நப்போல் வளெ!

சந்தேகமில்லை! சந்தேகமில்லை! [விகடன் உட்காரும்படி செய்கிறான்.]

ஒரு சேவகன் வருகிறான்.

சே மஹாராஜா! மனோஹரர் முதல் வாயிலைக் கடந்து உள்ளே வந்துகொண்டிருக்கிறார். இங்கு நாங்கள் கொலு மண்டபத்துள் விடுவதோ, அல்லது எப்படியோ உத்தரவு?

பு : (வசந்தசேனையைக் கேட்டு) வேண்டாம். இப்பொழுதிங்கே உள்ளே விடவேண்டாம். நான் ஆக்யாபித்தேன் என்று சொல் ஜாக்கிரதை!

சே : மஹாராஜா எங்களுக்குப் பயமாயிருக்கிறது! அவர் முனிந்தால் நாங்கள் எப்படி தடுப்பது?

பு : நான் ஆக்யாபித்தேன் என்று சொல்போ! பயப்படாதே போ! விலங்கில் பூட்டியிருக்கும்பொழுது பயமென்ன!

ஒரு மந்திரி : மஹாராஜா! அவரிதனாலெல்லாம் தடைபடுவரோ? அவர் வந்துவிட்டாலென் செய்கிறது?

ரா : மஹாராஜா, நாங்கள் கேட்டதற்குத் தாங்கள் இன்னும் பதில் அளிக்கவில்லை! எப்படியும் சீக்கிரம் எமது வேண்டுகோளுக்கிணங்கும்படி பிரார்த்திக்கிறோம் காரியம் மிஞ்சிப் போய்விடும்போல் தோன்றுகிறது. அவர் கோபங்கொண்டு வருவாராயின் —

சத்தியசீலர் விரைந்து வருகிறார்.

பு : சத்தியசீலா! உன்னை யார் இங்கு வரச் சொன்னது? நான் உனக்கிட்டிருக்கும் கட்டளையென்ன, நீ நடப்பதென்ன?

ச : மஹாராஜா! அவைகளையெல்லாம்பற்றி இப்பொழுது யோசிப்பதற்குக் காலமில்லை. மனோஹரர் அடங்காக் கோபங்கொண்டிருக்கிறார். இப்பொழுது இன்னும் சற்று நேரம் தாம் சும்மாயிருப்பீராயின், சோழ நாடெல்லாம் அழியுமென்பதற்குச் சந்தேகமில்லை! முன்பு அவர் விலங்கினாற் கட்டுண்டு வந்தாலொழிய பாரேனென்றீராம். அதைக் கேட்டவுடனே யுகாந்த காலாக்கினி

யெனச் சீறி இப்பொழுதே இப்பட்டண முழுவதையும் பொடிப்படுத்தி விடுகிறேனெனக் கூறினர்! நாங்கள் அருகிலிருந்து கோபத்தைச் சற்றுத்தணித்து, மஹாராஜாவின் கட்டளைப்படி நடப்பதில் இழிவொன்றுமில்லையென்று கூறவே, உடன்பட்டுத்தானாகத் தனது கையினால் தளைகளையெடுத்துப் பூட்டிக்கொண்டார். நமது சேவகர்கள் அவரருகிற் செல்லவும் பயப்படுகிறார்கள். இப்படி தமது சொல்லுக்குடன்பட்டுவரும் அவரை மறுபடியும் இங்கு உள்ளே வரலாகாதெனக் கட்டளையிட்டீராமே! ஐயனே! இனி யோசிப்பதற்கு நேரமில்லை. ஐயனே! மிஞ்சிவிடும்! உடனே சேவகர்களுக்கு அவரை உள்ளே விடும்படி கட்டளையிடாவிட்டால் இந்த அரண்மனை அதமாய்விடும் அரை நொடியில் என்பதற்குச் சந்தேகமில்லை! மஹாராஜா, இனி தாமதிக்கலாகாது!—

எல்லோரும் : (நின்று) ஆம்! ஆம்! மஹாராஜா! உடனே கட்டளையிடும்!

ம : [உள்ளே இருந்து] ஆஹா! யார் அவன் என்னை உள்ளே விடேன் என்கிறது?

எல்லோரும் : வந்துவிட்டார்! வந்துவிட்டார்!

(கொலுவில் குழப்பமுண்டாகிறது.)

இரும்புச் சங்கிலிகளால் தன்னைக் கட்டிப் பிடித்திருக்கும் ஆறு சேவர்களையும் அப்படியே இழுத்துக்கொண்டு மனோஹரன்.

கோலாகலமாய் விரைந்து நுழைகிறான்.

ராஜப்பிரியன் சற்று பின்னால் வருகிறான்.

பத்மாவதி யாவருமறியாதபடி பின்னால் வந்து

ஒரு புறமாக முக்காடிட்டு நிற்கிறாள்.

ம : தந்தையே! நான் விலங்கிற் பூட்டப்பட்டாலன்றி என்னைக்காணமாட்டேனென்றது உண்மைதானா? இப்பொழுது இங்கிருக்கும் காவலாளர்க்கு என்னை உள்ளே

விடலாகாது என்று நீர் கட்டளையிட்டது உண்மை தானா?—ஏன் தலை குனிந்து கொள்ளுகிறீர்கள்? நேராக என்னைப் பாரும்! அவைகளெல்லாம் போனாற் போகட்டும். என்னை என்ன காரணம் பற்றிக் கொல் லும்படியாகச் சத்தியசீலருக்குக் கட்டளையிட்டீர்? நான் என்ன குற்றஞ்செய்தேன்? என்னைக் கொல்லா விட்டால், இன்று சாயங்காலத்திற்குள்ளாக சத்திய சீலரைச் சிரச்சேதஞ் செய்வதாக எழுதிக்கொடுத்தீரே, என்ன காரணம்பற்றி? அவரும் என்ன தவறு செய்தார்? —என்ன நான் கேட்பதற்கொன்றும் கூறாது தலை வணங்கியிருக்கிறீர்—தந்தையே! நான் இதுவரையில் என் தாயாருக்கும் எனக்கும் செய்துவந்த தீமைகளை யெல்லாம் எவ்வளவோ பொறுத்தேன்! இனி நான் பொறுக்கமாட்டேன்! இதற்கு நியாயம் எடுத்துரைக் கிறீரா என்ன? தந்தையாயிற்றே என்று இவ்வளவு காலம் அந்த வசந்தசேனையின்பொருட்டு தாம் எங் களுக்கிழைத்த துன்பங்களையெல்லாம் பொறுத்தேன்! இதோ கடைசி முறை சொல்லுகிறேன்! இனி பொறுக்க மாட்டேன்!—என்ன நியாயங் கூறுகிறீர்? ஏன் சும்மா இருக்கிறீர்?—இதுவோ உம்முடைய செங்கோன் முறைமை? யார் உமக்கு இந்நீதி கற்பித்தது? வசந்த சேனையோ? அண்ணா! ஒரு அற்பப் பெண் வலையிலகப் பட்டுத் தாம் இவ்வாறு நியாயமெல்லாம் தப்பி நடக்க லாமோ? காரணங் கூறாது ஒருவனைக் கொல்லும்படி கட்டளையிட உமக்கு எந்தத் தர்ம சாஸ்திரத்திற் கூறி யிருக்கிறது? சோழ நாட்டிற் கதிபதியாகிய தாமே இவ்வாறு தர்மந் தவறி நடந்தால் உமது பிரஜைகளெல் லாம் சன்மார்க்க வழியில் எவ்வாறு நடப்பார்கள்? உமது பிரஜைகளே உம்மை இழிவாக மதியார்களோ உமது பகைவர்களெல்லாம் உம்மைப் பழியார்களோ? என்ன சொல்லுகிறீர்கள்? எனக்கு நியாயமாவது கூறும் —அல்லது அக்கட்டளையையாவது மீட்டுக்கொள்ளும். என்னுயிருக்காக நான் அஞ்சவில்லை. என்னுயிரைப் போக்க எவன் சக்தனோ அவன் வந்து அதைக் கொண்டு போகட்டும். ஆயினும் இந்த அநீதி நமது ராஜ்யத்தில் நடந்தால் நமது வம்சத்திற்கே இழிவாயிற்றென்றே நான் யோசிக்கிறேன். உமது மைந்தனாயிற்றே நான் என்று கேட்க வரவில்லை; யாராயிருந்தாலுமென்ன? நியாயம் என்பது எல்லோருக்கும் ஒன்றுதான்.—என்ன காரணம்பற்றி என்னைக் கொல்லும்படி கட்டளையிட்

டீர்கள்? காரணத்தைச் சொல்லும். அப்படி நான் செய்த குற்றம் உயிரிழக்கவேண்டிய அவ்வளவு கொடிய தானால் நானே, உமது முன்னிலையிலேயே, என் உயிரைப் போக்கிக் கொள்கிறேன்.—என்ன சொல்லு கிறீர்? நான் பன்முறை கேளேனினி. நீதி வழுவாது அரசு செலுத்திய புருஷோத்தமராஜன் ஒரு காரணமு மின்றி தன் மைந்தனைக்கொல்லும்படி கட்டளையிட்டா ரென்னும் வசை யாரைச் சேரும் முடிவில்? உம்மை யன்றோ?—

பு: தன் மைந்தன்! என் மைந்தன்! என் மைந்தனா நீ?

ம: என் மைந்தனா நீ! என்ன சொன்னீர்? ஹா!

(திமிறித் தன்னைக் கட்டிய சங்கிலிகளை யெல்லாம் அறுத்துக் கொண்டு)

அப்படியா சமாசாரம்!

எல்லோரும்: ஹா! ஹா!

ம: புருஷோத்தம மஹாராஜனே! என்ன சொன்னீர்? அந்த வேசி வசந்தசேனை கூறியதைத்தாமும் நம்புகிறீரோ? இதோ உம்மிருவரையுங் கொன்று பழி வாங்குகிறேன்!

(உடைவாளை வீசி சிம்மாதனத்தினருகே விரைகிறான்.)

எல்லோரும்: ஆ! ஆ! அரசே! பொறும்! பொறும்!

ம: தனதுயிரை ஒரு பொருளாக மதிக்கின்றவன் என் எதிரில் நில்லான் இப்பொழுது!

(மந்திரி பிரதானிகள் இரண்டு புறமும் பயந்து ஒதுங்கிப் போகின்றனர்.)

ச: [மனோஹரன் காதில்] அரசே! அவசரப்படாதீர்! அவ சரப் படாதீர்! தம் தாயாருக்குக் கூறிய வார்த்தையை மறவாதீர்! நான் சொல்வதைக்கேளும்!

ம: சத்தியசீலரே! நீர்காதீர் என்னெதிரில்! எனக்கிப்பொழு திருக்கிற கோபத்திற்கு உம்மையும் பாரேன். நில்லாதீர் என்னெதிரில்!—[ஒரு புறமாக அவரைத் தள்ளிவிட்டு]

புருஷோத்தம ராஜனே! என்ன யோசிக்கிறீர்? எடுத்துக் கொள்ளும் உமது வாளை. மனோஹரனுடைய புய வலிமையை இன்றே காண்பீர்! நிராயுதனாயிருக்கும் உம்மைக் கொல்வது நியாயமன்று—எடும் வாளை! அல்லது தாம் கூறியது தவறென்று என்னை மன்னிப்புக் கேளும்! இனி ஒரு நொடியேனும் சும்மா இருப்பீராயின், தர்மத்தையும் பாராமல் என்னைத் தூற்றிய தலையை வெட்டியெறிவேன்!—ஆஹா! வசந்தசேனை! நீயும் பக்கத்திலிருக்கிறாயா? உங்களிருவரையும் ஒரே வெட்டாக வெட்டியெறிகிறேனிதோ!—புருஷோத்தம ராஜனே! காத்துக்கொள்ளும் உமது தலையைச் சௌரியமிருந்தால்!

[சிம்மாதனத்தின்மீது பாய்ந்து வாளை யோங்குகிறான். சபையோருக்குள் பெருங் குழப்பமும் ஆரவாரமுமுண்டாகிறது].

மறைந்திருந்த பத்மாவதி வேகமாய் வருகிறாள்.

ப: [மனோஹரன் கரத்தைப் பிடித்துக் கொள்ளுகிறாள். முக்காடு நழுவி முகம் விளங்குகிறது.] மனோஹரா! நில்! விடு வாளை!

எல்லோரும்: பத்மாவதிதேவி! பத்மாவதிதேவி!

ம: அம்மா! இங்கெங்கு வந்தீர்கள்? அங்கல்லவோ இருந்தீர்களென்று பார்த்தேன்! இங்கே ஏது வந்தது?

ப: அதெல்லாமிருக்கட்டும், விடு வாளை! நீ எனக்குவாக்களித்ததென்ன, இப்பொழுது செய்யத் துணிந்ததென்ன? விடு!

ம: அம்மணி! இப்பொழுதென்னை மன்னிக்கவேண்டும். இவ்விருவரையுங் கொன்றே என் வாளை விடுவேன்!—புருஷோத்தமராஜனே! எங்கே நழுவப் பார்க்கிறீர்? நீர் உயர் குலத்திற் பிறந்த க்ஷத்திரியனாயிருந்தால் இருந்த இடத்தை விட்டுப் பெயராது என்னுடைய வாளுக்கு பதில் சொல்லி விட்டுப் போம்!

ப: மனோஹரா! என்ன, உன்னையும் மறந்து பேசுகிறாய்! விடு உடனே வாளை!

ம : அம்மணி! சற்று முன்பாக மஹாராஜா கூறியதைக் கேட்டீரா நீர்? இந்த வேசியாகிய வசந்தசேனை கூறியதைத் தாமும் நம்புகிறார்போலும்! இதன்பொருட்டே என்னைக் கொல்லும்படி கட்டளையிட்டிருக்கவேண்டும்! அம்மணி, இவ்வார்த்தையை நான் செவியுறக் கேட்டும் சும்மாவிருப்பேனோ? இதோ இவர்களிருவரையும் நொடிப் பொழுதில் கொன்று, நமக்கு இவர்களிழைத்த தீங்கிற்கெல்லாம் பழி வாங்குகிறேன், இதோ, உமது கண்முன்பாகவே! சற்று ஒதுங்கியிரும்! என் முன் நிற்க வேண்டாம்.

ப : நீ இந்த வாளைக் கொடுத்துவிட்டுப் பின் சென்றாலல்லாமல் நான் இவ்விடத்தை விட்டுப் பெயரேன்!

ம : அம்மணி! சுத்தவீரனாகிய நானோ முன் வைத்த காலைப் பின் வாங்குவேன்? மானமாகிய ஆபரணத்தையே முதலாகக் கொண்ட நானோ என்னை இழிவாகப் பேசியவர்களைச் சும்மா விட்டுவிடுவேன்? அம்மா! என் கோபம் இப்பொழுது மூண்டெரிகிறது! இப்பொழுதென்னைத் தடுக்கவேண்டாம்! இதோ இந்தப் புருஷோத்தமராஜனது நாவை வெட்டியெறிந்து, தலையைச் சேதித்து யமபுரத்துக்கனுப்புகிறேன்! ஒதுங்கும் சற்றே!

ப : மனோஹரா! என் சொற்படி கேளாய் நீ? எனக்குச் செய்த வாக்குத்தத்தத்தை மறந்தனையோ?

ம : அம்மா! அதையெல்லாமிப்பொழுது நான் யோசிக்க மாட்டேன். இப்பொழுது நீர் என்னைத் தடுப்பதில் பயனில்லை! ஒதுங்கியிரும் சற்றே.

ப : மனோஹரா! என் சொல்லைக் கேட்கமாட்டாய் நீ?

ம : கேளேன் இப்பொழுது, மும்மூர்த்திகள் வந்து தடுத்த போதிலும், என் பகையை முடித்தே மறு வேலை பார்ப்பேன்!

ப : நீ என் குமாரன் என்பது உண்மையானால் விடு வாளை

ம : அம்மணி! இதென்ன இது ?

ப : மனோஹரா! உனக்கு என் சொற்படி நடக்க இஷ்ட மில்லாதிருக்குமாயின், முதலில் உன்னைப் பெற்ற தாயாகிய என்னைக் கொன்ற பிறகே நீ அங்கு செல் வாய்! உன்னைப்பெற்ற உதரத்தின் உதிரத்தில் உன் வாளைத்தோய்த்த பிறகே மஹாராஜாவிடம் அணுகு வாய்! அப்படி உனக்கிஷ்டமிருந்தால் இதோ நிற்கிறேன் நான் பெண்பால், உன்னை ஈன்ற பேதை, என்னை முதலில் கொன்றுவிட்டு பிறகு ஒரு அடி யெடுத்து வைப்பாய்!—உம்! ஏன் யோசிக்கிறாய்? கொல் என்னை முன்பு! இதற்குத்தானே உன்னைப்பத்து மாதம் சுமந்து வருந்திப் பெற்றேன்!

ம : [பாதத்தில் வீழ்ந்து கதறிப் புலம்பி] அம்மணி! அம்மணி என்ன வார்த்தை சொன்னீர்கள்! ஐயோ! இதையும் உமது வாயினின்றும் நான் கேட்கவேண்டுமா? அம்மா! என்னை உயிருடன் கொல்கிறீர்களே உமது மொழி யால்! மஹாராஜா என்னைக் கொல்லப்பார்த்தார் நீர் என்னைக் கொன்றே தீர்த்து விடுகிறீர்கள்! ஐயோ இந்தத்தர்ம சங்கடத்திற்கு நான் என் செய்வது? அம்மா! இந்நிந்தையை நான் எவ்வாறு பொறுப்பேன்? ஒரு வார்த்தை சொல்லுமே, ஒரு நொடிப்பொழுது எனக்கு விடையளியுமே! அதற்குள் இவர்களிருவரையுங் கொன்று, என் மானத்தைக் காப்பாற்றிக்கொள்ளு கிறேன்! அம்மணி! இந்த இழிவு உம்மையுந் தொடர்ந்த தன்றோ? அம்மா! அம்மா! க்ஷத்ர வீரனாகிய நான் இவ்வசையைக் கேட்டும் பழிவாங்காதெவ்வாறு பொறுத் திருப்பேன்? அம்மணி! எனதுள்ளம் பதறுகிறதே! என் கை துடிக்கிறதே! செய் என்று ஒரு வார்த்தை சொல் லுமே! இச்சோழ நாடு முழுவதும் தரையுடன் தரை யாக்கிவிடுகிறேன்! ஐயோ! வெற்றி வீரனாகிய மனோஹரன் இவ்வசையைக் காதாரக் கேட்டும் சும்மா பொறுத்துக்கொண்டிருந்துவிட்டான் என்று எல்லோரும் ஏளனம் செய்வார்கள் நாளை! அம்மணி! அம்மணி!

ப : மனோஹரா! அப்படி ஒருவரும் ஏளனம் செய்யமாட் டார்கள். மூவுலகையும் வெல்லும் வல்லமையுடைய மனோஹரன் தன் தாயார் சொற்படி நடந்தானெனப் புகழ்வார்கள்! மனோஹரா, இனி நான் பன்முறை உனக்குக் கூறமாட்டேன், நீ என் பிள்ளையென்பது உண்மையானால் எழுந்திரு உடனே!

ம : அம்மணி! [எழுந்திருக்கிறுன்.]

என் சொற்படி நடக்கிறாயா, மாட்டாயா? நீ என் மகனா, அல்லவா?

ம : என்ன உமது சொற்படி நடப்பது?

ப : உனது வாளை இப்படிக்கொடு.

ம : இதோ! [வீசி எறிகிறுன்]

ப : மனோஹரா! உனக்கென்ன அவ்வளவு அவமரியாதை?

ம : அம்மா, இப்பொழுதாவது ஒரு வார்த்தை சொல்லும், நிராயுதபாணியாய் இப்படி அவர்களிருவரையும் கசக்கிப் பிழிந்துவிடுகிறேன்!

ம : அதெல்லாமிருக்கட்டும்! என் சொற்படி கேட்கின்றையா மாட்டயா?

ம : தீர்ந்ததே, இன்னுமென்ன?

ப : நீ மஹாராஜாவின் சொற்படி நடக்கவேண்டும்.

ம : மஹாராஜாவின் சொற்படி நடப்பதாவது! அவர் சொற்படி நடப்பதென்றால் நான் இறக்க வேண்டியது தான்!

ப : ஆம்! உன்னையிறக்கும் படியாகத்தான் சொல்லுகிறேன்: மஹாராஜா அவ்வாறு கூறிய பிறகு, நாமிவ்வுலகில் இருப்பது நியாயமன்று. அவர் சொற்படி நீ இறப்பாய்—நானும் விஜயாவும் இதோ அக்கினிப் பிரவேசமாகி உன்னை வந்து சேர்கிறோம்—அஞ்சாதே!

ம. அம்மணி! என்னை இறக்கும்படியா சொல்லுகிறீர்கள்

ப, ஆம்.

ம. அம்மா! உம்முடைய வாயால் இறந்துபோகும்படியா சொல்லுகிறீர்கள்?

ப. ஆம்.

ம. ஆம்!—சரி, இனி உயிர் வாழ்வது நியாயமன்று!-சத்திய சீலரே! என் பிரக்ஞை தப்பும் போலிருக்கிறது! நான் மூர்ச்சையா யிருக்கும்பொழுதே என்னைக் கொன்று விடும். உமது கையால்! [மூர்ச்சையாகிறுன்].

ப : சத்தியசீலரே! மனோஹரனை மூர்ச்சையாயிருக்கும் பொழுது கொல்வது தர்மமன்று; பிரக்ஞை வந்தவுடன் நமது அரண்மனைக் கொத்தளத்தருகில் கொண்டு போய்—கொன்று விடும்!

[தன் முகத்தை மூடி விரைந்து வெளியிற் செல்கிறாள்—சபையில் ஆரவார முண்டாகிறது—புருஷோத்தமர் வசந்தசேனையை ஒரு புறமாகத் தள்ளி விட்டு மற்றொரு புறமாகப் போகிறார். தலை சாய்ந்தவணணமாய் வசந்தசேனை பின் தொடருகிறாள் ]

ரா : ஐயா! சத்தியசீலரே! சீக்கிரம் காற்று நன்கு வருமிடம் மனோஹரனை எடுத்துச் சென்று மூர்ச்சை தெளிவிக்க வேண்டும். எடும் ஐயா, அந்தப் பக்கமாக. ஒழிந்தது சோழ நாட்டின் மகிமை! அழிந்தது சோழ ராஜ்ஜியம்! [மனோஹரனை இருவருமாக எடுத்துச் செல்கின்றனர்' ; கலைகிறது.]

காட்சி முடிகின்றது

## ஐந்தாம் காட்சி

இடம் : கோட்டை மதில் காலம் :—நள்ளிரவு
புருஷோத்தமர் ஒரு சேவகனைப் போல் வேஷம் பூண்டு அலங்கத்தின் ஒரு புறத்திலிருந்து வருகிறார்.

பு : என் மனம் போலவே இன்று ஆகாயமும் இருண்டிருக்கிறது! ஆஹா!

என்ன தப்பு செய்ய விருந்தேன்! பத்மாவதி வந்து தடுக்காவிட்டால் இன்று நான் மனோஹரன் வாளால் இறந்திருப்பேன் என்பது நிச்சயம் என்னுயிரைக்காப்பாற்றி மனோஹரனை இறக்கவும் கட்டளை—இட்ட பத்மாவதி—யின்மீது நான்

சந்தேகங் கொண்டேனே! சீ! இக் கற்பிற் கரசியோ எனக்கு துரோகம் நினைத்திருக்கக்கூடும்? நான் அவ்வாறு எண்ணியதே மஹா பாதகம்! அதற் காகவே நான் இவ்வண்ணம் தீராத் துயரம் அனுபவிக்க நேர்ந்தது போலும்! நான் எவ்வாறு இவ்விதம் சந்தேகங் கொண்டேனென்று எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது!—ஆயினும் அந்த நிருபங்கள்!—அதில் ஏதோ தவறு நடந் திருக்க வேண்டும். சந்தேகமில்லை! முகத்தைப் பார்க் கும்பொழுதே தெரியாதோ?—விதியே! விதியே!—என் இவர்களின்னும் இங்கு வரவில்லை? வேறு எங்காவது சென்றார்களோ? அல்லது நாம் இடம் தவறி வந்து விட்டோமோ?-ஐயோ! அப்படியேதாவது நடந்து மனோஹரன் இறப்பானாயின்!—மனோஹரன் என் மைந்தனென்பதற்குச் சற்றேனும் சந்தேகமில்லை. அவனுருவமும் என்னுருவமும் ஒரே அச்சில் வார்த்தது போலிருக்கிறதென எல்லோரும் புகழ்வார்களே! அதை யும் நான் எப்படித்தான் மறந்தேனோ?—இது தான் குறித்த இடமென்பதற்குச் சந்தேகமில்லை. இருளில் எனக்கொன்றும் தெரியவில்லை; எப்படியும் நான் மனோஹரனுயிரைக் காப்பாற்ற வேண்டும்! ஐயோ! நான் மஹாராஜாவாயிருந்தும் நேரிற் சென்று இதைக் கூற மனவுறுதி இன்றி, இவ்வேடந் தரித்து, ஒற்றனைப் போல் என் மைந்தன் முன்னே நான் செல்லும்படி நேரிட்டதல்லவா? ஆம், ஆம்! மனோஹரன் முகத்தை நான் இவ்வளவு தூரம் எல்லாம் நடந்துவிட்ட பிறகு, எப்படி ஏற நோக்குவது?' அதோ வருகிறார்கள்! ஆவர் கள்தான்போல் தோற்றுகிறது—மனோஹரனும் சத்திய சீலனுந்தான்! சந்தேகமில்லை. நான் ஒளிந்திருந்து இவர்கள் என்ன பேசிக்கொள்ளுகிறார்களெனக் கண் டறிந்து பிறகு சமயத்தில் இவ்வோலையையும், கணை யாழியையுங் கொடுத்து மனோஹரன் மடியாவண்ணம் செய்யவேண்டும். இதோ வந்துவிட்டார்கள்!

[ஒரு புறமாக மறைந்து நிற்கிறார்.]

மனோஹரனும், சத்தியசீலரும் வருகிறார்கள்.

ம: சத்தியசீலரே, என் சிறு வயதில் தாம் இங்குத்தான் எனக்குக் குதிரையேற்றங் கற்பித்தீர், ஞாபகமிருக்கிறதா?

ச: ஞாபகமிருக்கிறது! நன்றாய் ஞாபகமிருக்கிறது!

[பெருமூச்சு விடுகிறார்.]

ம: சத்தியசீலரே! இன்னுமென்ன பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கிறீர்கள்? எடுத்துக்கொள்ளும் வாளை; நேரமாய் விட்டது!

ச: அரசே, வேறுவழியில்லையா இதற்கு? என் கையினாற்றான் கொல்லவேண்டுமோ உம்மை?

ம: என்ன மறுபடியும் பழையபடி ஆரம்பித்தீர்? வேறு வழியில்லை-அதற்காகத்தான் நான் மூர்ச்சையாயிருக்கும் பொழுதே கொன்றும்விடும்படி கட்டளையிட்டது, உமக்குச் சுலபமாயிருக்குமென்று: அது கூடாதென்று தாயார் தடுத்துவிட்டதாகக் கூறினீர். நான் தற்கொலையும் புரியலாகாதென்று அதையும் தடுத்துவிட்டார்கள்! பிறகு நான் என்ன செய்வது? இழி ஜனங்களின் கையால் நான் மாள்வதோ? ராஜப் பிரியனைத்தான் நான் கோபித்துக்கொண்டனுப்பிவிட்டேன்-நீர்தானிருக்கிறீர், முடியும் உமது வேலையை! நான் உமக்குத் தீங்கு செய்வேன் என்றஞ்ச வேண்டாம்; மனோஹரன் உயிருடனிருக்கும்பொழுது ஒருவனுக்கும் அஞ்சினதில்லை, இறப்பதிலும் ஒருவருக்கும் அஞ்சாதிறக்கப் போகிறான், பாரும்!

ச: அரசே! என்னுடைய கரத்தால் உமது சென்னியை நான் எவ்வாறு சேதிப்பது? எனக்கு மனம் எப்படி துணியும்? கைதான் எப்படி எழும்? அரசே! சிறு வயது முதல் எனக்குப் மகப் பேறில்லையே என்று உம்மை என் மைந்தன் போலப் பாராட்டி, சீராட்டி வளர்த்துவந்த நானோ உம்மைக் கொல்வது ஐயனே! மற்றெல்லோருமிருக்க பாவி என் கரம்தான் இம்மஹா பாதத்தைப் புரியவேண்டுமோ? இதற்கென்றோ நான் இப்புவியிலுதித்தேன்? [வருந்துகிறார்.]

ம: ஐயா! இவைகளையெல்லாம் குறித்து இப்பொழுது வருந்திக்கொண்டிருப்பதற்கு காலமில்லை. நேரமாய்

விட்டது! என் மனவுறுதியைக் கலைக்காதீர்! சீக்கிரம்!

ச : அரசே, என் வாளைக் கையிலெடுக்கவும் எனக்கிப் பொழுது சக்தியில்லை. ராஜகுமாரா! வேறு யுக்தி யில்லையோ இச் சங்கடத்தினின்றும் தப்புவதற்கு? நீர் தப்பி இந்நாட்டை விட்டுச் சென்று பிழைக்கலாகாதோ மாறுவேடம் பூண்டு? மஹாராஜாவின் கோபத்திற்கு வேண்டுமென்றால் நான் பாத்திரனாய் என்னுயிரைக் கொடுக்கிறேன். மஹாராஜா ஏதோ மதி மயங்கி யிருக்கிறார் என்பதற்குச் சிறிதும் சந்தேகமில்லை. சீக்கிரத்தில் தமது தவறைத் தாமே காண்பார். அப் பொழுது நீர் உயிருடன் இருப்பதைக் கேள்விப்படுவா ராயின், எப்படியும், மிகவும் சந்தோஷப்பட்டு உம்மை வரவழைத்துக்கொள்வார். நான் சொல்வதைக் கேளும்,

ம : சத்தியசீலரே! இதெல்லாம் வீண் வார்த்தை! அந்தப் பாதகி வசந்தசேனை உயிருடனிருக்குமளவும மஹா ராஜாவுக்குப் புத்தி திரும்பாது! நான்தான் அவள்மீது பழி வாங்க அசக்தனாயிருக்கிறேன்! இனி நான் உயிரோடிருப்பானேன்? என் தந்தைதான் நான் அவரது மகனல்லவென்று சபையறியக் கூறிவிட்டார்; இப்படி கூறிய தன் புருஷனே மேலெனக் கருதி என் தாயாரும் அவர் சொற்படி நான் இறக்கவேண்டியதுதானெனச் சற்றும் மனங் கூசாமல் கட்டளையிட்டுவிட்டார்கள்! பிறகு யார் பொருட்டு நான் உயிர் வாழ்வது? விஜயா இருக்கிறாள், நீர் இருக்கிறீர், ராஜப்பிரியனிருக்கிறான், —சத்தியசீலரே! இவைகளையெல்லாம் இப்பொழுது யோசித்துப் பயனென்ன! எடும் வாளை!

ச : ஈசனே! ஈசனே! இதுவும் உமது திருவிளையாட்டோ!

[அழுகிறார்.]

ம : என்ன ஐயா! அழுதுகொண்டிருக்கிறீர்கள்? எடும் வாளை! என்னைக் கொல்கிறீரா என்ன இப்பொழுது?

ச : அரசே, உமது கட்டளைப்படியே ஆகட்டும் ஆயினும் நீர் இறப்பதன்முன் எனக்கு ஒரு வரம் கொடுக்க மாட்டீரா?

ம : ஐயா! நல்ல சமயம் பார்த்தீர் என்னை வரம் கேட்க! இப்பொழுது தமக்குக் கொடுக்கும்படியாக என்னிடம் என்ன இருக்கிறது? என்னால் இந்த ஸ்திதியில் கொடுக்க

முடியுமானால் கொடுக்கிறேன் சீக்கிரம் கேளும், முடியு மானால் கொடுக்கிறேன், சீக்கிரம் கேளும், காலமாய் விட்டது. இறப்பதானால் நான் சீக்கிரம் இறக்க வேண்டும்!

ச: அரசே, நான் வாளை வீசியுமது சென்னியை வாங்கும் பொழுது நீரும் உமது வாளை வீசி எனது கந்தரத்தை யும் வெட்டுவதாக வரமளியும்!

ம: என்ன! நான்தான் இறக்கவேண்டும், என் விதி! உமக் கென்ன? நானாவது உம்மைக் கொல்வதாவது ஒரு காலும் மாட்டேன்.

ச: அரசே, தாம் எனக்கு வராளித்தபின் பின்வாங்குவது நியாயமன்று. நீர் இறந்தபின் உம்மைக் கொன்ற கொடும் பாவியாகிய நானோ உயிர் வாழ்ந்திருப்பேன்? அப்படியிறப்பவன், தம்முடைய சரத்தால் இறப்பேனா யின் ஜன்மம் புனிதமாகும். அவ்வளவே நான் வேண்டிக் கொள்வது அரசே! உமக்காக நான் சிறு வயதுமுதல் பாடு பட்டதற்காக தாம் இவ்வளவு செய்யலாகாதா?

ம: [கட்டியணைத்து] சத்தியசீலரே! மெச்சினேன் உமது பேரன்பை! உம்மைக் கொல்ல எனக்குச் சிறிதும் மன மில்லை ஆயினும் நீர் வேண்டுவதை மறுக்கலாகா தென உடன் பட்டேன். எடும் வாளை!

ச: அரசே, நாமிருவரும் நமது கோரிக்கையைக் கூறியிறப் போம் உமது நிச்சயமென்ன?

ம: [வாளைவீசி] என்னைப்பெற்ற தாய் தந்தையரன்றி எனக்குப் பிறிதொரு தெய்வமில்லை! சுத்த வீரமே என்றும் நிலைத்திருக்குமாக!

ச: [வாளைவீசி] பிறருடைய நன்மைக்காக வாழ்வதே மாந்தர் கடமை! சத்தியமே என்றும் நிலைபெற்றி ருக்குமாக!

[இருவரும் வாளை ஓங்குகிறார்கள்.]

மறைந்திருந்த புருஷோத்தமராஜன் வேகமாய் வெளியே வருகிறார்

ம : [இருவருக்கும் இடையில் நின்று] பொறும்! பொறும்!

இருவரும். யார் அது ?

பு : நான் ராஜாவினால் அனுப்பப்பட்டசேவகன். அவர் முன்பு இட்ட கட்டளையை மீட்டுக்கொண்டதாகக் கூறி, இளவரசர் இறவாதிருக்கும்படி தடுத்து, இவ் வோலையையும், தன் அடையாளமாக இக்கணையாழி யையும் கொடுக்கச் சொன்னார்.

ச : அரசே! இது மஹாராஜாவின் முத்திரை மோதிரந்தான், சந்தேகமில்லை. இவ்வோலையிலென்ன எழுதியிருக் கிறது பார்ப்போம்; இருளில் ஒன்றும் தெரியவில்லையே! அரசே! எப்படியாவது தெய்வாதீனத்தால் நீர் உயிர் பிழைத்தீரே!

ராஜப்பிரியன் வருகிறான்.

ரா : யார் அங்கே ?

ம : யார் அங்கே? ஒரு பந்தத்தையெடுத்துக்கொண்டு வரு கிறானே? ராஜப்பிரியனா ?

ரா : அரசே, உம்மை உயிருடன் காணப்பெற்றேனே!—இது என்ன சத்தியசீலரே ?

[புருஷோத்தம ராஜன் ஒரு பக்கமாக மறைந்து விடுகிறார்.]

ச : ராஜப்பிரியரே! கொடும் அப்பந்தத்தை இப்படி! அப் புறம் எல்லாம் சொல்லுகிறேன். [படிக்கிறார்] "மந்திரி சத்தியசீலருக்கு, முன்பு யாம் உமக்கிட்ட கட்டளையை மீட்டுக்கொண்டோம். மனோஹரனைத் தாம் கொல்லவேண்டியதில்லை. புருஷோத்தம சோழன்."—அரசே, சிரஞ்சீவியாக வாழ்வீராக!

ரா : ஆம்! ஆம்! [குதிக்கிறான்.]

ம : ராஜப்பிரியா, உனக்கென்ன பயித்தியம் பிடித்து விட்டதா என்ன? என்ன குதிக்கிறாய்? பந்தத்தை அவித்து விட்டனையே!

ரா : இனி அதற்கு வேலையில்லை உமதுடலிருக்குமிடத்தைக் கண்டு நானும் உயிர் விடலாமென்று தேடிக் கொண்டு வந்த பந்தம் நீர் உயிர் பெற்றதைக் கண்டபின் எதற்குபயோகம் ?

ச : எங்கே இதைக் கொண்டுவந்த சேவகன்?—எங்கும் காணோம், எங்கேயோ போய்விட்டான்!

ம : ராஜப்பிரியா, மஹாராஜா ஏன் இவ்வாறு தன் கட்டளையை மீட்டுக்கொண்டாரென்று எனக்கு வருத்தமாகவேயிருக்கிறது! நான் இறப்பதே நலம்! நானினி உயிர் வாழ்வானேன் ?

ரா : இதென்ன அரசே மறுபடியும் ?

ம : நான் ஒருகாலும் இப்பட்டணத்துட் பிரவேசியேன் இப்பொழுது.

ரா : வேண்டாம்; வாரும், நாம் மூவரும் இப்படியே புறப்பட்டு மாறுவேடம் பூண்டு தேசசஞ்சாரம் செய்வோம் சில காலம், என்ன சொல்லுகிறீர்களிதற்கு ?

ச : ஆம், அரசே; இதுவே நல்ல யோசனை.

ம : ஆம்! இந்த நொடியே புறப்படுவோம், நாம் தாமதிக்கலாகாது ஆயினும் ராஜப்பிரியா, நீ உடனே ஒருவருமறியாதபடி, அரண்மனைக்குட் சென்று விஜயாவிடம் நான் உயிரோடிருப்பதைக் கூறி, என் தாயார் நான் இறந்தேனெனக் கருதித் தான் இறவாதிருக்கும்படியும், அதிகமாக துக்கப்படாமலிருக்கும்படியும், தேறுதல் ஜாடையாகச் சொல்லும்படி உரை. நாங்கள் உறையூருக்குப் போகும் வழியில் இருக்கிறோம். நீயும் விரைவில் இக்காரியத்தை முடித்துக் கொண்டு அங்கு வந்து சேர், போ.

[ராஜப்பிரியன் போகிறான்.]

வாரும் சத்தியசீலரே.

[இருவரும் போகிறார்கள்.]

பு : [மறுபடியும் வெளி வந்து] கடைசியில் இவர்கள் பேசிக்கொண்ட திவதென்று செவியிற் படவில்லை

ஆயினும் மனோஹரன் பிழைத்தானே, அதுவே போதும்! சீ! நான் என்னதப்பிதம் செய்யவிருந்தேன்! ஏதாவது கொஞ்சம் மிகுதியாயிருந்த சந்தேகமும் இவர்கள் பேசியதைக் கேட்டபின் போய் விட்டது! சந்தேகமில்லை. அந்த நிருபங்களில் ஏதோ தவறிருக்க வேண்டும்! எப்படியும் அந்தச் சந்தேகத்தையும் தீர்த்துக் கொள்ள வேண்டும். யாரைக் கேட்பது? பத்மாவதியைக் கேட்கவா நேரிற் சென்று? ஐயோ! இந்தப் பதினாறு வருடங்களாக என்னைப் பாரா திருந்தவள், அவள் கேட்கும்படி நான் அவளது கற்பைக் குறித்து சந்தேகித்த பின், என்னைப் பார்க்கப் போகிறாளோ? சீ! இந்த வருடங்களெல்லாம் எனக்குப் பயித்தியம்பிடித்தே இருந்ததென்பதற்குச் சற்றும் சந்தேகமில்லை. இல்லாவிடின் இந்த அன்னத்தைவிட்டு அந்தக்காக்கையைப்பற்றி வாழ்ந்திருப்பேனா? பத்மாவதியின் அழகெங்கே, வசந்தசேனையின் அழகெங்கே! இன்றைத்தினம் என் கண்ணால் பத்மாவதியின் வதனத்தை நோக்கிய பிறகன்றோ இவ்வுண்மை எனக்கு வெளியாகியது! ஐயோ! என் துரதிஷ்டமே துரதிஷ்டம்! கெடுமதி கண்ணுக்குத் தோன்றாது! இனி நான் என்ன செய்வது? எப்படியும் பத்மாவதியிடம் சென்று நான் இதுவரையில் செய்ததெல்லாம் தவறென ஏற்றுக் கொள்ளவேண்டும், அவளோ சிறந்த புத்திசாலி, இந்த நிருபங்களினுண்மையையும் தெரிவிப்பாள்; என்னுயிரைக் காத்துத் தன் மைந்தன் உயிரைப் போக்கப் பார்த்தவள் என்னைப் பராமுகஞ் செய்யாள்! அப்பா! இப்பொழுதன்றோ இதுவரையில் என் கண்களை மூடியிருந்த மாயை நீங்குகிறது! இப்பதினாறு வருடங்களாக என்ன வாழ்வு வாழ்ந்தேன்! என்ன வாழ்வு வாழ்ந்தேன்! இதைப்பற்றியோசியாதிருத்தலே நலம்!—பத்மாவதி! நீயே என்னை மன்னிக்க வேண்டும்!

]போகிறார்.]

காட்சி முடிகிறது.



## ஆறும் காட்சி

இடம்—பதமாவதியின் அறை. காலம்.—இரவு.

பத்மாவதியும், விஜயாவும் வருகிறார்கள்.

வி : மாமி, நான் சொல்வதை நம்புங்கள். என் பிராண நாதர் உயிரோடுதானிருக்கிறார்; இறக்கவில்லை. தாம் ஒன்றும் அவசரப்பட்டுச் செய்துவிடலாகாது. அக்கினிப் பிரவேசமாவதற்குச் சித்தஞ் செய்து வைத்திருந்த தீயை அவித்து விடும்படி கட்டளையிட்டுவிட்டு வந்தேன். தாம் இனி ஒன்றுக்கும் வருத்தப்பட வேண்டாம்.

ப : விஜயா, நீ சொல்வதொன்றும் எனக்கு நன்றாக விளங்க வில்லை. மனோஹரன் இறக்கவில்லையென்று உனக்கெப்படி உறுதியாய்த் தெரியும் ?

வி : மாமி, எல்லாம் எனக்கு நன்றாய்த் தெரியும். என்னிடந் தானிப்பொழுது இறப்பதில்லையென்று வாக்களித்தாரே, இதினின்றும் தவறுவாரோ ?

ப : இதைக்கொண்டோ இறக்கவில்லையென்று கூறி விட்டாய் ?

வி : இல்லை மாமி, உட்காருங்கள். இறந்திருந்தால் அவருடைய உடலெங்கே? நீங்கள்தான் கொத்தளங்களிற் போய்ப் பார்த்தீரே, அகப்பட்டதா ?

ப : ஆம், ஆம்—சத்தியசீலரைக் கேட்கலாமோவென்றால் அவரையுங் காணோம்.

வி : ராஜப்பிரியரையுங் காணோம் —மாமி, இவர்கள் மூவரும் எங்கேயோ போய்விட்டார்கள், நீர் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம்.

ப : மனோஹரன் இவ்வளவு காரியமெல்லாம் நடந்த பிறகு எப்படி உயிர்பிழைத் திருப்பான்? ஆயினும் இம் மூவர்களையும் காணாதிருப்பது சந்தேகத்திற்கு இடங் கொடுக்கிறது (தனக்குள்) விஜயாவைக் கேட்பதில் பிரயோஜனமில்லை. அவளுக்கு ஒன்றும் தெரியாது,

நீலவேணி வருகிறாள்.

நீ : அம்மா, மஹாராஜா வாயிலில் வந்திருக்கிறார்! தம்மைப் பார்ப்பதற்காக உள்ளே வரலாமாவென்று கேட்டுக் கொண்டு வரச் சொன்னார்!

ப : யார்? மஹாராஜாவா!

நீ : ஆம், அம்மா, உண்மையாகத்தான். அம்மணி, இனி நீங்களும் அவரும் ஒருமித்த மனமுடையவராய்ச் சுகமாய் வாழ்வீர்களாக! ஏதோ மஹாராஜாவினுடைய மனம் திரும்பியிருக்கிறதென்பதற்குத் தடையில்லை.

ப : மஹாராஜா என்னை இங்குப் பார்ப்பதாவது!

நீ : ஆம், அம்மணி, நான் அவரை உள்ளே வரச்சொல்லவா?

ப : வேண்டாம்! இப்பதினாறு வருடங்களாக என்னைப் பாராதவர் இவ்வளவு தூரம் நடந்த பின்பு இனிமேல் பார்க்கப்போகிறாரோ? வேசியாகிய என்னை அவர் பார்க்கவேண்டிய நிமித்தமில்லை. ஒருவேளை வழிதவறி வந்திருப்பார். அவளுடைய மாளிகை தென் பாகத்தி லுள்ளதென அதற்கு வழி காட்டு, போ!

நீ : அம்மா, இதென்ன? அவராக வேண்டி வரும்பொழுது தாமிப்படி பிடிவாதம் செய்யலாமா ?

ப : நீலவேணி! நான் சொன்னபடி சொல், போ!

(நீலவேணி போகிறாள்).

இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது! மஹாராஜா இங்கு வருவானேன்? இதிலெல்லாம் ஏதோ இருக்கிறது.— மனோஹரன் உயிருடன் இருக்கிறானென எனக்குள் ஏதோ சொல்லுகிறது; அவ்வண்ணம் தப்பியிருந்தால் நம்மிடம் வந்து சொல்லாமல் எங்கேயாவது போயிருப் பானோ ?

நீலவேணி மறுபடியும் வருகிறாள்.

நீ : அம்மா, நான் என்ன சொல்லியும் போகமாட்டேனென் கிறார். எப்படியாவது தம்மைக் காணவேண்டுமென் கிறார். வரச் சொல்லவா? அம்மா, அவர் அவ்வளவு வேண்டிக் கேட்கும்பொழுது தாம் பாராதிருத்தல் தர்மமோ ?

ப: நீலவேணி! எனக்கு தர்மம் கூறவேண்டியதில்லை. என்னையும் என் மைந்தனையும் இக்கோலங் கண்டவர் என்னைப் பார்க்கவேண்டிய அவசியமில்லை; உலகம் நகைக்கும்! போ நீ! என்முன் நில்லாதே.

(நீலவேணி போகிறாள்.)

வி: மாமி, மாமாவாக வந்து இவ்வளவு கேட்கும்பொழுது தாம் பார்க்கிறதுதானே? இதிலென்ன தவறு? என் பிராண நாதர்தான் பிழைத்துவிட்டாரே!

ப: எப்படித் தெரியுமுனக்கு நிச்சயமாக? விஜயா, நீ சற்றுப் பேசாமலிரு.

மறுபடியும் நீலவேணி வருகிறாள்.

நீலவேணி! என்ன மறுபடியும் வந்தாய்?

நீ: அம்மா, நான் என்ன செய்வது? அதர் உம்மை நேரிற் பார்த்தாலொழிய போகேனென்கிறார். ஐயோ! பாவம்! மஹாராஜாவே வந்து உமது வாயிலில் நின்று கண்களில் நீர் ததும்ப என்ன வேண்டியும் உள்ளே வரலாகாது என்று என்ன கடின சித்தமாய்க் கூறுகிறீர்களம்மா? எனக்கே பரிதாபமாயிருக்கிறதே!

ப: உனக்கிருக்கலாம், எனக்கில்லை! அப்படி ஏதாவது முக்கியமான விஷயமிருந்தால் உன்னிடம் சொல்லியனுப்பும்படி சொல் நேற்றைத்தினம் ராஜசபையில் என் காதால் அவரது மொழிகளைக் கேட்டபின்னும் நான் அவரைப் பார்ப்பதா? அந்தக் காலம் போய்விட்டது. நான் இறந்தபின் உறுதியாக என்னைக் காணலாமென சொல், போ—போ!

நீ: அப்படியாவது சொல்லிப்பார்க்கிறேன்.

[போகிறாள்.]

வி: என்ன மாமி? ஒரு வேளை பிராணநாதர் சமாசாரம் தான் ஏதாவது சொல்ல வந்திருக்கிறாரோ என்னவோ? உள்ளே வரவழைத்துக் கேட்கிறதுதானே? தம்முடைய புருஷனைத் தாம் பார்ப்பதில் என்ன தவறிருக்கிறது?

ப: விஜயா நீ ஒன்றும் அறியாதவள்; இவ்விஷயங்களிலெல்லாம் தலை நுழைத்துக்கொள்ளாதே—

மறுபடியும் நீலவேணி வருகிறாள்.

நீ : அம்மா! தாம் கூறியதைச் சொன்னேன். அவர் உடனே இருந்தவிடத்திலேயே உட்கார்ந்துகொண்டு உன் தலைவியினிடம்போய் என்னைப் பாராவிட்டால் இன்று இப்படியே இந்த இடத்தை விட்டுப் பெயராது உயிரை விடச் சித்தமாயிருக்கிறேனென்று சொல்லி வா என்றார்.

ப : இதென்ன சங்கடமாயிருக்கிறது? நீலவேணி இத் திரையைத் தள்ளிவிடு இதற்கப்புறமிருந்து என்னுடன் பேசுவதானால் வரச்சொல், போ.

[நீலவேணி போகிறாள்.]

என்ன ஆச்சரியம்! ஏது மஹாராஜா இப்படி கூறும்படி நேரிட்டது? என்பொருட்டு அவ்வளவு மன உருக்கம் வந்து விட்டதோ? என்ன, என்னுடன் பேச வந்திருக்கிறார்? ஏதோ அவருடைய மனம் திரும்பியிருக்கிறதென்பதற்குச் சந்தேகமில்லை—ஆயினும் இனி திரும்பி என்ன, திரும்பாமல் என்ன!

புருஷோத்தமராஜன் திரைக்கு ஒரு புறமாக வந்து நிற்கிறார்.

பு : ஆம்! ஆம்! மஹா பாதகனாகிய நான் உன்னைக் கண்ணெடுத்தும் பார்க்கத் தக்கவனல்லன்! பத்மாவதி—பெயரிட்டாவது உன்னை நான் அழைக்கலாகாதோ?

ப : விஜயா, எதற்காக வந்திருக்கிறார் என்று கேள்?

வி : மாமா—

ப : ஸ்! மஹாராஜா என்று அழை. அவர்தான் உனது மாமனார் அல்லவென்று சபையறியச் சொல்லி விட்டாரே!

வி : மஹாராஜா—தாங்கள் எதற்காக வந்தீர்களென்று கேட்கச் சொல்லுகிறார்கள்?

பு : வேண்டும்! வேண்டும்! எனக்கு இந்தத் தண்டனையும் வேண்டும்! அதிகமும் வேண்டும்! நான் செய்த தப்பிதத்திற்கெல்லாம் இதுவும் போதாது! ஆயினும்-பத்மாவதி! என்னை நேரில் பாராவிட்டாலும் ஒரு வார்த்தையுங்

கூறலாகாதா? நான் அவ்வளவு இழிந்தவனாய்விட் டேனோ?

ப: இதெல்லாம் இப்பொழுதென்னத்திற்கு? வந்த சேதியைச் சொல்லும்படி கேள்—விஜயா

பு: பத்மாவதி நீ அக்கினிப் பிரவேசமாகச் சித்தஞ் செய்து கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டு அதைத் தடுக்க வந்தேன்.

ப: ஏது? மஹாராஜாவுக்கு-வேசையாகிய—என்மீது இந்தப் பதினாறு வருஷங்களாக இல்லாதபட்சம் இப்போது வந்தது? கேள் விஜயா.

பு: ஐயோ! பத்மாவதி! இன்னொரு முறை இதைக் கூறுவை யாயின், அதை நேற்றைத்தினம் கூறியதற்காக என் நாவை உன் முன்னிலையிலேயே அறுத்தெறிவேன்! ஐயோ! நானிதற்காக இதுவரையிற் பட்டதுயரமெல் லாம் போதாதோ? நீயும் என்னை வருத்தவேண்டுமோ? பத்மாவதி! பத்மாவதி! இந்தப் பதினாறு வருடங்களும் உனக்குத் துரோகியாக இருந்த நான் செய்ததெல்லாம் தவறு! தவறு! ஒப்புக் கொண்டேன்! உத்தம பத்தினி யாகிய உன்னைத் தூற்றியதெல்லாம் தப்பிதம்! தப்பிதம்! பெற்ற மகனென்றும் பாராமல் அவனைக் கொல்லும்படி கட்டளையிட்ட பாதகனாகிய என்னை, கணவனாயிற்றேயென்று காப்பாற்றி, என்பொருட்டு மகனையும் இறக்கும்படி கட்டளையிட்ட, உத்தம கற்பிற்கரசியாகிய, உன் மீது சந்தேகங்கொண்டு தூற்றிய இப் பாதகனுக்கு உன்னை மன்னிப்புக்கேட்க வும் வாயெழவில்லையே! உத்தமியே! இப்பதினாறு வருடங்களாக எனக்குப் பித்தம் பிடித்திருந்தது! நான் இதுவரையிற் கூறியதும் செய்ததும் எல்லாம், என்னைப் பற்றியிருந்த பேயின் செயலென நினைப்பாய்! நீயே எனது உத்தம கற்புடைய பத்தினி, மனோஹரனே எனது மைந்தன்! சந்தேகமில்லை! சந்தேகமில்லை! பெண்ணரசியே! இப்பாதகன் உனது மகிமையை யறியாது செய்ததெல்லாம் தவறென ஏற்றுக்கொள்ளு கிறான்! நான் உனது கரத்தைப் பற்றிய கணவனா யிற்றே என்றாயினும் சற்றிரங்கி, என்னை மன்னித்த தாக ஒரு வார்த்தை யாயினும் எனக்கு நேராகக் கூற லாகாதா? மங்கையர்க்கரசியே! இன்னும் நான் என்ன

சொல்வது? நான் உனது புருஷனாதல்பற்றி, உனது சீர் தங்கிய பாதங்களில் வீழ்ந்து வேண்டாத குறை யொன்று தான்—அதுவும் செய்யவேண்டுமென்றால் செய்கிறேன்.

ப : விஜயா, மஹாராஜா இக் காரியம் செய்தல் தவறெனச் சொல்லித் தடுத்துவிட்டு வா.

வி : மாமா, அப்படி செய்யலாகாதென்று மாமி தடுக்கச் சொன்னார்கள்.

பு : விஜயா, உன் புருஷனை நான் தூற்றியதெல்லாம் நீயும் மன்னிப்பாய்!

வி : சரிதான், மாமா.

பு : நீ கூறியபடி உனது மாமியும் என் மனங்குளிர அப்படியே கூறலாகாதா ?

ப : ஒரு அற்ப வேசியினுடைய மன்னிப்பு அவருக்கென்னத் திற்கு ?

பு : பத்மாவதி, நான் இதுவரையில் என் துக்கத்தைப் பொறுத்துப் பார்த்தேன். இனி என்னால் பொறுக்க முடியாது! மறுபடியும் அதையே கூறிக்கொண்டிருக் கின்றனையே! நான் பட்டதெல்லாம் போதாதோ? நான் செய்ததெல்லாம் தவறு மன்னிப்பாய் என்று உன்பாதத்தில் வீழ்ந்து வேண்டாத குறையாக வேண்டி யும், உனது கடினசித்தம் இளகவில்லையல்லவா ? இன்னும் நான் வேறென்ன செய்யக்கூடும்? இனி பயனில்லை. நான் இனிமேல் இவ்வுலகில் உயிர்வாழ்ந் திருப்பது நலமன்று. பத்மாவதி, இதோ, கடைசி வார்த்தை சொல்லுகிறேன், நான் செய்த குற்றங்களை யெல்லாம் நீ மன்னித்ததாக இப்பொழுது கூறாவிட் டால் இதோ உன் முன்பாகவே எனதுயிரை இவ்வுடை வாளுக்கு இரையாக்குகிறேன். என்ன சொல்லுகிறாய்? —இனி நான் தாமதியேன்—பத்மாவதி! இதோ நீயே என்னைக் கொல்கிறாய்!

ப : பிராணநாதா!—மஹாராஜா! வேண்டாம்! வேண்டாம் பொறும்! நான் உம்மை மன்னித்தேன்! மன்னித்தேன்!

பு : நீ என்னை மன்னித்தபின் நான் இப்புவியில் பெறத்தக்க பேறென்ன இருக்கிறது? ஐயோ! இப்பதினாறு வருஷம்

களாக உனது மகிமையையும் குணத்தையும், பேரழகை யும் அறியாது, நாயினும் கடையாயன்றோ உழன்று வந்தேன். நேற்றைத்தினமே அவைகளைக் கண்டேன்,

ப: விஜயா, உன் மாமனாரிடம் சென்று அந்த வாளை வாங்கிக் கொண்டுவா இப்படி.

பு: ஓஹோ! பத்மாவதி, இனியொன்றிற்கும் அஞ்சவேண் டாம். விஜயா, வேண்டுமென்றால் எடுத்துக்கொண்டு போ, இதோ.

ப: மஹாராஜா, நான் விடை பெற்றுக் கொள்ளுகிறேன். நீர் இனி சுகமாய்—அவளை மணந்து நெடுநாள் வாழ் வீராக!

பு: பத்மாவதி! என்ன சொல்லினை? வசந்தசேனையை மணந்து நான் சுகமாய் வாழ்ந்திருப்பதா? அதை விடப் பாழ் நரகத்தில் வீழ்ந்து எரிந்துபோகும்படி கூறுயிருக்க லாகாதா? என் மனத்தைப் பரிசோதிக்கின்றனையோ? கண்ணே, இனியும் இவ்வளவு துன்பத்திற்கும் காரண மாயிருந்த அந்தப் பாதகியைக் கண்ணெடுத்துப் பார்ப்பேன் என்று நம்புகின்றனையோ? இதுவே சத்யம்! இனி அந்தப் ப தகியை மனத்தில் நினைப்பேனாயினும், உத்தம பத்தினிகளுக்குத் துரோகம் செய்யும் பாதகர்கள் செல்லும் அழியா நரகத்தில் அமிழ்வேனாக! உன்னை யன்றி வேறொரு ஸ்திரீயை நான் கனவில் நினைப்பி னும், என்னரசு முழுமையும் அழிந்து, அந்த நொடியே இறந்து, மறு ஜன்மத்தில் அலியாய்ப் பிறந்து, உலகிலெ வரும் நகைக்க உழல்வேனாக! இதிருக்கட்டும்— பத்மாவதி, விடை பெற்றுக்கொள்கிறேனென்றனையே, அது என்ன சமாசாரம்?

ப: நான் இவ்வுலகிற் பிறந்த வேலை நிறைவேறிவிட்டது; ஆகவே நான்—

பு: ஓஹோ! பத்மாவதி, நீ இறப்பானேனிப்பொழுது? அக்னிப் பிரவேசமாகச் சித்தம் செய்திருப்பதாகக் கூறினார்கள், அதைத் தடுக்கவன்றோ நான் வந்தேன்? இனி நீ இறப்பானேன்? எல்லாம் சரியாய்விட்டதே!

ப: மனோஹரன்—இறந்தபின் நான் உயிர்வாழவேண்டிய நியாயமில்லை.

பு: கண்ணே, அதைக் கூறவே நானும் சற்று முன்பாக வாயெடுத்தேன். மனோஹரன் இறக்கவில்லை! சத்திய சீலருக்கு நான் முன்பிட்ட கட்டளையை மீட்டுக் கொண்டு மனோஹரனைக் கொல்லாதிருக்கும்படி கட்டளையிட்டேன். மனோஹரனிறக்கவில்லை.

ப: இது உண்மைதானா?

பு: என் சொல்லை உறுதியாய் நம்பு. இன்னும் உண்மையைக் கூறுகிறேன். நானே மாறு வேடம் பூண்டு அவ்வுத்தரவையும் எனது கணையாழியையும் எடுத்துச் சென்று, மனோஹரனும் சத்தியசீலரும் ஒருவரையொருவர் கொல்லப்போகும் சமயத்தில் தடுத்து, அவ்வுத்தரவையும் அறிகுறியாகக் கணையாழியையுங் கொடுத்தேன். பிறகு நான் மறைந்திருந்து, என்ன நடக்கிறதெனப் பார்த்திருக்க, ராஜப்பிரியனும் அங்கு வந்தான். பிறகு மூவருமாக இந் நாட்டைவிட்டு எங்கேயோசெல்லத் தீர்மானித்துப் புறப்பட்டு விட்டார்கள். இதில் தினையளவும் பொய்யில்லை. என் சொல்லை உறுதியாய் நம்பு.

வி: மாமி, நான் அப்பொழுதே சொன்னேனே! பார்த்தீர்களா! என்னிடம் இப்பொழுது இறப்பதில்லையென்று சொல்லி விட்டுத் தவறுவாரா பிராணநாதர்?

பு: பத்மாவதி, இனியாவது உன்னை நான் நேரிற்காணலாகாதா?

ப: மஹாராஜா, என்னைத் தாம் பலவந்தப்படுத்தலாகாது நான் ஒரே வார்த்தை சொல்லுகிறேன். உம்மை நான் மன்னித்தது உண்மையாயினும், மனோஹரனை என் கண் முன்பாக நான் பார்க்குமளவும், உம்மை நான் நேரிற்காணேன், அவனையழைத்துவந்து என் முன்பாக விடும்; அப்பொழுது உம்மைப் பார்க்கிறேன், இது சத்தியம்!

பு: சரி! அப்படியே, உன்னிஷ்டப்படி! நான் என் மைந்தனுக்குச் செய்த குற்றத்திற்காக இவ்வளவு தண்டனை பொறுக்க வேண்டியதே! என்னாலல்லவோ அவன் இந்த நாட்டை விட்டுச் சொல்லும்படி நேரிட்டது? ஆகவே என் கடமையே அவனைத் தேடி இங்கு அழைத்து வர

வேண்டியது. பத்மாவதி, கடைசியில் நான் உன்னை ஒரு கேள்வி கேட்கலாமோ? என்மீது கோபங் கொள்ள லாகாது.

ப: கேளும்.

பு: சில தினங்களுக்கு முன் சத்தியசீலருக்கு நீ ஒரு நிருபம் எழுதியது உண்மைதானா ?

ப: ஆம்.

பு: என்ன எழுதினை ?

ப: மனோஹரனை வசந்தசேனை தூற்றிய பொழுது அவரும் அருகிலிருந்து கேட்டுக்கொண்டிருந்தன ராதலின், நீர் இந்த அநியாயத்தைப் பார்த்துக்கொண் டிருக்கலாமா? அப்படிப் பொறுத்துக்கொண்டிருந்த தற்குக் காரணத்தை உடனே அறிய விரும்புகிறேன், என்று கேட்டிருந்தேன்.

பு: என்ன!—எனக்கு நீ ஒரு நிருபம் எழுதியதுண்மைதானா?

ப: ஆம், அன்றைத்தினமே உமக்கும் ஒன்று எழுதினேன்.

பு: அதில் என்ன எழுதினை ?

ப: ஏன்? அதில் என்ன தவறிருந்தது?—பிராணநாதர் என்று உம்மை அதில் நான் அழைத்தது தவறென்கிறீர் களோ? இப்பதினாறு வருடங்களாகப் பார்க்கமாட்டே னென்றவள், பிராணநாதா என்று நம்மை எவ்வண்ணம் அழைக்கிறாளென உமக்கு ஆச்சரியமாருந்ததோ? எது எப்படியிருந்தபோதிலும் ஏன் தங்களைப் பிராணநாதா என்று அழைக்கலாகாது என்று அதிலேயே கேட்டிருந் தேனே, மறந்தீரோ ?

பு: ஓஹோ!—பத்மாவதி, இன்னும் என்ன எழுதினை, நன்றாய் ஞாபகப்படுத்திச் சொல்.

ப: அதையேன் கேட்கிறீர் ?

பு: சொல், சொல்கிறேன்,

ப: அப்பொழுது தாமே இவ்வாறு சந்தேகங்கொண்டிருந்தீரென்று தெரியாது. ஆகவே தம்முடைய மகனை ஒருத்தி வேசி மகனெனக் கூறியபொழுது, தாம் சும்மா கேட்டுக் கொண்டிருந்தது நியாயமாவென்றும், இது தமக்கும் இழிவன்றோவென்றும் கேட்டிருந்தேன்.

பு: எனக்கெழுதிய நிருபத்திலா ?

ப: ஆம்! சந்தேகமென்ன? வேறு யாருக்கு நான் இப்படி எழுதுவது?— மஹாராஜா! என்ன சமாசாரம் ?

பு: சந்தேகமில்லை! சந்தேகமில்லை! அந்நிருபங்கள் மாறுபட்டிருக்கவேண்டும். பத்மாவதி! பத்மாவதி! இன்று என் மனத்திலிருந்து ஒரு பெரும் பாரத்தைப்போக்கினை இப்பொழுதெல்லாம் தெளிவாய்விட்டது —அப்பா! இனிமேல் நான் மனச் சஞ்சலமின்றி உறங்குவேன்.— கண்ணே! கண்ணே! உன்மீது வீணில் என்ன சந்தேகங் கொண்டேன்!

ப: மஹாராஜா! என்ன சமாசாரம் ?

பு: கண்ணே, நீ எனக்கும் சத்தியசீலருக்கும் எழுதிய நிருபங்கள் மாறுபட்டிருக்கவேண்டும். அதைக்கொண்டே உன் மீது நான் சந்தேகங் கொண்டேன். இத்தீமைகளும் நேர்ந்தன. நான் உடனே சென்று நீலவேணியை விசாரித்து, இன்னும் இதனுண்மையை அறிந்துவிடுகிறேன். அவளே அந் நிருபங்களையென்னிடம் கொடுத்தாள்; நான் இதோ வந்துவிட்டேன். என்னை மன்னிப்பாய்! (விரைந்து போகிறார்.)

ப: ஒஹோ! —அப்படியா சமாசாரம்?-இப்பொழுதெல்லாம் தெரிகிறது! இல்லாவிட்டால் என்ன காரணம்பற்றி மஹாராஜா நம்மீது இவ்வண்ணம் சந்தேகிக்கும்படி நேரிட்டதென யோசித்தேன், இப்பொழுது தெரிகிறது! ஐயோ! பாவம்! என்ன வருந்தியிருக்கவேண்டுமவர் இதையுண்மையென நம்பி! ஆயினும் அந்நிருபங்கள் என்னவாக மாறியிருக்கக் கூடும்? நீலவேணி மாற்றியிருக்கமாட்டாளே; நாமே ஒரு வேளை மாற்றிக் கொடுத்து விட்டோமோ? எல்லாம் சீக்கிரம் வெளியாய் விடுகிறது; அப்படட்டும் மனோஹரன் பிழைத்திருப்பதாக அறிந்தோமே, அதுவே போதும் —விஜயா, நீ கூறிய துண்மைதான், வா போவோம். (போகிறார்கள்.)

காட்சி முடிகிறது.

# நான்காவது அங்கம்



## முதல் காட்சி

இடம்—பள்ளியறை. காலம்—இரவு.

நீலவேணி வருகிறாள்.

நீ: வேண்டும் இவளுக்கு இந்தக் கதி! இன்னும் மற்ற சமாசாரங்களையும் சொல்லி எரிகிற கொள்ளியை ஏறத் தள்ளி விடுகிறேன். என்னைப்போன்ற தாதியாயிருந்தவளுக்கு இந்த வாழ்வு வந்தால் எத்தனை நாளைக்கு நிற்கும்? வாழ்வு வந்தாற்றானென்ன? தன் பழைய நிலைமையையும் பழைய சினேகிதர்களையும் மறக்கும் படியாகவா சொல்லிற்று? தன் பழைய ஞாபகங்களையெல்லாம் மறந்துவிட்டு என்னைத் தன் பணிவிடைப் பெண்ணைப்போலவன்றோ உபயோகித்து வந்தாள்? ஆகட்டும்! ஆகட்டும்!—அதுவுமன்றி உத்தமியாகிய பத்மாவதிக்கும் மனோஹரருக்கும் என்னென்ன தீங்கிழைத்தாள்! அவைகளெல்லாம் இப்பொழுது இவள் மீதே திரும்பிக்கொள்ளுகின்றன! வேண்டும்! வேண்டும்! வசந்தசேனை! சற்றுப் பொறு. சீக்கிரத்தில் பழைய நிலைமைக்கு என்னைப் போல் வந்துவிடுவாய்! பயப்படாதே! உன்னை நான் எப்பொழுதும் சின்ன ராணியென்றல்லவோ அழைக்கவேண்டுமென்று கட்டளையிட்டாய்? இன்னும் அந்த அந்தஸ்து உனக்கு எத்தனை நாள் நிற்கிறதோ பார்ப்போம்! மஹாராஜாவுக்கு உன்னுடைய சூதெல்லாம் ஏறக்குறைய முழுவதும் வெளியாய் விட்டது. இன்னும் மற்றதையும் நான் சொல்லி விடுகிறேன், அஞ்சவேண்டாம்.

வசந்தசேனை விரைந்து வருகிறாள்.

வஸ: [படுக்கையின் மீது சாய்ந்து] நீலவேணி! நீலவேணி! நீ கூறியதெல்லாம் உண்மைதான்; மனோஹரன் கொல்லப் பட்டிருக்க மாட்டான் என்பதற்குத் தடையில்லை. சத்தியசீலனையும் ராஜப்பிரியனையுங்காணோம். இம் மூவருமாகச் சேர்ந்து எங்கேயோ போயிருக்கவேண்டும்! மஹாராஜாவும் பத்மாவதியைப் போய்க் கண்ட

துண்மைதான். விஜயாவே எனக்கு நேராகக்கூறினாள். தீர்ந்தது என்னுடைய வேலை! இனி மஹாராஜா என்னைக் கண்ணெடுத்தும் பார்க்கப்போகிறதில்லை, ஐயோ! நான் இதுவரையிற் பட்டகஷ்டங்களெல்லாம் வீணாயினவே! வீணாயினவே!

நீ : அம்மா, தாங்களேன் துக்கப்படுகிறீர்கள்? எப்படியும் சின்ன ராணியாயிருக்கும் தங்களுக்கென்ன குறை?

வனை : நீலவேணி, என்னையினி நீ சின்ன ராணியென்றழைக்க வேண்டாம். அவ் வாழ்வெல்லாம் அடியுடன் ஒழிந்தது. எப்பொழுது மஹாராஜா பத்மாவதியின் முகத்தை நேரிற் பார்த்தாரோ சபையில், அப்பொழுதே எனக்குத் தெரியும்! அப்பாதகி வேண்டுமென்றே மூடியிருந்த முந்தானையை அகற்றி, மஹாராஜா தன் முகத்தைப் பார்க்கட்டுமென்றே விட்டிருப்பாள்; சந்தேகமில்லை இனி ஏதெனக்கிவ்வாழ்வு? மனோஹரனும் தப்பிவிட்டான், மஹாராஜாவும் பத்மாவதியுடன் கூடிவிட்டார். தீர்ந்தது! இனி மனோஹரன் என்னைச் சும்மா விடப் போகிறானோ? இப்பொழுது மஹாராஜாவே என்னைக் கொல்லும்படி கட்டளையிட்டாலும் இடுவார்!— ஆயினும் மஹாராஜா நான்தான் இதற்கெல்லாம் காரணமென்று ஒருவாறு சந்தேகங் கொண்டிருக்கிறாரே யொழிய, நான் செய்த சூது இன்னதென்று தெளிவாக அறிந்திலர்; அந்தமட்டும் எனது பாக்யந்தான் அதையும் அறிந்தால் தானாகவே என்னைக் கொன்று விடுவார்! —நீலவேணி, ஜாக்கிரதை! அந்த நிருபங்களின் சமாசாரம் ஒருவருக்கும் தெரிவிக்காதே!

நீ : இல்லையம்மா. தாங்கள் எனக்கெவ்வளவோ உபகாரங்களெல்லாம் செய்திருக்கிறீர்களே, அவற்றையெல்லாம் நான் மறப்பேனா?

வனை : சரிதான்: நீலவேணி, என் தலை என்னவோ பளுவாயிருக்கிறது நீயும் இந்த அறையில் ஒரு புறமாக உறங்கு சற்றே.

நீ : அப்படியே அம்மா, [ஒரு புறமாய்ப் படுத்துக் கொள்கிறாள்.]

வனை : கண்ணை மூடிக்கொண்டு பார்ப்போம், அப்பொழுதாவது தூக்கம் வருகிறதா என்று. ஐயோ!—கண்ணை மூடும்பொழுதெல்லாம் மனோஹரனும் பத்மாவதியும் எதிரில் தோற்றுகிறது போலிருக்கிறதே! ஐயோ! நான் என்ன செய்வது? தூக்கமும் பிடிக்கவில்லை. சற்று உலாவிப்பார்க்கவா? [எழுந்திருந்து]—சீ! அதிலும் பிரயோஜனமில்லை, என்ன சங்கடம்! என்ன சங்கடம்! ஐயோ! நித்திரையாவது வராதா! [படுத்து] இல்லை! இல்லை!—அப்பா! மனோஹரா! சீ! என்ன மனப்பிரமை! மனோஹரன் வந்து என்னை வெட்டினாற்போல் தோற்றியதே! சித்தப்பிரமை! ஐயோ! எனக்குப் பயித்தியம் பிடித்துவிட்டதா என்ன?—சீ! இதென்ன? மனதைத் தைரியப்படுத்திக் கொண்டு தூங்கிப் பார்ப்போம்.

(மறுபடியும் சயனித்துக்கொள்கிறாள்.)

கேசரிவர்மன் அருவம் தோன்றுகிறது.

யார் அது?—ஐயோ! வந்தாயா மறுபடியும்?

கே : வசந்தசேனை!—வந்தேன் மறுபடியும்!

வனை : உன்னை யார் அழைத்தது? போ! போ! ஐயோ! நான் படுவதெல்லாம் போதாதோ? நீயும் வந்து கிளற வேண்டுமோ ?

கே : வசந்தசேனை!—நான் அப்பொழுதே சொன்னேனே கேட்டனையா? படு இப்பொழுது!—உன் தீவினை உன்னையே அழித்தது!

வனை : அழித்துத்தான் விட்டதே! இன்னும் என்ன இருக்கிறது எல்லாம் தீர்ந்ததே!—

கே : எல்லாம் தீரவில்லை! இதனுடன் உனது துக்கம் நீங்கியதென எண்ணாதே! என்னைக் கொன்றதற்கும், உத்தமியாகிய பத்மாவதி தேவிக்கும் மனோஹரனுக்கு நீ செய்த தீங்கிற்கும், தக்க தண்டனையாக நீ சீக்கிரம் இறப்பாய்!

வனை : இறந்துபோனால் போகட்டும்; உன்னைக் கேட்கவில்லை போ!

சே : வசந்தசேனை! என் மைந்தனாகிய வசந்தனும் உன் பொருட்டு—

வசனை : ஐயோ! அருவமே! உரக்கக் கூவாதே, யாராவது கேட்டு விடப் போகிறார்கள்! மஹாராஜா முதல் எல்லோரும் வசந்தனை மஹாராஜாவின் மைந்தனென்றே கருதியிருக்கிறார்கள் இதுவும் தெரிந்துவிடப்போகிறது! அவனாவது சுகமாய் வாழட்டும். நானிறந்தாலும் பெரிதல்ல!

சே : உன்பொருட்டு அவனும் இறக்கப்போகிறான்! அதைக் கண்டே, நீ சாவாய்! அவனை நீ கருத்தரித்தவுடன், மஹாராஜாவை உன் வசமாக்கி, என்னைக்கொன்று பிறகு பிறந்த வசந்தனை மஹாராஜாவின் குழந்தையென எல்லோரும் நம்பும்படி நீ செய்த சூதுக்கெல்லாம் இதுவே தக்க தண்டனை!

வசனை : ஐயோ! ஐயோ! வசந்தனும் நானும் இறக்கவேண்டுமோ?

சே : ஆம்!

வசனை : ஐயோ! நீ இன்னும் என்னை வருத்தாதே, ஒழிந்துபோ!

சே : இதோ போகிறேன். நீ இறந்து சீக்கிரம் என்னுடைய நிலைக்கு வருவாய்! [மறைகிறது.]

வசனை : அப்பா மறைந்துவிட்டது!—ஒரு வேளை நீலவேணி இது பேசியதெல்லாம் கேட்டிருந்தாளோ?—நீலவேணி! நீலவேணி!

வேகமாய் நீலவேணி எழுந்திருக்கிறாள்.

நீ : ஏன் அம்மா! (அருகில் வந்து) ஏன் அழைத்தீர்?

வசனை : இங்கு ஏதாவது—யாராவது வந்தார்களா பார்த்தனையா?

நீ : இங்கு யாரம்மா வருவது? ஒருவரும் வரவில்லையே!

வசனை : சரிதான், நீ உறங்கப் போ.

நீ : [தனக்குள்] இப்படி ஏதாவது இருக்கவேண்டுமென்று அப்பொழுதே நான் சந்தேகப்பட்டேன்! இல்லாவிட்டால் மஹாராஜாவுக்குப் பிறந்த குழந்தை, பயித்தியக்

காரனாய், கறுப்பாயிருப்பானோ? அம்மட்டும் நான் உறங்காது கேட்டிருந்தது நலமாயிற்று. கேசரிவர்மருக்கு வழி வைத்த ஆசாமி தாங்கள்தானோ?

(ஒரு புறம்போய்ப் படுத்துக்கொள்ளுகிறாள்.)

வஸந்த : ஐயோ! போதாக்குறைக்கு இதுவொன்றோ?—என் தலையெல்லாம் என்ன சுழல்கிறதே! எனக்குப் பயித்தியம் தான் பிடித்திருக்கிறதென நினைக்கிறேன்! இல்லாவிட்டால் எனக்கேன் தூக்கம் வரவில்லை?

(படுக்கையில் புரள்கிறாள்.)

புருஷோத்தமராஜன் கையில் வாளுடன் விரைந்து வருகிறார்.

பு : எங்கே நீலவேணி?—நீலவேணி!

நீ : (எழுந்திருந்து) மஹாராஜா!

பு : வா இப்படி துஷ்டையே!

வஸந்த : ஐயோ! இதென்ன?

பு : (போகும் பொழுது) அந்த நிருபத்தைக் குறித்து உண்மையைக் கூறாவிட்டால் உன்னைக் கொன்றுவிடுகிறேன்!

[புருஷோத்தமனும் நீலவேணியும் போகிறார்கள்.

வஸந்த : தீர்ந்தது, நான் நினைத்தவண்ணமே முடிந்தது!—நிருபம்!—உண்மை!—இவள் எப்படியும் கூறிவிடுவாள்!—சந்தேகமில்லை! நான் வாழாவிட்டால் அவள் மாத்திரம் மஹாராஜாவுடன்—கூடி வாழ்வானேன்?—எப்படியும் இறக்கப்போகிறேன்—பழி வாங்கிவிட்டு இறக்கிறேன்!

(அங்கிருக்கும் ஒரு கட்கத்தைக் கையில் எடுத்துக் கொண்டு அறையை விட்டு வெளியே ஓடுகிறாள்.)

காட்சி முடிகிறது.



# இரண்டாவது காட்சி

**இடம்—அரண்மனையில் ஒரு திட்டிவாசல். காலம்—இரவு..**

**ஒரு புறமாக விகடனும் மற்றொரு புறமாக**
**அமிர்தகேசரியும் வருகிறார்கள்.**

**அ :** யார்? விகடரே!

**விக :** ஆம், சகடரே!

**அ :** இருட்டில் நன்றாய்த் தெரியவில்லை.

**விக :** எனக்கும் ஒன்றும் தோன்றவில்லை.

**அ :** போனாற்போகிறது. வசந்தரைப் பார்த்தீரோ ?

**விக :** வந்தால் வருகிறது. வசந்தரைப் பார்த்தேன்

**அ :** எங்கே ?

**விக :** மஹாராஜாவின் சபையில்.

**அ :** இப்பொழுது மஹாராஜாவின் சபையில் அவருக்கென்ன வேலை ?

**விக :** இப்பொழுது ஒன்றுமில்லை; நேற்றல்லவோ பார்த்தேன்

**அ :** என்ன ஐயா! எப்பொழுது பார்த்தாலும் விளையாட்டா யிருக்கிறது உமக்கு! வசந்தர் மஹாராஜாவினுடைய, ஆடையாபரணங்களையெல்லாம் அணிந்துகொண்டு எங்கேயோ போய்விட்டாரென்று தேடிக்கொண்டிருக் கிறார்கள் எங்கும்! உமக்குப் பரிகாசமாயிருக்கிறது! எல்லோரும் என்னைக் கேட்கிறார்கள். வசந்தரைப் பார்த்தீரா ?

**விக :** ஓ! [அழுகிறான்.)

**அ :** என்ன ஐயா, கேட்டதற்குப் பதில் கூறாது அழத் தொடங்குகிறீர்கள்! வசந்தர் எங்கே தெரியுமா ?

**விக :** வசந்தர்!—உம்—உம்! [தேம்பி அழுகிறான்.?

**அ:** என்ன வசந்தருக்கு? எதற்காக ஐயா அழுகிறீர்கள்] இதென்ன சங்கடமா யிருக்கிறது!

விக : வசந்தர்!— [அதிகமாக அழுகிறான்]

அ : ஐ ஐயோ! என் தலைக்கு ஏதோ தீங்குவந்தது! என்ன வசந்தருக்கு? சொல்லும் ஐயா சீக்கிரம்!

விக : வசந்தர் எங்கேயோ காணோமென்று எல்லோரும் தேடு கிறார்கள்—

அ : உம்—

விக : அவ்வளவுதான்!

அ : அதற்காகவா அழுகிறீர்?

விக : ஆமாம்!

அ : போம் ஐயா! எப்பொழுதும் உமக்கும் விளையாட்டு தான்! [போகிறான்]

விக : அந்தமட்டும் ஒழித்துவிட்டோமே சனியை! இல்லாவிட் டால் நம்மையும் கூடத்தேடச் சொல்லும்! இரண்டு நாளாக எனக்குத் தூக்கமேயில்லை. பட்டணமெல்லாம் இளவரசரைக் காணோமென்று குழப்பமாகி எல்லோரும் நம்மைக் கேட்க ஆரம்பித்து விடுகிறார்கள் அவர் எங்கேயென்று. அப்பா! சற்று இந்த இருட்டிலாவது நித்திரைசெய்வோம்.

[படுத்துக்கொள்ளப் பார்க்கிறான்.

வ : (உள்ளேயிருந்து) ஆமாம்! சந்தேகமில்லை, நான்தான் மஹாராஜா!

விக : ஐ ஐயோ! இந்தப் பயித்தியம் இங்கே இருக்கிறதையா! அதோ தூரத்தில் வருகிறதே! அடடா! மஹாராஜாவின் ஆடையாபரணங்களையெல்லாம் அப்படியே மாட்டிக் கொண்டிருக்கிறதே! தூரத்தில் வித்தியாசமுந் தெரிய வில்லையே!—இது யார் இந்தப் பக்கம்?

வசந்தசேனை விரைந்து வருகிறாள்.

வனை : விகடா!

விக : அம்மணி!

வனை : மஹாராஜா எங்கேயிருக்கிறார்?

விக : இதோ வருகிறாரே, சாட்சாத் மஹாராஜா!
எதிர்புறமாக சிரித்தவண்ணம் வசந்தன் வருகிறான்.

வனை : (அவன்மீது பாய்ந்து) புருஷோத்தமராஜனே!
(கட்கத்தை ஓங்கி)

இனி பத்மாவதியுடன் சுகமாய் வாழும்!

(குத்திக் கொல்கிறாள். வசந்தன் வீழ்ந்திறக்கிறான்)

வி : அம்மணி! அம்மணி! என்னவசந்தரைக்கொன்று விட்டீரே!

அமிர்தகேசரி வருகிறான்

வனை : ஆம், ஆம்! வசந்தன்தான்! சந்தேகமில்லை! கேசரிவர்மன் சொன்னது நிறைவேறிவிட்டது! இனி நானிருப்பானேன்?—பொறு, மனோஹரா! ஆஹா! நீ என்னைக்கொல்லவிடுவேனென்று பார்த்தாயோ! என்னை யாரென்று நினைத்தாய்? வசந்தசேனை!—நீ என்னைக் கொல்வதென்ன! நானே என்னைக்கொன்று கொண்டு மாள்கிறேன்! போ!

(தன்னையும் குத்திக்கொண்டு மகன்மீது விழுந்து சாகிறாள்.)

அ : விகடரே, நீர் முன்பு அழுத சகுனத்திற்குச் சரியாக முடிந்ததே! நாமிப்பொழுதென்ன செய்வது?

விக : கட்டிக்கொண்டு அழுவோமா?

புருஷோத்தமராஜன், பந்தங்களுடன் சேவகர் புடைசூழ வருகிறார்.

பு : இதென்ன இங்கு கூச்சல்!—வசந்தசேனை! வசந்தன்! இதென்ன இது?

விக : மஹாராஜா, வசந்தர் உமது உடை முதலியவற்றை யெல்லாம் அணிந்துகொண்டு இப்படி வர, சின்ன ராணி எதிர்ப் பக்கமாக வந்து மஹாராஜா எங்கே என்று கேட்டார்கள். நான் வேடிக்கையாக 'இதோ வருகிறார் மஹாராஜா' என்றேன். உடனே கோபத்துடன் வசந்தர்மீது பாய்ந்து குத்திக் கொன்றுவிட்டார்கள். பிறகு உண்மையையறிந்து நாங்கள் தடுப்பதன்முன்

தன்னையே குத்திக்கொண்டு இறந்து விட்டார்கள் மஹாராஜா, எங்கள்மீது யாதொரு குற்றமுமில்லை!—

பு ஆம்! உங்கள்மீது குற்றமில்லை! சரி, என்னைக் கொல்ல வந்தவள் தெய்வாதீனத்தால் வசந்தனையே கொன்று விட்டனள்!—வசந்தசேனை! உன் கெடுமதிக்குத் தக்க தண்டனையே உனக்குத் தெய்வ கடாட்சத்தால் விதிக்கப்பட்டது. இதுவரையில் என் மைந்தனென எண்ணியிருந்த வசந்தனும் இறந்தான்!—அவர்கள் வந்த வேலை அவ்வளவுடன் முடிந்தது!-அமிர்தகேசரி, விசடா, உடனே சென்று ரணவீரகேதுவை வரவழைத்து, நமதரண்மனைத் தாதியர்களைக்கொண்டு, தக்க மரியாதையுடன், இவ்விரண்டு சவங்களையும், ஒன்றா யெடுப்பித்து, அரண்மனையின் தெற்கு மூலையில், தீ வளர்த்தி தகனம் செய்துவிடும்படி, நான் கட்டளை யிட்டதாகச் சொல்லுங்கள் புறப்படுங்கள் உடனே.

(இருவரும் போகிறார்கள்)

வசந்தசேனை! சற்று முன்பாக எவ்வளவோ யுக்தி களெல்லாம் செய்த உனது மூளை ஓய்வுற்று அடங்கி யிருக்கிறதோ?—ஆயினும்—எனது மனைவியைப்போல் சிலகாலம் வாழ்ந்திருந்தாய், இறந்த பின்னும் தக்க மரியாதையுடன் செல்வாய்—நீ செல்ல வேண்டிய இடத்திற்கு!—உலக வாழ்வு இதுதான்! [வெளியில் யுத்த பேரிகை முழங்குகிறது] என்ன இந்தச் சமயத்தில் யுத்தபேரிகை முழங்குகிறது! என்ன சமாசாரம்?

[விரைந்து போகிறார்.]

காட்சி முடிகிறது



# ஐந்தாம் அங்கம்



## முதல் காட்சி

**இடம்—காவிரிக் கரையிலோர் வசந்தமண்டபம். காலம்—பகல்.**

இடையில் திரையிட்டிருக்க, ஒரு பக்கத்தில் புருஷோத்தமராஜனும் மற்றொரு பக்கம் பத்மாவதியும் விஜயாவும் இருக்கின்றனர்.

பு: *மனோஹரனது மகிமையை நான் இப்பொழுதே நன்றாயறிகிறேன்! அவன் அந்நாட்டைவிட்டு நீங்கினான் என்கிற சமாசாரம் வெளியாகி இன்னும் ஒரு வாரமாகவில்லை. இதற்குள்ளாக, இந்த முத்துவிஜயனது மகன், மனோஹரன் தனது உயிரைக் காப்பாற்றி சிம்மாசனத்தில் இருத்தியதையும் பாராமல், நம்மீது படையெடுத்து வந்துவிட்டான் பார்த்தனையா! மனோஹரன் ஒருவனிருந்தபொழுது, பாண்டிய சேனைகளை முறியடித்த நமது வீரர்களும் சைனியங்களும், அவனொருவனில்லாமற்போக, தாமே முறியடிக்கப்பட்டு சிதறிப் போயினவே!*

பு: *மஹாராஜா, மனோஹரனைத் தேடி எங்கிருந்த போதிலும் அழைத்துவரும்படி சட்டனையிடப்பட்ட ஒற்றர்களில் ஒருவனும் அவனிருக்குமிடத்தையாவது அறிந்துவரவில்லையா?*

பு: *எங்கெங்கும்தேடியும் காணோமென்று அநேகர் திரும்பி வந்து விட்டார்கள் இன்னும் சிலர் கண்டுபிடியாது திரும்பி வருவதில்லை என்று போயிருக்கிறார்கள்.—மனோஹரா! இந்தச் சந்தர்ப்பத்தில் நீ ஒரு வீரனிங்கிருப்பாயாயின் இந்த உக்கிரபாண்டியன் தலையெடுப்பானோ?—ரணவீரனேதுவும் முறியடிக்கப்பட்டு மிகுந்த சைனியங்களுடன் நேற்றைத்தினம் வந்து சேர்ந்துவிட்டான் காயப்பட்டு, இனி மிகுந்தவன் நானொருவனே! மிகுதியாயிருக்கிற சைனியங்களையெல்லாம் ஒன்று சேர்த்து நாளைத்தினம் காலை நமது பட்டணத்தை நோக்கி வரும் உக்கிரனுடன் போர் புரியவேண்டும்!*

மனோஹரா! மனோஹரா! உன்னையொத்த சுப்பிர தீபம் போன்ற சுத்த வீரன் என் மகனாயிருந்தும், என் படைத் துணையெல்லாம்போய், முடிவில் நானே சேனாபதிப்பட்டம் வகித்து யுத்தம் செய்யும்படி நேரிட்டதல்லவா ?

வி : மாமா, பிராணநாதருக்கு இந்த யுத்த சமாசாரம் தெரிந்தால் எப்படியும் நமக்கு உதவியாக வருவார்—வரமாட்டாரோ ?

பு : வாரான்! வாரான்! மானாபரணனாகிய அவன் நான் கூறியமொழிகளைக் கேட்டும், எனக்குதவியாக மறுபடியும் வருவானோ? என் விதி! என் விதி! நான் செய்த குற்றத்திற்கெல்லாம் தக்க தண்டனையே அனுபவிக்கிறேன்!

ஒரு தோழி வருகிறாள்,

தோ : மஹாராஜா, சைனியங்களெல்லாம் அணி வகுத்து நிற்கின்றன. புறப்படுவதற்காகத் தமது வரவை எதிர்பார்த்திருக்கின்றன.

பு : சரிதான், இதோ வருவதாகச் சொல், ப்பா.

தோ : உத்தரவு. [போகிறாள்]

பு : இனி யோசிப்பானேன்?—பத்மாவதி, இனி நான் தாமதிக்கலாகாது! புறப்படவேண்டும்! உன் விடை பெற்றுச் செல்லவா நான் ?

ப : மஹாராஜா, தாம்ஒன்றும் அதைபிரியப்படவேண்டாம். உடனே புறப்பட்டுப்போய், பகைவரை வென்று வெற்றி மாலை புனைந்து வருவீராக!

பு : கண்ணே,—இப்பொழுதாவது—ஒருமுறை நான் உன்னை நேரிற் கண்டு கண்குளிர்ந்துவிட்டுச் செல்லலாகாதா? நானோ தோல்வியடைந்த சிறுபடையுடன், வெற்றி கொண்டு மதித்துவரும் உக்கிரன்மீது, யுத்தஞ் செய்யச் செல்கிறேன்! நான் வெற்றியாவது பெற வேண்டும், அல்லதுபோர்க்களத்தில் வாளுடன் இறந்து வீர சொர்க்கமாவதடைய வேண்டும். இவ்விரண்டிலொன்று நிச்சயம்! வெற்றி பெற்றேனாயின் திரும்பி வருவேன்! இல்லாவிடின்—கண்ணே, பத்மாவதி, பதி

விரதையாகிய உனக்கு நான் செய்த குற்றங்களை யெல்லாம் மன்னித்து இப்பொழுதாவது உனது வதனத்தை ஒருமுறை நோக்கிவிட்டுச்செல்ல விடை யளிக்கலாகாதா?

ப : மஹாராஜா, தாம் எப்படியும் வெற்றி பெறுவீர் என்று எனக்கேதோ தோன்றுகிறது. தாம் ஒன்றிற்கும் வருந்த வேண்டாம் ஆயினும் நான்செய்த பிரதிக்ஞை யினின்றும் தவறுவது நியாயமன்று. மன்னிக்கவேண்டு மென்னை.

பு : ஆனால் என்னை எப்பொழுதும் கண்ணெடுத்துப் பார்க்கமாட்டாயோ?

ப : அப்படியன்று. எப்பொழுது மனோஹரனை உயிருடன் என் கண்முன்பாகப் பார்க்கிறேனோ, அந்த நொடியே உமது வேண்டுகோளுக்கிசைவேன். அதுவரையில் தாம் என்னை நிர்ப்பந்திப்பது நியாயமன்று.

பு : மனோஹரா, மனோஹரா!—பத்மாவதி, உன்னிஷ்டம்; ஆயினும் உனது கரத்தையாவது சற்றுக்கொடு, அதையாவது முத்தமிட்டுச் செல்கிறேன், உன்னைப் பார்த்துவிட்டுச் செல்லக்கொடுத்துவைக்காமற்போன போதிலும்!

வி : அதையாவது செய்கிறதற்கென்ன மாமி? இந்தத் திரை யைச் சிறிது கிழித்து, கையை வெளியில் விடுகிறது தானே?

பு : ஆம்! இதோ என்வாளால் வழி செய்கிறேன்.

[கிழித்த திரையின் வழியே பத்மாவதி தன் கரத்தை நீட்ட அதற்கு முத்தமிடுகிறார்.]

இவ்வளவாவது கொடுத்துவைத்தேனே! இனி நான் இறந்தாலும் பெரிதல்ல!

ப : மஹாராஜா, இதென்ன! தாம் தண்ணீர் விடுகிறீரே! மனோஹரனுடைய தந்தையாயிருந்தும் தாம் யுத்தத் திற்குச் செல்ல விசனப்படுவதா? இதென்ன கண்ணீர்?

பு : கண்ணே, பத்மாவதி, நானதற்காக வருந்தப் படவில்லை; யுத்தத்தில் ஒருவேளை இறக்க வேண்டுமே

யென எனக்குச் சிறிதும் அச்சமில்லை. நான் வருந்திய தெல்லாம் இவ்வளவழகிய கரத்தையுடைய பெண் மணியை மணந்து, அவளுக்குத் துரோகம் செய்து, இக் கரத்தைப்பற்றி அக்கினி சாட்சியாய் மணந்தபொழுது நான்செய்த பிரதிக்ஞைகளையெல்லாம் தவறினேனே யென்று வருந்திக் கண்ணீர் விட்டேனேயொழிய வேறொன்றுமில்லை. [வெளியில் பேரிகை முழங்கு கிறது] ஜய பேரிகை முழங்குகிறது! ஏதோ நற்சகுன மாகத்தானிருக்கிறது!—பத்மாவதி, நான் விடை பெற்றுச் செல்கிறேன்—விஜயா, நான் வருகிறேன். நான் தெய்வாதீனத்தால் இறக்கும்படி நேரிடுமாயின், நீயும் அக்கினிப்பிரவேசமாக வேண்டியதில்லை. நீ கர்ப்பிணியாயிருக்கிறாய்; நீ தப்பிப் பிழைக்கத் தக்க ஏற்பாடு செய்திருக்கிறேன். சேர சௌபலராஜனு டைய நகரிற்குச்சென்றால், அவன் உன்னை மிக்க உபசாரத்துடன் காப்பாற்றிவருவான். பிறகு உன் பிராணநாதனிருக்குமிடமறிந்து, அவனுடன் போய்ச் சேர்ந்து, நான் அவனை மன்னிப்புக்கேட்டதாகவும். உக்கிரன்மீது பழிவாங்கும்படியாகவும் வேண்டிக் கொண்டேனென்று சொல். தெரியுமா?

வி: அப்படியே ஆகட்டும் எப்படியும் நீர் வெற்றிபெற்று வருவீரென்றே நினைக்கிறேன், அஞ்சவேண்டாம்.

பு: பத்மாவதி, உனக்கொன்றும் நான் கூறவேண்டியதில்லை

ப: இல்லை,

பு: பத்மாவதி, விஜயா, நான் போய்வருகிறேன்.

ப.வி.: ஜயமுண்டாகுக!

காட்சி முடிகிறது.



## இரண்டாவது காட்சி

இடம்—யுத்தகளம். காலம்—பகல்.

சோழ சைனியங்கள் முடியடிக்கப்பட்டு ஓடுகின்றன.

எதிர்புறமாக மாறு வேடத்துடன் மனோஹரன், ராஜப்பிரியன். சத்தியசீலர் வருகிறார்கள்.

சோ.சை.: அடடே வந்தூடுங்கடா! வந்தூடுங்கடா எல்லாம்! நம்போதான் தோத்துட்பூட்டமே! இன்னம் இங்கேயிருந்தா சாவ வேண்டியதுதான். ஓடிப்பூடுவோம் வாங்கோ! மஹாராஜாவெ எதிரிங்கோ சுத்திக்சினாங்கோ! இனிமேலே என்னாயிருக்குது! அடே நம்பொ மனோஹரரிருந்தாக்கா நம்போ இப்படி தோத்துப்பூடுவோமாடா! வாங்கோ! வாங்கோ! நம்ப ஓடிப்பூடுவோம்!

ரா: அடே பஞ்சைகளே! எங்கே ஓடுகிறீர்கள்? நில்லுங்கள்! நில்லுங்கள்! வெட்கமில்லையா உங்களுக்கு ஓடிப்போக? ஆறிலேயும் சாவு நூறிலேயும் சாவு எனக்கருதி யுத்தத்தில் பிடித்தவாளுடன் மாளுவதை விட்டு, பேடிகளைப் போல் எங்கே ஓடுகிறீர்கள்? நில்லுங்கள்!

ம: அடே! மனோஹரருடனிருந்து முன்பு வெற்றி பெற்ற நீங்கள், இப்பொழுது பாண்டியன் சேனைகட்கு முன்பாகப் புறங்கொடுப்பதா? திரும்புங்கள் எல்லோரும்!

சோ.சை.: ஆமாம் ஐயா! மனோஹரர் இருந்தா சண்டெ போடுவோம் நாங்க செத்தாலும் பெருசில்லா இண்ணு. இப்போ அவரெப்போலெ யாரிருக்கிறாங்கோ ?

ம: அவருக்குப் பதிலாக நானிருக்கிறேன்! என்னுடைய தோழர்கள் இருக்கிறார்கள்! வாருங்கள் எல்லோரும்! இப்பொழுது ஒன்றுங் கெட்டுப்போகவில்லை. இன்னும் நாம் சண்டை செய்து ஜெயிப்போம்! அதைரியப்படாதீர்கள்!

சோ.சை: ஆமாண்டா ஒரு கை பார்ப்போண்டா! இவரு தைரியசாலியாட்டந்தான். இருக்கிறாரு!—உடாதே அந்தப் பாண்டியசேனைங்களெ!

[எல்லோரும் ஒரு புறமாய்ப் போகின்றனர்.]

ச : மஹாராஜா எங்கேயிருக்கிறார்?

சோ.சை. : அவரெ எதிரிங்கோ சுத்திக்கினாங்கோ!

ம : வாருங்கள்! நாம் இன்னும் மற்றச் சைனியங்களையும் ஒன்றாகச் சேர்த்துக்கொண்டு அவருக்குதவியாகச் சென்று வெல்லுவோம்!

சோ.சை. : ஜெய! ஜெய!

[மனோஹரனுடன் எல்லோரும் போகிறார்கள்.]

விகடன் பிணக் குவியலிலிருந்து மெல்ல எழுந்திருக்கிறான்.

விக : செத்த பிணம் பிழைக்குது! முன்னமே சாவாதிருந்தால் இப்போது பிழைப்பேனோ? அதற்குத்தான் சண்டையாரம்பமாகுமுன் செத்துப்போய்விடவேண்டுமென்பது! அதிருக்கட்டும்—இங்கேயென்ன நம்மவருடைய குரல் கேட்டாற்போலிருக்கிறதே! அடடே! அதோ நம்முடைய சேனைகளெல்லாம் மறுபடியும்ஒன்றாகச் சேர்கின்றார்களையா! அது யார் நடுவில் நின்றுகொண்டு உத்தரவு கொடுப்பது? இதுதான் சமயம், நாமும் போய் அவர்களுடன் சேர்ந்துகொள்வோம்.

[போகிறான்.]

மற்றொரு புறமாக புருஷோத்தமராஜன் பாண்டிய சைனியங்களால் துரத்தப்பட்டு ஓடிவருகிறார்.

பு : அடே! வீரர்களானால் ஒருவன் ஒருவனாகச் சண்டை செய்யுங்கள்!

பா.சை. : அடடே! இவரெ அல்லாருமா சேர்ந்து கொன்னுட்டாதாண்டா சரி!

(புருஷோத்தமராஜன் பாண்டியர்களால் எதிர்க்கப்பட்டு தன்னாலியன்ற அளவு யுத்தம் புரிந்தும் கடைசியில் காலில் வெட்டப்படுகிறார்.)

பு : மனோஹரா! மனோஹரா! (கீழே விழுகிறார்.)

மறுபடியும் மனோஹரன் சைனியங்களுடன் வருகிறான்.

**பௌத்தாயனன், சத்தியசீலர், ராஜப்பிரியன் வருகிறார்கள்.**

ம : இதோ வந்தேன்!

[புருஷோத்தமராஜனை எதிர்த்தவரை வெட்டித் தள்ளி அவரைக் காப்பாற்றுகிறான் பாண்டிய சைனியங்கள் ஓடிப்போகின்றன.]

அப்படியே இரண்டு பேராகப் பாசறைக்கு எடுத்துச் செல்லுங்கள் சீக்கிரம்!

பௌ : இன்னும் உயிரிருக்கிறது! ஆயினும் மூர்ச்சையாயிருக்கிறார்! காயம் பட்டிருக்கிறது! ஜாக்கிரதை ஜாக்கிரதை!

[சத்தியசீலரும் ராஜப்பிரியனும் மூர்ச்சையாயிருக்கும் அரசனை அப்படியே தூக்கிக் கொண்டு போகிறார்கள்.]

ம : சோழர்களே! வாருங்கள்! வாருங்கள்! ஓடுகிறார்கள் பகைவர்கள்!

பௌ : ஆம், ஆம்! இதுதான் சமயம், வாருங்கள்! வாருங்கள்!

ம : ஜய!

எல்லோரும் : ஜெய! ஜெய! [எல்லோரும் போகிறார்கள்]

**விகடன் மறுபடியும் வருகிறான்.**

விக : அடடா! எத்தனை தரம்தான் செத்து எழுந்திருக்கிறது! என்ன பெரிய தொந்தரவாயிருக்கிறது! ஆனாலும் பெரிதல்ல: எப்படியும் மஹாராஜா பிழைத்து விட்டார்! நம் பக்கமே ஜெயம் வந்துவிட்டது! இது யார் இப்பொழுது வந்துநம்முடைய மஹாராஜாவைக் காப்பாற்றியது?—தெரியவில்லையே!

[உள்ளே கோஷ்டம் "இறந்தான் பாண்டியன்! இறந்தான் பாண்டியன்!"]

பலே! நம்பபக்கந்தான் ஜெயம்! பாண்டியன் இறந்தான்! ஜெய! ஜெய! [ஓடுகிறான்.]

**காட்சி முடிகிறது.**

## மூன்றாவது காட்சி

இடம் பாசறை. காலம்—மாலை.

காயம் அடைந்த புருஷோத்தமராஜன் மஞ்சத்தின்மீது சயனித்திருக்கிறார்.

ஒரு புறமாக மனோஹரன் மாறு வேடத்துடன் வருகிறான்.

ம : களைத்து உறங்குகிறார். நான் ஒரே பிடிவாதமாய்ப் பௌத்தாயனன் கூறியதற்கிணங்காதிருந்து விட்டேனாயின் இவர் இந்நேரம் இறந்திருப்பாரன்றோ? சீ நான் என்ன தப்பிதம் செய்யவிருந்தேன்? இவர் இறந்திருந்தால் அன்னையும் உடனே உயிர் விடுவார்கள். பிறகு இவ்விருவரையும் போக்கிய பாவம் என்னையே தொடருமல்லவா? அம்மட்டும் பௌத்தாயனன் நமக்கு நல்ல உதவியேசெய்தான். அதிருக்கட்டும்—இப்பொழுது நான் என்ன செய்வது? மஹாராஜாவுக்குத் தன்னைக் காப்பாற்றியது இன்னானெனத் தெரியாது; என்னை யாரோ என்று நினைக்கிறார்! ஆயினும் என்னை எந்நேரமும் நினைந்து வருந்திக்கொண்டிருக்கிறார், என்பதற்கு ஐயமில்லை. நேற்றைத்தினம் காயப்பட்டு மூர்ச்சையாகி விழும் தருணத்திலும் என் பெயரைச் சொல்லிக் கொண்டு விழுந்தார். சீ! இனி நான் கடினச் சித்தமுடையவனாய் இருக்கலாகாது. வசந்தசேனையோ தெய்வகதியால் இறந்துவிட்டாள், மஹாராஜாவுக்கும், புத்தி வந்துவிட்டது; நான் இன்னானென்று வெளியிடவா? சீ! எனக்கினி பிடிவாதமாகாது! என் தாயாரும் விஜயாவும் என்னைக் காண என்ன விரும்புவார்கள்! மஹாராஜாவும் தன்னைக் காப்பாற்றியவனும் சோழ சைனியங்களுக்கு வெற்றியைக் கொண்டு வந்தவனும் நான் தானென அறிந்தால் என்ன சந்தோஷிப்பார்! ஆயினும் நானே போய் எப்படி வெளியிட்டுக் கொள்வது?—இதோ, நம்மவர் வருகிறார்கள். மஹாராஜாவும் விழித்துக்கொண்டனர் நாங்கள் போய் வருகிறோமென்று சொன்னால் அவர் என்ன பதில் கூறுகிறாரோ பார்ப்போம்.

சத்தியசீலர், பௌத்தாயனன், ராஜப்பிரியன் மூவரும்-

மாறு வேடத்துடன் வருகிறார்கள்.

வாருங்கள், நாம் போய் மஹாராஜாவிடம் விடை பெற்றுச் செல்வோம்.

[நால்வரும் ஒரு புறமாகக் கூடி மெல்லப் போகிறார்கள்.]

ச : அது நியாயமன்று! எப்படியும் தாம் நேரே போய் விடை பெற்றே வரவேண்டும். இல்லாவிட்டால் அவர் ஏதாவது நினைத்துக்கொள்வார். இது அவமரியாதையாகும்.

ரா : ஆமாமையா, அப்படி செய்கிறது தானே? இதில் தவறென்ன இருக்கிறது? குரலை மாற்றி முன்புபோல் பேசும். உம்மை ஒருகாலும் இன்னாரெக் கண்டுபிடிக்க மாட்டார், நான் சொன்னேனே பாரும்.

பௌ : இனிமேல் கண்டுபிடித்து விட்டால்தானென்ன? வசந்த சேனையும் வசந்தனுந்தான் இறந்துவிட்டார்கள். தமது தாயாருடன் மஹாராஜா சமாதானமாய்ப்போய் விட்டதாகவும் கேட்டறிந்தோமே இனியென்ன கஷ்டம் ?

ம : போய்ப் பார்க்கிறேன். [அரசனிடம் எல்லோரும் போகிறார்கள்] மஹாராஜா, நாங்கள் விடைபெற்றுக் கொள்ளுகிறோம்.

பொ : எங்களுக்கு முக்கியமான வேலையொன்றிருக்கிறது. அது பற்றிச் சீக்கிரம் புறப்படவேண்டியதாயிருக்கிறது மன்னிக்க வேண்டும்.

ரா : அதுவுமன்றி தங்களுடைய காயமும் ஒன்றும் அபாயகரமானதல்லவென்றும், நாளைத்தினமே திரும்பித் தமது பட்டணத்திற்குப் போகலாமென்றும் ரணவைத்தியர் கூறியதாகக் கேள்விப்பட்டோம்.

ச : நாங்கள் வந்த காரியம் முடிந்துவிட்டது; ஆகவே தயவு செய்து விடையளிக்கவேண்டும்.

பு : எங்கே, நான் பேச வாயைத் திறக்குமுன் நீங்களே எல்லாம் பேசி முடித்துவிடுகிறீர்களே! நீங்களின்னாரென எனக்கின்னும் தெரியாமலிருக்கிறது. உங்கள் பெயரை நான் அறியலாகாதா ?

பௌ: அறியாமலென்ன? இதோ நிற்பவர் வீரகேசரி, அவர் அருகில் நிற்பவர் ஜெயப்பிரதாபர், இவர் சுகுண சேகரர், என் பெயர் மேதாநிதி,

பு: தாங்களெல்லோரும் எந்தத் தேசம்?

பௌ: சேரதேசத்திற்குச் சமீபத்திலிருப்பவர்கள்.

ம: மஹாராஜா, நாங்கள் ஒரு முக்கியமான காரணமாய்ப் போக வேண்டும், சீக்கிரம் விடையளியும்.

பு: வீரகேசரி! தமது புஜ பல பராக்கிரமத்தினாலேயே நான் இப்பொழுது பிழைத்திருப்பது; உங்கள் நால் வருடைய வல்லமையினாலேயே நான் ஜயங்கொண்டது நீங்களில்லாவிடின், நானிறக்க என் படைகளெல்லாம் முறியடிக்கப்பட்டு என் தேசத்தையெல்லாம் பகைவர் கைப்பற்றியிருப்பார்கள். அப்படியிருக்க, எனக்கு இவ் வளவு உபகாரம் செய்த தம்மையும் தமது தோழர்களை யும் நான் தக்க மரியாதை செய்யாது அனுப்பி விடுவேனாயின் நான் நன்றியற்றவனாவேன், உலகத் தோரெல்லாம் என்னைப் பழிப்பார்கள். என துயிரை யும், சைனியங்களையும் ராஜ்யத்தையுங் காப்பாற்றிய தாங்கள் எனது சபைக்கு வந்து, எதுவேண்டுமோ அதைப் பெற்றே செல்லவேண்டும். அதற்குமுன் உங்களுக்கு நான் ஒரு காலும் விடையளியேன்.

ம: எங்களுக்கு வேண்டியதொன்றுமில்லை

பு: அப்படியல்ல, எதை வேண்டுமென்றாலும் கேளுங்கள் தருகிறேன். என் ராஜ்யமுழுமையும் கேட்டபோதிலும் தரச் சித்தமாயிருக்கிறேன்.

ம: எங்களுக்கு தமது ராஜ்யம் வேண்டியதில்லை.

பு: ஆயின் வேறு எதையாவது பெற்றுச் செல்ல வேண்டும். நீங்கள் எதைக் கேட்டபோதிலும் தரச் சித்தமாயிருக் கிறேன். என் வேண்டுகோளை மறுக்கலாகாது.— என்ன சொல்கிறீர்கள்? நாளைத்தினம் என் சபைக்கு வருகிறீர்களா தயவு செய்து?

ரா: மஹாராஜா, எங்களிஷ்ட மொன்றுமில்லை; இவர்தான் எங்கள் தலைவர். இவர் சொற்படி நாங்கள் நடக்கச் சித்தமாயிருக்கிறோம்.

பௌ : [மனோஹரனிடம் ஒரு புறமாக] ஆகட்டும் என்று ஏற்றுக் கொள்ளும்.

ம : [சத்தியசீலர் செவியில் ஏதோ கூறுகிறான்]

ச : மஹாராஜா, எங்கள் தலைவர் வரத் தடையில்லை ஆயினும் அவருக்குச் சில நிபந்தனைகள் உண்டு. அவ்வாறு தாம் நடப்பது சாத்தியமோ எனச் சந்தேகிக்கிறார், அவர் வந்து பரிசு பெற்றாலொழிய நாங்கள் வருவது அசாத்தியம்.

பு : அப்படி ஒரு சந்தேகமும் வேண்டாம் என்ன வேண்டுமோ சொல்லும், அப்படியே செய்கிறேன் என்ன விரதம் பூண்டிருக்கிறார்? அவர் எண்ணத்தை வெளியிட்டால் அப்படியே நடத்திவைக்கிறேன்.

ம : [மறுபடியும் சத்தியசீலர் செவியில் ஏதோ கூறுகிறான்.

ச : தங்களுக்கு விவாகமாயிருக்கிறதா எனக் கேட்கிறார்?

பு : எனக்கா? அது எதற்கிப்போது?—ஆம், ஆயிருக்கிறது (ஒரு புறமாக) இதென்ன சங்கடம்?

ச : சந்தோஷம். அவர் தாங்களும் தமது பத்தினியும் தம்பதிகளாகச் சிம்மாசனத்தில் கொலுவிருந்து இருவருமாகப்பரிசு கொடுத்தாலொழிய ஏற்றுக்கொள்வதில்லையென, ஒரு விரதம் பூண்டிருக்கிறார். அப்படி தாம் செய்யும் பட்சத்தில் அவர் வரத் தடையில்லை நாங்களும் வரக்கூடும்.

பு : இதென்ன சங்கடமாய் முடிந்த! - வேறொரு மார்க்கமுமில்லையா ?

ம : வேறொரு மார்க்கமுமில்லை. அப்படி செய்தால் வருவேன், இல்லாவிட்டால் முடியாது!

பு : வீரசேகரி! தாம் கோபங்கொள்ள வேண்டாம். அப்படியே ஆகட்டும். நாளைத்தினம் சபைக்கு எப்படியும் விஜயம் செய்யவேண்டும்.

ம : அப்படியே வருகிறோம் சந்தேகப்பட வேண்டியதில்லை நாங்கள் விடை பெற்றுக்கொள்கிறோமிப்பொழுது,

[அரசனிடம் விடை பெற்று நால்வரும் ஒரு புறமாகப் போய் மெல்லப் பேசுகிறார்கள்]

பு : [தனக்குள்] ஐ ஐயோ! இதென்ன சங்கடம்! பத்மாவதி இதற்கிப்பொழுது சம்மதிப்பாளோ? நான் யுத்தத் திற்குப் போகும்பொழுதும் பாரேனென்றவள் இப் பொழுது என்னுடன் சிம்மாசனத்தில் உட்கார இசை வாளோ? இந்தத் தர்ம சங்கடத்திற்கு என் செய்வது? முடியாதென்றால் என்னுயிரையும் ராஜ்யத்தையும் காத்த இவ் வீரர்கள் கோபங்கொண்டு செல்வார்கள். நான் உபகாரம் செய்தவர்களுக்கு அபகாரம் செய்த வனாவேன்! ஐயோ! இதற்கு நான் என்ன செய்வேன்? தெய்வமே கதி! ஆயினும் இவர்கள் நமது சபைக்காவது வரட்டும். பிறகு வேண்டிப்பார்ப்போம்.

ரா : நான் அப்பொழுதே சொன்னேனே! எதற்கும் பார்த் தலே நலம். இப்பொழுது பார்த்திரா என்ன நன்மை யாக முடிந்தது!

பௌ : ஐயா, அதெல்லாமிருக்கட்டும், பத்மாவதிதேவி செய் திருக்கும் பிரதிக்ஞையைத்தான் கூறியிருக்கிறேனே இப்பொழுது தமது தாயார் நீர்தான் வரம்போகிறீ ரெனவறிந்து மஹாராஜா சென்று கேட்கும்பொழுது இதற்கிசையச் செய்வதெப்படி? இவ் விஷயங்களெல் லாம் அறியாவிட்டால் பத்மாவதிதேவி இதற்கு ஒரு காலும் இசையார்கள்; இதற்கெற்கென்ன யுக்தி சொல்லுகிறீர் ?

ச : நாம் யாராவது சென்று பத்மாவதிதேவிக்குமாத்திரம் நடந்த வரலாற்றை அறிவித்தாலோ? முன்பே சிலர் சந்தேகங் கொண்டிருக்கிறார்கள், மஹாராஜா இதைக் குறித்து சந்தேகிக்காவிட்டாலும்.

ம : ஆம்! ஆம்! அதுதான் நல்லவழி; ராஜப்பிரியா, நீயே தகுந்தவனிதற்கு நீ அரண்மனைக்குள் ஒருவருமறியாத படி நமது சுரங்கத்தின் வழியாகப்பிரவேசித்து, விஜயா விடம் சென்று உண்மையைக்கூறி, அவளைக் கொண்டு மெல்ல என் தாயாருக்கு இவைகளையெல்லாம் கூறி, ஒருவேளை நான் தான் வருவேனெனச் சொல்லி, மஹாராஜர்வுடன் நாளைத் தினம் அந்தச்சேர

தேசத்துச் சிம்மாசனத்தின்மீது உட்கார இசையும்படிச் செய்யும் வண்ணம், நான் கட்டளையிட்டதாகச் சொல் தெரியுமா ?

ரா : ஆமாம், அதுதான் சரி! நான் நேரிற் சென்று கூறுவேனாயின், எல்லாம் வெளியாய்விடும் இப்பொழுதே!

ச : ஆனால் சீக்கிரம் புறப்பட்டுப் போம்.

[ராஜப்பிரியன் போகிறான்.]

பௌ : அரசே, இந்தச் சேவகர்களில் சிலர் நம்மை அடிக்கடி சந்தேகத்துடன் திரும்பித் திரும்பிப் பார்க்கிறார்கள். நாம் இனி இங்கிருப்பது நியாயமன்று; போவோம் வாரும். [மற்ற மூவரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



## நான்காம் காட்சி

இடம்—மஹாராஜாவின் சபை. காலம்—காலை.

இடையில் ஒரு திரையிடப்பட்ட சேர தேசத்துச் சிங்காதனத்தின் மீது ஒரு புறம் புருஷோத்தமராஜனும் மற்றொரு புறம், பத்மாவதியும் வீற்றிருக்கின்றனர்.

விஜயா பத்மாவதியின் அருகில் தாதியர் புடைசூழ் நிற்கிறாள்

குரு, ரணவீரகேது, மந்திரி பிரதானிகள் சபையில் உட்கார்ந்திருக்கின்றனர்.

அமிர்தகேசரி ஒருபுறமாக நிற்கிறான்.

கு: புருஷோத்தமா, இப்பொழுதாவது புத்தி வந்ததா? அப்பொழுதே எவ்வளவு நியாயம் கூறினேன், கேட்க மாட்டேனென்றனையல்லவா? என் சொற்படி அக்காலத்தில் நடந்திருப்பையாயின் இவ்வளவு கஷ்டமும் உனக்கு நேர்ந்திராதே! ஆயினும் நீயே உனது துர் நடத்தையையறிந்து திருந்தியமையால் ஜகதீசன் உன் மீது கிருபைகொண்டு, உன்னுயிரையும், உனது ராஜ்யத்தையும் முடிவில் காப்பாற்றியருளினார். இனியாவது அப்பொழுது அனுபவித்ததைக் கொண்டு திருந்துவாயாக! துர்நடத்தை எப்பொழுதும் துக்கத்திற்கே கொண்டுபோய்விடும்! நன்னடத்தை நலத்தையே தரும்.

பு: குரு மஹாராஜ்! இந்தப் பதினாறு வருடங்களாக எனக்குப் பயித்தியம் பிடித்திருந்தது இப்பொழுதான் என் கண்கள் விளங்கின தமதருளால்! இதுவரையில் தமக்கு நான் செய்த பிழைகளையெல்லாம் மன்னித் தருளவேண்டும்.

கு: சுகீபவ! இனிமேல் ஒரு குறைவுமின்றிச் சுகமாய் வாழ்வாயாக! உன் புத்திரனையும் நீ சீக்கிரம் பெறுவாய். உத்தம பத்தினியான பத்மாவதிக்கு நீ தீங்கிழைத்த காரணத்தால் தான் இவ்வளவு துயரம் உனக்கு நேர்ந்த தென நினை! அவளது மன்னிப்பைப் பெற்றமையால் இனி அத்துயரமெல்லாம் சீக்கிரம் எளிதில் நீங்கிவிடும், அஞ்சவேண்டாம். புருஷோத்தமா மனோஹரனைப் பற்றி ஒரு சேதியும் வரவில்லையோ?

பு: சுவாமி, சில தினங்களுக்குமுன் வந்த ஒற்றர்கள் மனோஹரன் மாத்திரம் தனியாக வடப்பிரதேசம் போய்விட்டதாகவும், சத்தியசீலரும், ராஜப்பிரியனும் மனோஹரனைத் தேடிக் காணாது மேற்கே நோக்கிச் சென்றதாகவும் கேள்விப்பட்டதை வந்து அறிவித்தனர். என் மைந்தனை இவ்வுலகில் காண்பேனென்னும் ஆசையை அன்றே விட்டுவிட்டேன்,

விகடன் வருகிறான்.

விக: மஹாராஜா, அவர்களெல்லோரும் முதல் வாயிலில் நின்று கொண்டு உள்ளே வரலாமா என்று கேட்டுவரச் சொன்னார்கள்.

பு: மந்திரிகளே, உங்களில் சிலர் சென்று அழைத்துவாருங்கள் மரியாதையுடன்.

[சில மந்திரிகள் பிரதானிகள் வெளியே போகின்றனர்.]

குரு மஹாராஜ், இப்பொழுது வருகிற வீரகேசரியென்னும் மஹாவீரனால்தான் நானும் என்நாடும் நிலைத்தது! இல்லாவிடின் நானும் மடிந்து என் ராஜ்யமும் அழிந்திருக்கவேண்டும். ஆகவே அவருக்குத் தக்க மரியாதை செய்யும் பொருட்டு இந்தச் சபைக்கு வரவழைத்திருக்கிறேன்.

கு: மிகவும் சந்தோஷம்! நமது ஆபத்துக் காலத்தில் உதவினவர்களை ஒருகாலும் மறக்கலாகாது அவர்களுக்குத் தக்க கைம்மாறு செய்வதே முறைமையாம்.

ர: மஹாராஜா, மனோஹரரோ நமது நாட்டை விட்டுப் விட்டார்; ஆகவே நமது நாட்டிற்கு எப்பொழுதும் அடிக்கடி சத்ரு பயம் நேர்ந்துகொண்டேயிருக்கும். ஆகவே இப்படிப்பட்ட சுத்த வீரரை நமது தேசத்திலேயே நிறுத்திக்கொள்வோமாயின் நமக்கு மிக்க நலம் ஆதலால் இந்த வீரகேசரிக்குச் சேனாதிபதிப்பட்டம் கட்டி இங்கேயே இருந்து விடும்படி செய்யலாகாதா தாய்?

பு: ஆம்! ஆம்! இது நல்லயோசனைதான் வந்தவுடன் நாம் எல்லோரும் சொல்லிப்பார்ப்போம், இதோ வருகிறார்கள்.

[ஜயபேரிகை முழங்குகிறது.]

மனோஹரன், சத்தியசீலர், ராஜப்பிரியன், பௌத்தாயனன் நால்வரும் முழுக்கவசமணிந்து முகத்தை மூடி மந்திரி பிரதானிகள் புடை சூழ, வருகின்றனர்

சபையோர்களெல்லாம் ஜய கோஷம் செய்கின்றனர்.

பு: வீரகேசரி! வாரும்! எனதுயிரைக் காத்த வீர சிங்கமே வாரும்! எமது நாட்டைக் காப்பாற்றிய வீரச் செல்வமே! வாரும்! தாம் எனக்கும் என் பிரஜைகளுக்கும் செய்த உதவிக்குத் தக்க கைம்மாறு செய்ய நான் அசக்தனாயிருக்கிறேன். ஆயினும் தாம் என்னால் கொடுக்கத் தக்க எதையாவது கேளும், தருகிறேன். இந் நாடு முழுவதையும் கேட்டபோதிலும் தருகிறேன்! எனதுயிரை வேண்டினும் தருகிறேன்! நீர் காத்தபடியால் அது உம்முடையதே!—உம்முடைய வேண்டுகோளின்படி நானும் என் பத்தினியுமாக, இதோ சிம்மாசனத்தின் மீது வீற்றிருக்கிறோம், இனி தாம் தடையின்றி கேட்டுப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

ம: [சிங்காதனத்தெதிரிற் போய் முழந்தாளிட்டுப் பணிகிறான்.]

பு: வீரகேசரி! இதென்ன? என் முன்பாக முழந்தாளிடுகிறீரே?

ம: மஹாராஜா, நான் இவ்வுலகில் எதை முக்கியமாகப் பெற விரும்பினேனோ அதைப் பெற்றேன். இனி எனக்கு வேறொன்றும் வேண்டியதில்லை!—அம்மணி!

[முக மூடியை எடுத்து]

நான் அன்று செய்த சபதத்தை நிறைவேற்றினேனன்றோ?

ப: (எழுந்தோடி மனோஹரனைக் கட்டியணைத்து) கண்ணே! நிறைவேற்றினை! நிறைவேற்றினை!

விஜ: பிராணநாதா!

(மனோஹரனைக் கட்டிக் கொள்ளுகிறாள்.)

எல்லோரும். மனோஹரர்! மனோஹரர்!

பு: (சிங்காதனத்தினின்றும் இழிந்து மனோஹரனைக் கட்டியணைத்து) நான் கனவு காணவில்லையே! இல்லை, இல்லை!—கண்ணே மனோஹரா! மனோஹரா! இன்றே உன்னைப் பெற்றேன் இன்றே உன்னைப் பெற்றேன்!

சத்தியசீலர், ராஜப்பிரியன், பௌத்தாயனன் மூவரும் தங்கள் தங்கள் முகமூடியைக்களைகின்றனர். சபையோ ரெல்லாம் சந்தோஷத்தால் ஆரவாரிக்கின்றனர் ]

சத்தியசீலரே! ராஜப்பிரியா! பௌத்தாயனா!— இதென்ன எனக்குப் பயித்தியம் பிடித்துப்போகும் போலிருக்கிறதே!—என்ன ஆச்சர்யம்!என்ன ஆச்சர்யம்! —மனோஹரா, நீயோ என்று உயிரைக்காப்பாற்றிய வீரகேசரி! ஆம், ஆம்! உன்னையன்றி வேறெந்தவீரன் அச்செய்கை செய்திருப்பான்? கண்ணே, நானுனக்குச் செய்த தீங்கிற்கெல்லாம் எனக்கென்ன கைம்மாறு நீ செய்தனை, என்ன கைம்மாறு செய்தனை!—சத்திய சீலரே! அப்பொழுதே நீங்களின்னாரென ஏன் எனக்குக் கூறியிருக்கலாகாது?-ராஜப்பிரியா! நீயாவது என்னிடம் கூறியிருக்கலாகாதா ?

விஜ : மாமா, நான் அப்பொழுதே சொன்னேனே கேட்டீர்களா? எப்படியும் பிராணநாதர்வந்து நமக்கு உதவி செய்வாரென்று சொல்லவில்லையா நான்? பார்த்தீரா மாமி! இறந்து விட்டார் இறந்து விட்டார் என்று வருந்திக்கொண்டிருந்தீர்களே! எனக்கு இப்பொழுது இறப்பதில்லையென வாக்களித்துவிட்டு இறப்பாரோ ?

ம. கண்ணே, உண்மையே ; உன் புத்தியைக் கேட்பானேன்

கு. புருஷோத்தமா, எல்லாம் சுபமாய் முடிந்தது உன் பூர்வ புண்ய வசத்தால், இனிச் சுகமாய் நீ மனைவி மைந்தனுடன் நீடூழி காலம் அரசு புரிவாயாக !

பு. சுவாமி, நான் இவ்வளவு சுகத்தைப் பெறத் தக்கவனல்லன் ஏதோ என் மனைவியாகிய கற்பிற்கரசி பத்மாவதியை நேரிற் காணப்பெற்றேன்! என் மைந்தனாகிய மனோஹரனும் வந்துசேர்ந்து விட்டான்! மந்திரிகளுக்கு நாயகம் போன்ற சத்தியசீலரும் உயிர் பிழைத்திருக்கப் பெற்றேன்! ராஜப்பிரியன் முதலிய எல்லோரும் என்னை அடைந்து விட்டனர். இனி இவ்வுலகில் நான் பெறத் தக்கதென்ன இருக்கிறது?

பு : ஈசன் அருள்!

## நாடகம் முடிந்தது

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 8 | விஜாயவை | விஜயாவை |
| 8 | 30 | தானும் | தாளம் |
| 17 | 29 | வரனும் | வரணும் |
| 102 | 13 | எட்டியாவது | எப்படியாவது |
| 104 | 22 | நாளில்லேயோ? | நானில்லேயோ? |
| 23 | 131 | அதர் | அவர் |
| 150 | 23 | முடிந்த! | முடிந்தது! |
| 156 | 8 | என்று | எனது |

